# கீழ்வேளூர் முருகன்பிள்ளைத்தமிழ்

ஆசிரியர்

**அந்தகக்கவிவீரராகவர் / கவிவீரராகவர்**





உரைவிளக்கம்

**குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்**

**வித்துவான். க. கதிரேசன் எம். ஏ ; பிஎட்**

பூவாளூர் 621712

அலைபேசி 09865193754

# தோரணவாயில்

நாகை – திருவாரூர் செல்லும் வழியில் உள்ள இக்கீழ்வேளூர்த் திருத்தலத்தினை ( இன்று இவ்வூர் கீவளூர் எனப் பெறுகிறது ) திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகிய அருளாளர் இருவரும் போற்றிப்பரவிப் பாடியுள்ளனர். பிறரது உலா, பிள்ளைத்தமிழ் முதலிய இலக்கியங்க உள.

இத்திருக்கோயில் "எண்தோள் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்த" கோச்செங்கட்சோழனால் கட்டப்பெற்ற மாடக்கோயில்களுள் ஒன்று. இங்கு எழுந்தருளி அருள்பாலிக்கும் பெருமான் அருள்தரு வனமுலை நாயகி உடனாய கேடிலியப்பர். இத்திருக்கோயிலில் முருகப்பெருமான், என்றும் இளையாய் அழகியாய் என்று போற்றப்பெறும் திருக்கோலமுடைய அருள்தரு பாலசுப்பிரமணியர்; வடதிசைநோக்கி ஒருதிருமுகமும் நான்கு திருக்கரங்களுடனும் எழுந்தருளியுள்ளார். பாலசுப்பிரமணியராதலின் இருபுற அம்மையர் கிடையாது.

தமிழ் த்தாத்தா டாக்டர் உ. வே, சா அவர்களின் நூல்நிலையத்தில; மூலம் குறிப்புரையுடன் இருந்த இந்நூலினை அனைவரும் படித்துஇன்புற்று முருகன் அருள்பெறும்வகையில் பேரீடுபாட்டுடன் வெளிவரச்செய்தவர்கள் திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் 21 ஆவது அதிபர் வணக்கத்திற்குரிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் ஆவார்கள். இவர்களின் முயற்சியால் 1985 ஆம் ஆண்டில் வெளிவந்த இந்நூலுக்கு உரைவிளக்கம் எழுதும் நல்வாய்ப்பினை அருளியுள்ள திருவருளை வணங்கி மகிழ்கிறேன்.

இந்நூலாசிரியர் அந்தகக்கவி வீரராகவர் என்றும், கவி வீரராகவர் என்றும் இருவேறு கருத்துகள் உள. நூலுக்குச் சாற்றுக்கவி வழங்கியுள்ள கவிச்சுவை நுகரும் அருள்மொழியரசு என்று போற்றப்பெற்ற திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள்

கீழ்வேளூர்க் கந்தக் கிருபா கரனுக்குத்
தாழ்வில்லாப் பிள்ளைத் தமிழ்தந்தான் - ஏழ்பார்
புகழ்அந்த கக்கவி வீரப் புலவன்
இகபரமும் எய்தும் இனிது"

என்றவெண்பாவில் இந்நூலின் ஆசிரியர் அந்தகக்கவி வீரராகவர் என்று குறிக்கிறார்.

ஆனால் சேயூர் முருகன் பிள்ளைத்தமிழின் ஆசிரியர் அந்தக்கவி வீரராகவர் வைத்த பருவவைப்புமுறைக்கும், இப்பிள்ளைத்தமிழில் உள்ள பருவவைப்பு முறைக்கும் வேறுபாடு உள்ளமையால் இப்பிள்ளைத்தமிழ்ஆசிரியர், 16 ஆம் நூற்றாண்டிற்-குரியவராகிய அந்தகக்கவி வீரராகவர் அல்லர். இவரின் மாதாமகரும் - தாயைப்பெற்ற பாட்டனும் - 17 ஆம்நூற்றாண்டினரும் ஆகிய கவிவீரராகவராக இருக்கலாம் என்பார் ஆய்வாளர் சு. பாலசாரநாதன்.

காலஆய்வு வேறுபட்டதாயினும், அருமையான இந்நூல் வெளிவர அருள்பாலித்த திருவருளைப்போற்றி, வழக்கம்போல் சந்திபிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, விளக்கம், இலக்கணக்குறிப்பு ஆகியவற்றுடன் அடியேன் எழுதியுள்ள இந்நூலினைச் சுவைப்போம்

( இந்நூலின் மூலசுவடியில் சிதிலமான இடங்களைத் அச்சில்வந்த நூலில்இட்டுள்ளவாறு தொடர்புள்ளிகள் இட்டுக்காட்டியுள்ளேன் )

அன்புடன்,
குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப் புலவர்
வித்துவான் **க. கதிரேசன்** எம்.ஏ; பிஎட்
பூவாளூர். 621712. அலைபேசி: 09865193754

திருச்சிற்றம்பலம்

உ

## கீழ்வேளூர் முருகன் பிள்ளைத்தமிழ்

### காப்பு

பொன்னுலகு மின்உலவு முகில்பொழியும் அகிலமும்
பூங்கமல மலரோனும்மென்
பூவைவண் ணத்துவண் ணத்துவனும் வச்சிரப்
புருகூதன் ஆதிஎவரும்
உன்னுபெரு வாழ்வுபெற இமயாச லத்துவளர்
உமைபாகன் முன்னம் உதவும்
உயர்வார ணத்துமுகன் அருவார ணக்கடவுள்
உபயபத மலர்பணிகுவாம்
கன்னல்மொழி வன்னமுலை வாரணம் விரும்புறு
கரும்பினை அரும்புநகைசேர்
கானவர்கள் வானவர்க ளாகவரு வல்லிபடர்
கனகவர் கற்பதருவை
மன்னுகதிர் வேலவனை மாலவனை மாமன்என
மகிழ்கருணை மகமேருவை
வாலசுப் பிரமணிய சுவாமியைப் பரவும்என்
மதுரம்மிகு தமிழ்தழையவே.

**குறிப்புரை :** பொன்உலகு= வான் - வானில். மின்= மின்னல். முகில்= மேகம். அகிலம்= பூவுலகு. கமலமலரோன்= நான்முகன். மென்= மென்மையான. பூவை வண்ணத்து= காயாம்பூ நிறமுடைய. வண்ணத்துவன்= அழகன் - திருமால். புருகூதன்= தேவேந்திரன். உன்னு= நினைக்கும். இமயாசலம்= இமயமலை. உமைபாகன்= பார்வதி தேவியின் கணவன் - சிவபிரான். வாரணத்துமுகன்= யானைமுகன் - விநாயகர். அரு= மனம் வாக்குக்கு எட்டாத. வாரணக்கடவுள்= காக்கும்கடவுள். உபயபதம்= இருதிருவடிகள்.

கன்னல்= கரும்பு. வன்னம்= அழகு. வாரணம் விரும்புறு கரும்பினை= அயிராவதயானை வளர்த்த விரும்பத்தக்க கரும்பை - தெய்வயானை அம்மையை. அரும்பு நகை= முல்லையரும்பு ஒத்தபல். கானவர்கள்= வேடர்கள். தேவர்களாக வருவல்லி= தேவர்களாகுமாறு தோன்றிய வல்லிக்கொடிபோன்ற வள்ளிநாச்சியார். படர்= தழுவும். கனகவர் கற்பதரு= தேவர்கள் போற்றும் கற்பகமரம்.- முருகன்.மன்னுகதிர் = நிலைத்தபேரொளி. மாலவன்= திருமால். வால சுப்பிரமணிய சுவாமி= என்றும் இளையவனாய் உள்ள முருகப்பெருமான் - தலமூர்த்யின் திருப்பெயர். பரவும்= போற்றும். தமிழ்= பிள்ளைத்தமிழ் இலக்கியம்.

**பொழிப்புரை :** கரும்புபோன்ற இன்சொல்லுடன் அழகிய முலைகள் உடையவளும், தேவருலக அயிராவதயானையால் விரும்பி வளர்க்கப்பெற்ற கரும்புஒத்தவளும் ஆகிய தெய்வயானை யம்மையும்; முல்லையரும்பு போன்ற பற்களுடையவளும், தேவமகளாகிய தன்பிறப்பால் வேடர்களைத் தேவர்கள் ஆக்கிய வள்ளிநாச்சியாரும் ஆகிய கொடிகள் தழுவ உள்ளவனும்; தேவர்கள் போற்றும் கற்பகம் ஆனவனும்; பேரொளிகொண்ட வேலேந்தியவனும்; திருமாலைத் தன்மாமனாகக் கொண்டு மகிழ்பவனும்; கருணையே வடிவான பெரியமேருமலையாக உள்ளவனும் ஆகிய என்றும் இளையவனாகிய வாலசுப்பிரமணியப் பெருமானைப் போற்றும் என் இனிமைமிக்க பிள்ளைத்தமிழ் செழிப்புடன் அமையும்பொருட்டு;

வானில் மின்னலுடன் உலாவுகிற மேகம் பொழியும் மழையுடைய பூவுலகும், அழகிய தாமரைமலரில் வீற்றிருக்கும் நான்முகனும், மென்மையான நீலநிறமுடைய காயாம்பூ வண்ணமுடைய அழகனாகிய திருமாலும், வச்சிராயுதம் ஏந்திய தேவேந்திரனும், மற்றும் எத்தகையவரும் விரும்புகிற பெருவாழ்வு பெறும்பொருட்டு; இமயமலையில் தோன்றி வளர்ந்த பார்வதிதேவியைத் தன்இடப்பாகம் உடைய சிவபிரான் முன்னொருகாலத்தில் அருளிய உயர்ந்த யானைமுகமுடையவனாய், மனம் வாக்குக்கு எட்டாதவனாய் உள்ள கடவுளாகிய விநாயரின் இருதிருவடித்தாமரைகளையும் வணங்குவோம்.

**இலக்கணக்குறிப்பு** : அகிலமும், மலரோனும், வண்ணத்துவனும், புருகூதனாதி எவரும் - எண்ணும்மைகள். பதமலர் - உருவகம். கன்னல் மொழி, அரும்பு நகை - உவமைத்தொகைகள். வல்லி - உவமையாகுபெயர். கற்பதரு, கருணை மகமேரு - உருவகங்கள். தமிழ் - கருவிஆகுபெயர்.

## காப்புப் பருவம்

### 1. திருமால்

சீர்கொண்ட பகிரண்ட கோடிபல பெறுநிறை
செவ்விதள ராத உமையாள்
சீதமதி வேணிஅரன் இருவர்கண் மணியை
உயர்தேவர்பெரு வாழ்வை மலிதேன்
நீர்கொண்ட தண்டலைகள் எண்திசையும் மண்டிஎழில்
நிலவுகீழ் வேளூ ரில்வாழ்
நித்தியனை வாலசுப் பிரமணிய சுவாமிதனை
நிருமலனை இனிது காக்க
வார்கொண்ட செங்கமலை என்னுமின் னினைமருவி
மகிழ்கருணை மாரி பெய்து
மன்னுமூ வுலகெனும் கழனியிடை உயிர்என்ன
வருபெரும் பயிர்வ ளர்த்தே
ஏர்கொண்ட மார்பின்மணி பைந்துளவு தந்தஒளி
எனும்வான வில்லை மருவி
இயன்முல்லை மாதர்என வருதோகை ஓகையுற
எழில்பெற்ற நீல முகிலே. ( 1 )

**குறிப்புரை** : பகிரண்டம்= பேரண்டம். பலகோடிபெறு= பலவகை / பலகோடி உயிர்களை ஈன்ற. நிறைசெவ்வி= முழுமையான அழகு. வேணி= சடைமுடி. தேன் நீர் கொண்ட= தேனும் மேகமும் கொண்ட. தண்டலை= சோலை. நித்தியன்= என்றும் நிலைத்தவன் - அழிவற்றவன். நிருமலன்= மலம் இல்லாதவன்.

வார்= உயர்வு. செங்கமலை= திருமகள். மின்= ஒளி. மன்னு= பெருமைபொருந்திய. மூவுலகு= சுவர்க்கம் பூமி பாதாளம் ஆகிய உலகங்கள். கழனி= நன்செய் நிலம். ஏர்= அழகு. மணி= கவுத்துவமணி. பைந்துளவு= பசிய துளசிமாலை. முல்லை இயல்மாதர்= கற்புஎனும் குணமுடயவள். தோகை= மயிலாகிய திருமகள். ஓகை= மகிழ்ச்சி. எழில்பெற்ற நீலமுகில்= அழகுடன் விளங்கும் நீலநீறமேகம் ஆகிய திருமால்.

**பொழிப்புரை** : உயர்ந்த திருமகள் என்கிற ஒளியுடையவளைத் தன்மார்பில்தழுவி மகிழ்ந்து, கருணையாகிய மழைபொழிந்து பெருமைபொருந்திய சுவர்க்கம் பூமி பாதாளம் ஆகிய மூவுலகங்களாகிய நிலத்தில் உயிர்களாகிய பயிரினை வளர்த்தும், அழகுபொருந்திய தன்மார்பில் கவுத்துவமணியும் பசிய துளசிமாலையும் தந்த ஒளிஎன்னும் வானவில்லாகிய மாலையணிந்தும், கற்பெனும் குணமுடைய மயிலாம் திருமகள் மகிழவரும் அழகுடன் விளங்கும் நீலநிறமேகமாகிய திருமாலே!

பேரண்டத்தில் சிறப்புடைய பலவகை உயிர்களை ஈன்றும் தன்முழுமையான அழகுகுன்றாத உமையம்மை, குளிர்ச்சிதரும் நிலவைத் தன்சடைமுடியில் தரித்தசிவபிரான்ஆகிய இருவருக்கும் கண்ணின் பாவையாக விளங்குகிறவனை, தேவர்களின் உயர்ந்த சிறந்த வாழ்வாக உள்ளவனை, மிகஇனிய தேனும் மேகமும் கொண்ட சோலைகள் தனது எட்டுத்திசைகளிலும் செறிந்ததால் அழகு விளங்கும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ளவனை, அழிவில்லாதவனை, என்றும் இளமையுடைன் மலமில்லாதவனுமாகிய அருள்தரு பாலசுப்பிரமணியக் கடவுளை இனிது காத்தருள்வாயாக!

**விளக்கம்** : நிலத்தில் பயிர்வளர்க்க இன்றியமையாமுதல்தேவை நீர் ஆதலின் கருணை மாரியை முதலில் குறித்தார். சோலைகொண்ட இனிமைகளாவன குளிர்ச்சி, உயிர்வளி - பிராணவாயு, நறுமணம், பூ பிஞ்சு காய்கனிவகை, விலங்குகள் பறவைகளின் இன்குரல் முதலியன. சிவபிரானே முருகப்பிரான் ஆதலின் சிவபிரானுக்குரிய நித்தியம் நிருமலம் முதலியவற்றை முருகனுக்கும் கூறினார். அண்டகோடிபலபெற்றும் செவ்விதளராதவள் உமையவள் ;( " தழைந்துவிரி புவனம் தனிப்பூத்து அருள்ப

முத்த பொன்அம் கொடி " - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் பா.8.) அசுரகளிடம் அடிமைப்பட்டும் சிறைப்பட்டும் கிடந்த தேவர்களை மீட்டுத் தேவருலக வாழ்வளித்ததால் முருகப்பெருமானைத் " தேவர்ப்பெருவாழ்வு " என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : காக்க - வேண்டுதல்குறித்த வியங்கோள் வினைமுற்று

### 3. சிவபெருமான்

**( சந்தவிருத்தம் )**

பாலார் தேமொழி நீள்கரு ம்புயல்
போல்ஆர் மைக்குழல் பங்கரைக் கூர்த்திடு
பால்நாள் ஆரிரு ளாய்வளைந்(து) எழும்
ஆலா லத்(து)ஒளிர் கண்டரைச் சீர்பெறு
பாவான் மூவர்முன் நாளில்இ யம்பிய
தேவா ரப்பொருள் நம்பரைப் பாற்பொலி
பார்ஆ ஆரசம் ஆன இன்பம(து)
ஆனா அற்புத விம்பரைத் தேக்கிய
கீல்ஆல் ஆதிபன் ஆதி எண்திசை
ஆள்வார் சக்கரம் அங்கையில் சேர்த்தவர்
கேழ்ஆர் தாமரை மீ(து)இ ருந்திடு
வேதா மெய்த்தவர் அம்பரத் தீர்த்தர்கள்
கீழ்ஏழ் பாதள லோகர் அம்புவி
மேலோர் நித்தமும் அன்புவைத்(து) ஏத்திய
கீழ்வே ளூருறை யோக சுந்தர
வாழ்வாம் அட்சய லிங்கரைப் போற்றுதும்
நால்ஆ காரண நூல்மொ ழிந்(து)அருள்
கோமா னைச்சய துங்கனைப் பாட்டியல்
நானா பேதஇ ராக வண்(டு)இமிர்
தேன்நீ பத்தொடை மொய்ம்பனைப் பால்திகழ்
ஞானா காரவி லாச சம்ப்ரம
லீலா நற்பிர சங்கனைக் கார்த்திகை

நாண்மா னார்தரு பால்அ லர்ந்தசெவ்
வாயாரக்கொளும் மைந்தனைப் போர்த்தொழில்
மால்ஆர் சூரொடு நேர்எ திர்ந்(து)இகல்
வேலால் வெற்றிசெய் எந்தையைத் தேற்றம்இல்
மா(சு)ஆர் கானவ ராய்வ ரும்பல
மால்யா னைக்(கு)ஒரு சிங்கனைப் பாக்கிய
வான்நா டேகுடி யாக உம்பரை
யேதா பித்திடு நண்பனைச் சேட்செலும்
மாமே காரம்ந டாவி வந்தருள்
சீரார் பொற்(பு)உறு கந்தனைக் காக்கவே. (2)

**குறிப்புரை :** பால் ஆர்= பாலுடன் கலந்த. தே= தேன். புயல்= மேகம். மைக்குழல்= கருங்கூந்தல் கொண்ட உமையம்மை. பங்கரை= இடப்பாகம் கொண்ட சிவபிரானை. . கூர்த்து இடு= மிகுதியாக வைத்த. பால்நாள் இருள்= நள்ளிரவின் இருள். ஆய்= ஆக. ஆலாலம்= ஆலகால நஞ்சு. பாவால்= பாக்களால். மூவர்= திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் சுந்தரர். நம்பரை= சிவபிரானை. பார்=உலகில். ஆஆ= அதிசயமான. ரசமான இன்பமது= சுவையான இன்பங்களை. ஆனா= அளவின்றி. தேக்கிய= ஒருங்குசேர்த்த. இம்பரை= இவ்வுலகவரை. கீலால் ஆதிபன்= நுட்பமான அதிபதியும், ஆதி= மேலானவர் முதலிய. எண்திசை ஆழ்வார்= எண்திசைக்கடவுளர். சக்கரம் அங்கையில் சேர்த்தவர்= சக்கராயுதத்தைஅழகியகையில் பிடித்த திருமால். கேழ் ஆர்= ஒளிபொருந்திய. வேதா= பிரமன். மெய்த்தவர்= மெய்ஞ்ஞானிகள். அம்பரத் தீர்த்தர்கள்= உலகப்புனிதர்கள். மேலோர்= சான்றோர். கீழ் ஏழ்பாதாள லோகர்= கீழுள்ள ஏழுபாதாள உலகவர். அம்புவி மேலோர்= உலகில் வாழ்கிற மேலோர் அன்புவைத்து ஏத்திய பத்திமையுடன் வணங்கிய. யோகசுந்தர வாழ்வாம்= யோகநிலையில் வாழ்கிறவர்ஆகிய. அட்சய லிங்கர்= அருள்தரு அட்சயலிங்கப்பெருமான் ஆகிய சிவன்.

நால் ஆகரணநூல்= அறம் பொருள் இன்பம் வீடு என்றநால்வகையில் (மக்களை) ஏவும். செயதுங்கன்= வெற்றியில் தூயவன். பாட்டு இயல்= இசையுடன் ஒலிக்கும் . நானாவித ராகம்= பல்வகைக் பண். இமிர்= ஒலிக்கும். தேன் நீபம் தொடை= தேன்பொருந்திய கடம்பமலர்மாலை. மொய்ம்பன்= வலிமையுடையவன். பால்திகழ்= தகுதியான ஞானவடிவம். விலாசம்= அழகு. சம்பிரமம்= களிப்பு. லீலா= விளையாட்டில். நற்பிரசங்கன்= நல்லதெளிவுஉடையவன். கார்த்திகை நாள் மானார்= கார்த்திகை விண்மீன்களாகிய பெண்கள். தருபால் அலர்ந்த செவ்வாய் ஆரக்கொளு மைந்தன்= கொடுத்த பாலினை மலர்ந்த செவ்வாயால் மிகுதியாக உட்கொண்ட வலிமை வாய்ந்தவன். மால் ஆர் இகல்= மயக்கம் பொருந்திய பகைமை. சூர்= சூரபத்மன். நேர் எதிர்ந்து= நேரே போரிட்டு. தோற்றம் இல்= அழகில்லாத. மாசு ஆர் கானவர்= கருநிறம் பொருந்திய வேடர். பல மால்யானை= பல பெரிய யானைகள். சிங்கன்= சிங்கமாக விளங்குகிறவன். பாக்கியம்= ஆகூழ் - நற்பேறு. குடியாக உம்பரையே தாபித்திடு நண்பன். உம்பர்= தேவர். தாபித்திடு= நிலைப்படுத்திய. சேட்செலும்= வானில் பறந்துசெல்லும். மா மகாரம்= அழகிய மயில்.

**பொழிப்புரை :** அறம்பொருள் இன்பம் வீடுபற்றியநூல்களை அருளிய அரசனை; வெற்றியில் தூயவனை; இசையுடன் ஒலிக்கும் பலவகைப் பண்களைப் பாடும் வண்டுகள் மொய்க்கும் தேன்பொருந்திய கடம்பமலர்மாலை அணிந்த வலிமையானவனை; தகுதியான ஞானவடிவும், அழகும், களிப்பும், பல்வகைத் திருவிளையாடல்களுடன் நல்ல தெளிவும் உடையவனை; விண்மீன்களாகிய கார்த்திகைப்பெண்டிர் தந்த பாலினைச் செவ்வாய்திறந்து மிகக்கொண்ட வலிமையானவனை; மயக்கம்பொருந்திய பகைமையுடைய சூரபன்மனுடன் நேருக்குநேர் போரிட்டு வேலினால் வெற்றி விளைத்த எம்தந்தையை; அழகில்லாதவரும் கருநிறத்தவரும் ஆகிய பெரியயானைகளாகிய வேடர்களுக்கு ஒப்பற்ற சிங்கமானவனை; நற்பேற்றுக்குரிய

வானுலகினைத் தேவர்களுக்குரியதாக நிலைப்படுத்திய நண்பனை; வானில் பறந்துசெல்லும் அழகிய மயிலை ஊர்தியாக நடத்திவந்து அருளும் சிறப்புப்பொருந்திய அழகிய கந்தபெருமானைக் காக்கும்பொருட்டு;

பாலுடன் தேன்கலந்தது போன்ற சொல்லும், நீண்ட கருமையான மேகம்ஒத்தகுழலும் உடைய அம்மையைத்தன் இடப்பாகம் கொண்டவரும்; மிகுதியாகக் கருத்த நள்ளிருள்போல் எழுந்த ஆலகால நஞ்சுஒளிரும் திருக்கழுத்தரும்; சிறப்புவாய்ந்த பாக்களால் தேவாரமூவர் முன்னாளில் இசைத்த தேவாரப் பெரும்பொருள் ஆகியவரும்; உலகில் அதிசயமான சுவையான இன்பங்களைக் குவித்தவரும்; நுட்பமான அதிபதியும்; எட்டுத்திசை ஆள்வோர், சக்கரப்படையை வலதுகையில் ஏந்திய திருமால், ஒளிபொருந்திய தாமரைமலரிலிருக்கும் பிரமன், ஞானத்தவராக உலகில் வாழும் புனிதர்கள், கீழ்உள்ளஏழுபாதாளஉலகோர், அழகிய இவ்உலகில் வாழும்சான்றோர் முதலியோர் பத்தியுடன் வணங்கும் கீழ்வேளூர் யோகசுந்தர வாழ்வினர் ஆகிய அருள்தரு அட்சயலிங்கப் பெருமானைப் போற்றுவோம்.

**விளக்கம் :** சமயகுரவர் மூவர் அருளிய திருமுறைகளுக்கு முறையே திருக்கடைக்காப்பு, தேவாரம், திருப்பாட்டு என்று வழங்கப்பெறுவதாயினும், இரட்டைபுலவர்கள், முதன்மூவர் அருளியவற்றைத் தேவாரமென்றே குறிப்பிடுவதை

" மூவாத பேரன்பின் மூவர் முதலிகளும்
தேவாரம் செய்த திருப்பாட்டு "

என்பதாலறியலாம். சைவஎல்லப்ப நாவலர், இரட்டைபுலவர்களை வழிமொழிந்து,மூவர்திருமுறைகளைத் தேவாரம் என்றும், எட்டாம் திருமுறையைத் திருவாசகம் என்று தனியே குறிப்பிடுகிறார். அது,

" வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாளெம்உயிர்த்துணையே "

என்பதாகும். இப்பிள்ளைத் தமிழின் ஆசிரியர், மூவர்முதலிகளின் திருமுறைகளையே தேவாரம் என்று குறித்தார்.

எண்திசைஆள்வார் : கிழக்கு, தென்கிழக்கு, தெற்கு, தென்மேற்கு, மேற்கு வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு ஆகிய எண்திசை ஆள்வார்கள் - இறைவர்கள் முறையே; இந்திரன், அக்கினி, இயமன், நிருதி,வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போர்.

கீழ்வேளூர்ச் சிவபிரான் அருள்தரு வனமுலைநாயகி உடனாய அட்சயநாதர் \ கேடிலியப்பர்.

கார்த்திகைப் பெண்டிர் குழவிமுருகனுக்குப் பாலூட்டியது :

" சரவணத்தில் கொண்டு உய்ப்பத், திருவாய் முன்னர்
அறுமீன் முலையுண்டு, அழுது விளையாடி " ( கந்தர் கலிவெண்பா )

**இலக்கணக்குறிப்பு :** பாலார் தேமொழி - அன்மொழித்தொகை. கரும்புயல் - பண்புத்தொகை. மூவர், எண்திசை ஆள்வார், நாலாகாரண நூல் - தொகைக்குறிப்புகள். யானைக்கு ஒரு சிங்கன் - உருவகம்.

## உமையவள்

வலம்செய்(து) உளத்(து)அருள் பெறுபரி பாகர்கள்
மாசறு பரசுகம் மருவக்கொ டுத்தவள்
வணங்கு சிரத்தினர் மகபதி நான்முகன்
மால்பதம் உறஅருள் வரத கரத்தினள்
வயங்கு வனக்கிளி புரிதவம் யாதுகொல்
வாஎன மதுரநன் மொழியைப்ப யிற்றுவள்
மகிழ்ந்(து)அவ னித்தொகை பெறும்ஒரு தாயென
வாழ்(வு)அருள் கருணைமெய் வடி(வு)உற்ற சிற்பரை
இலங்குவி ழிக்கயல் குழைஅணி காதினில்
ஏதம்இல் குவளையின் உலவப் படைத்தவள்
எழுந்தம திக்(கு)இணை இதுஎன மான்மதம்
ஏர்பெற எழுதிய திலகத்து நெற்றியள்
இருண்ட களிற்றிடை மதன்அலர் வாளிகள்
ஏயும்அ(து) எனமலர் அளகத்தில் வைத்தவள்

இலந்தை வனத்(து)உறை வனமுலை நாயகி
ஈசுவரி பதமலர் இணையைப் பழிச்சுதும்
குலம்கொள் தயித்திய இருள்கெட வேல்இடு
கோழியார் வனமக னைப்பொருந்திடு
குரும்பை முலைத்துணை வனிதை புலோமசை கோமகள்
தழுவிஅணை சுகத்தனை குழைந்த கருத்துடன்
வழிபடு சீரியர் கூறிய முறைதரு ***********
விலங்கு திரைக்கடல் புகும்ஒரு சூரனை
வேல்கொடு பிளவு செய்த தருவனைச்
சகத்தினில் வியந்த விரதத் தைநிலவு
பராசரன் மேவரு சிறுவர்கள் பணிஅற் புதத்தனை
விளங்கும் இசைத்துறை மகதியின் நாரதன்
வேள்வியில் எழும்தகர் நடவச் சமர்த்தனை
விளம்பு சமர்க்(கு) ஒருகரையென லாநவ
வீரர்கள் முனிவரு குகனைப் புரக்கவே. (3

(*********** **முறிப்புச் சீர்கள் நூலில் இல்லை**)

**குறிப்புரை :** வலம்செய்து= வலமாகச்சுற்றிவந்து. பரிபாகர்கள்= பக்குவம் உற்றஅடியவர். பரசுகம்= வீடுபேற்றின்பம். மருவ= அடைய. மகபதி= தேவேந்திரன். பதம்= நிலை. அருள்வரதம்= வழங்கும் மேலான. வனக்கிளி= அழகியகிளி. பயிற்றுவள்= கற்பிப்பவள் அவனித்தொகை= உலகஉயிர்க்குலம். மெய்வடிவு= ஞானவடிவம். சிற்பரை= பராசத்தி. குழை= நெருங்கி உறவாடும். குவளை= குவளைமலர். மான்மதம்=கத்தூரி ஏர்= அழகு. களிற்றிடை= வண்டுகளிடையே. மதன் அலர் வாளிகள்= மன்மதனின் மலர்அம்புகள். அளகம்= கூந்தல். இலந்தைவனம்= கீழ்வேளூர். ஈசுவரி= உமையவள் - அருள்தரு வனமுலையம்மை. பதமலர் இணை= இருதிருவடித் தாமரை. பழிச்சுதும்= போற்றுவோம்

தயித்திய இருள்= அசுரராகிய இருள். கோழியார்= சேவல்கொடியுடைய முருகன். வனமகனை= அழகியமகனை. பொருந்திடு= தழுவும். வனிதை= மகள். புலோமசை= இந்திராணி. குழைந்த= உருகிய. கூறியமுறைதரு தருவனை= வேண்டிக்கொண்டவாறு அருளும் கற்பகத்தை. பரப்பிய= அகன்ற. சூரன்= சூரபதுமன். சூரனை தருவனை என்று கூட்டுக. சகம்= உலகம். பராசரன்= பராசரமுனிவன். மேவரு= மிகவும் விரும்பும். மகதியின் நாரதன்= மகதியாழ் வாசிக்கும் நாரதமுனிவர். தகர் நடவ= ஆட்டுக்கிடாயை நடத்த. சமர்க்கு ஒருகரை= போரின் ஒப்பற்ற எல்லை - முடிவு. நவவீரர்கள்= வீரவாகுத்தேவர் முதலிய ஒன்பான் வீரர்கள். முனிவரு= விரும்பும்.

**பொழிப்புரை :** அசுரர் குலமாகிய இருள்அழிய, வேலினைஏவிய அழகனாகிய முருகப்பிரானைத் தழுவும் இரண்டு தென்னங்குரும்பை போன்ற முலைகளுடையவளும், இந்திராணியின் தலைமகளும்ஆகிய தெய்வயானையம்மையைத் தழுவும் இன்பமுடையவனை, உருகிய மனத்துடன் வழிபடும் சிறந்த அடியவர் வேண்டிக்கொண்ட முறைப்படி அருளும் கற்பகத்தை, அலைகளுடைய அகன்ற கடலில் மாமரமாகப் புகுந்த சூரனைத் தன்வேலால் பிளந்தவனை, உலகில் வியக்கத்தக்க விரதத்துடன் வாழ்ந்த பராசரமுனிவர் மிகவும் விரும்பும் அவர்மக்களால் வணங்கப்பெற்ற அற்புதனை, மகதியாழ்இசைப்பதில் சிறந்த நாரதமுனிவரின் வேள்வியில் எழுந்த ஆட்டுக்கடாவில் ஏறிச்செலுத்த வல்லவனை, சிறந்தபோரின் எல்லையை - முடிவைச் செய்யும் வீரவாகுத்தேவர் முதலான ஒன்பான் வீரர்கள் விரும்பும் குகனைக் காக்கும்பொருட்டு;

தன்னை வலமாகச் சுற்றிவந்து தனது அருளைப்பெறும் மலபரிபாகம் பெற்றவர்கள் குற்றமற்ற மேலான வீடுபேறு அடையக் கொடுக்கின்றவளும், தன்னைத் தலைதாழ்த்தி வணங்கியவர்களுக்கு; இந்திரன், நான்முகன், திருமால் ஆகியவர்களின் நிலையை அருள்கிற மேலான கைகளுடையவளும், அழகிய கிளி அவ்வழகுபெறச் செய்த தவம்எத்தகையது! என்று அதனை அருகில்வாஎன்று அழைத்து அதற்கு இனிய நன்மொழி கற்பிக்கிறவளும், மிகமகிழ்ந்து உயிர்க்குலம் அனைத்தையும் பெற்ற ஒப்பற்ற தாய் என்னுமாறு அவற்றுக்கு நல்வாழ்வு அருளும் கருணை வடிவான ஞானவடிவு கொண்ட பராசத்தியும், கருணை விளங்கும் கண்களாகிய கெண்டைமீன்கள் நெருங்கிஉறவாடும் அழகியகாதில் குற்றமில்லாத குவளைமலர் அணிந்தவளும், மேலெழுந்த முழுநிலவை ஒத்ததுஇது என்னுமாறு கத்தூரிச்சாந்தினை அழகுற வைத்தநெற்றியுடையவளும், கருமையாகச்சூழ்ந்த வண்டுகளிடையே மன்மதனது அம்புகள்

ஒத்தமலர்கள் சூடியவளும், கீழ்வேளூர்க்காட்டில் எழுந்தருளியுள்ளவளும், அழகிய கொங்கைகளுடைய தலைவியும் ஆகிய உமையம்மையை - அருள்தரு வனமுலை அம்மையைப் போற்றுவோம்.

**விளக்கம் :** நாரதர் வேள்வியில் தோன்றிய ஆட்டுக்கிடாவில் ஏறிநடத்தியது :

" மருப்பாயும் தார்வீரவாகு - நெருப்பில் உதித்து
அங்கண் புவனம் அனைத்தும் அழித்து உலவும்
செங்கண் கிடாய்அதனைச் சென்று கொணர்ந்து - எம்கோன்
விடுக்குதிஎன்று உய்ப்ப அதன்மீது இவர்ந்து எண்திக்கும்
நடத்தி விளையாடும் நாதா " ( கந்தர்கலி வெண்பா கண்ணி 88- 90 )

வீரவாகு முதலிய ஒன்பதின்மர் : வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேசுவரர், வீரபுரந்தரர், வீராக்ஷரர், வீரமார்த்தாண்டர், வீராந்தகர், வீரதீரர்.

மகிழ்ந்து அவனித்தொகைபெறும் ஒருதாய்உமையவள்

:" முன்பு உலகுஈன்றமுகிழ்முலைக்கன்னி " (சிதம்பரச் செய்யுட்கோவை. 31)

குடும்பத்தலைவி, தன் குழந்தைகளுள் முழுநலமுடன் உள்ள குழந்தைக்குச் சுவையான உணவுதரும் அவளே, நோய்வாய்ப்பட்ட குழந்தைக்கு அந்நோய் தீர்வதற்குரிய மருந்துடன் தக்க உணவளிப்பாள். அதுபோல அண்டம் ஈன்ற உமையவள், மலபரிபாகம் பெற்ற உயிர்களுக்குத் தானே" அருட்சத்தியாய் - அருளாற்றலாய் " இருந்து அவற்றுக்கு வீட்டின்பம் அருள்வாள். மலபரிபாகம் பெறவேண்டிய உயிர்கள் அதனைஅடையும்வரை அவளே " திரோதான சத்தியாய் - மறைப்பாற்றலாய் " இருந்து பிறப்பு அருள்வாள். அவ்வுயிர்கள் மலபரிபாகம் அடையும்வரை பிறப்புகள் தொடரும். மலபரிபாகமுற்ற உயிர்களுக்கு சிற்பரையாகிய இவ்வன்னை அருளாற்றலாக - அருட்சத்தியாக " இருந்து வீடுபேற்றின்பம் வழங்குவதை மட்டும்

" மகிழ்ந்து அவனித்தொகை பெறும்ஒரு தாய்என
வாழ்வுஅருள் கருணை மெய்வடிவுற்ற சிற்பரை " என்றபகுதி குறிக்கிறது.

மதன் வாளிகள் - மன்மதனின் அம்புகள்: தாமரை, மா, முல்லை, குவளை, பிண்டி, என்பன.

அம்மையின் திருக்கரத்தில் கிளி :

" நம்கழல் அடுத்தவர்கள் நன்மை இதுபோலத்
தங்குவர்கள் என்றுஉழை தரித்தவரோடு ஒப்பப்,
பைங்கிளியை அங்கைகொடு பண்உரை பயிற்றும்,
குங்கும சவுந்தரிதன் கோலம்நினை வாமால் "

( கவிராட்சச கச்சியப்ப முனிவரின் பூவாளூர்ப் புராணம். 4. )

**இலக்கணக்குறிப்பு :** மகபதி நான்முகன் மால் - எண்ணும்மைத்தொகைகள். விழிக்கயல், பதமலர், தயித்திய இருள் - உருவகங்கள்.. புரக்கவே - ஏகாரம் ஈற்றசை.

### 4. விநாயகர்

உரைசெய்மறை என்னஇயல் பாரதக் கதையினைஓர்
உலவைகொடு பொன்னின்உயர் மேருவெற்(பு)
உறஎழுதும் ஆனையைப் பார்ப்பதி
பரமசிவன் முன்உதவு பாலனைப் புயல்அணவு
பதரிவனம் மன்னுகண நாதமெய்க்
கணபதியை ஆர்வம்வைத்(து) ஏத்துதும்
விரவும்எழில் அன்னநடை மேவுபொற் கலசமுலை
விசயஅயில் அன்னவிழி மோகனக்
குறவனிதை பாகனைத் தோற்றிய
விரவிஒளி மின்னுகதிர் வேலனைப் பணியும்அவர்
இனியகதி நண்ணஅருள் வாலசுப்
பிரமணிய சுவாமியைக் காக்கவே ( 4 )

**குறிப்புரை :** உரைசெய்= புகழப்பெறும். என்ன= போல. உலவை= தந்தம். பொன்னின் உயர்= பொன்போல் சிறந்த. உற= பொருந்த. ஆனை= ஆனைமுக விநாயகர். புயல் அணவு= மேகம் தவழும்..

பதரிவனம்= பதரிவனம் என்ற பெயருடைய காட்டில். கண நாத= பூதகணங்களுக்குத் தலைவனாகிய. மெய்க்கணபதி= ஞானவடிவான விநாயகர்.

எழில்விரவு= அழகுகலந்த. மேவு= பொருந்திய. விசய அயில்= வெற்றிவேல். அன்ன= போன்ற. மோகனம்= ஆசை. குறவனிதை= வள்ளிநாயகி. பாகன்= பக்கத்தில் உடையவன். ஒளிவிரவி மின்னுகதிர் தோற்றிய= ஒளியுடன் கலந்து மின்னும் கதிர்விடும். இனியகதி= வீடுபேறு.

**பொழிப்புரை :** அழகு கலந்த அன்னத்தின்நடையும், அழகிய குடமாகப்பொருந்திய முலைகளும், வெற்றிபொருந்திய வேல்போன்ற விழிகள்கொண்டவளும், அடியவர்க்கு அருள்வதில் ஆசையளும் ஆகிய வள்ளிநாயகியைத் தன்பக்கத்தில் உடையவனும், ஒளியுடன்கலந்து மின்னும்வேல் ஏந்தியவனும், தன்னை வணங்குகிறவர்கள் வீடுபேறுபெற அருள்கிறவனும் ஆகிய என்றும்இளைய சுப்பிரமணியப் பெருமானக் காக்கும்பொருட்டு,

புகழப்பெறும் மறைபோன்று விளங்கும் பாரதக்கதையைத் தனது ஒப்பற்ற / ஒற்றைத்தந்தத்தால் பொன்போல் சிறந்த மேருமலையில் எழுதிய ஆனைமுகத்து விநாயகனை, பார்வதிதேவியும் பரமசிவனும் முற்காலத்தில் அருளிய என்றும் இளையவனும், மேகம்தவழும் பதரிக்காட்டில்பெருமைபொருந்தியவனும் ஆகிய பூதகணத்தலைவனாம் ஞானகணபதியைப் போற்றுவோம்.

**விளக்கம் :** மேருவில் விநாயகர் தந்தத்தால் மாபாரதம் எழுதுயது :

" நீடாழி உலகத்து மறைநாலொடு ஐந்துஎன்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபார தம்சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாக அம்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதுபி ரானைப் பணிந்துஅன்பு கூர்வாம்அரோ " ( வில்லிபரதம். 1 )

பார்ப்பதி பரமசிவன் முன் உதவுபாலன் :

" ஐந்து கரத்தனை ஆனைமு கத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
**நந்தி மகன்தனை** ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்துஅடி போற்றுகின் றேனே. " ( திருமந்திரம் .1 )

" பிடியதன் உருஉமை கொளமிகு கடியது
வடிகொடு தனதுஅடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலம்உறை இறையே. "( திருமுறை. திருவலிவலம் )

( என்ற பாடல்கருத்து இறைநிலைக்குப் பொருந்தாதது என்பர் ஆய்வர். எனவே அது இடைச்செருகல் ஆகலாம் என்றுகருதுவர். )

5. **திருமகள்**

அகலம் ஆகப் பொன்படைத்தார்
அவனி புரப்பார் பகைதுரப்பார்
அழியாப் புகழும் பெறுவர்என
அறிவிப் பதற்குப் பரந்தாமன்
நிகழும் மார்பில் வீற்றிருந்து
நினைத்த எவையும் கொடுத்தருளி
நிறையும் உரையும் பேரொளியும்
நிலவு பொன்னைப் பணிகுவாம்
சகல நூலும் தருவானைச்
சைவ சமய பூஷணனைத்
தருவா னவர்தம் சிறைவிடுத்த
தனிச்சே வகனை மயில்குகனை
புகலும் இலஞ்சி மலர்ப்பசுந்தேன்
பொழியும் வளம்சேர் இலந்தைவனப்
புனிதன் மகனைச் சரவணப்பூம்

பொய்கைக்(கு) அரசைப் புரக்கவே. ( 5 )

**குறிப்புரை :** அகலம்= மார்பு. ஆக= முழுவதும். பொன் படைத்தார்= திருமகளை அமைத்துக் கொண்டவர். அவனி= உலகம். துரப்பார்= அழிப்பவர். பரந்தாமன்= திருமால். நிகழும்= ஒளிரும். நிறையும் உரை= மிக்கபுகழ். நிலவு= விளங்கும்.

நூல்= நூற்கருத்து. பூஷணன்= பூசிக்கப்பெறுகிறவன். தரு= கற்பகமரம். தனி= ஒப்பற்ற. சேவகன்= வீரன். புகலும்= போற்றிக்கூறப்பெறும். இலஞ்சி= குளம். பசுந்தேன்= புதுத்தேன்.

**பொழிப்புரை :** அனைத்து நூல்கருத்துகளையும் தருகிறவனும், சைவசமயத்தவரால் பூசிக்கப்பெறுகிறவனும், கற்பகச்சோலையுடைய தேவர்களை அசுரர்சிறையிலிருந்து விடுவித்த ஒப்பற்ற வீரனும், மயிலேறும் பெருமானும், போற்றிக்கூறப்பெறும் குளங்களின் தாமரைமலர்கள் புதுத்தேனைப் பொழியும் வளம்வாய்ந்த இலஞ்சிவனமாகிய கீழ்வேளூர் அருதரு கேடிலியப்பராகிய சிவபிரானின் மகனும், அழகிய சரவணப்பொய்கைக்கு உரியஅரசனும் ஆகிய வாலசுப்பிரமணியப் பெருமானைக்காக்கும்பொருட்டு;

மார்பு முழுவதும் திருமகளை அமைத்துக்கொண்டவரும், உலகைக்காக்கின்றவரும், பகைவரை அழிப்பவரும், அழியாத புகழ்பெறுகின்றவரும் திருமாலேயாவர் என்று அறிவிப்பதற்காக அவரது மார்பில் வீற்றிருந்து அவர் நினைத்த அனைத்தையும் கொடுத்து, அதன்மூலம் மிக்கபுகழும் ஒளியும் கொண்டு விளங்கும்திருமகளை வணங்குவோம்.

**விளக்கம் :** திருமகள் ஒருவர்நினைத்த அனைத்தையும் தருகிறவள் :

" முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும் " ( திருக்கோவையார் )

" வடுவிலா வையத்து மன்னிய மூன்றில்
நடுவணது எய்த இருதலையும் எய்தும் " ( நாலடியார் )

**இலக்கணக்குறிப்பு :** படைத்தார், புரப்பார் , துரப்பார் - தருவானை, பூஷணனை, சேவகனை, - வினையாலணையும் பெயர்கள்.

### 6. கலைமகள்

மந்தரம்ஓர் மத்தாக அந்தரத்(து) இந்துஒரு
மதலையாய் விதலைஅறியா
வாசுகியை நேசம்உறு நாண்எனச் சேண்அமரர்
வைத்துவரு வித்(து)அமுதம்
தந்தசுவை கைப்(பு)என்று மெய்ப்புலவர் செப்பும்வகை
சதுரநவ ரசகோமளத்
தண்எனக் கவிச்செல்வம் நல்குபா ரதிஉகள
சரணதா மரைபணிகுவாம்
இந்திரன்முதல் வானவர்கள் நயனமும் தானவர்கள்
ஏலும்மட மாதர்விழியும்
இலகும்வலம் ஆடஇகல் நிசாசரர்தம் விழியும்எழில்
இனியசுரர் தினமும்மகிழும்
அம்தண்மொழி மடமாதர் விழியும்இடம் ஆடஓர்
அயில்வேல் பிடித்தகுகனை
ஆறுமலர் முகனைஅருள் பதரிவன அரன்மகனை
ஆதியைக் காக்கஎன்றே. ( 6 )

**குறிப்புரை :** மந்தரம்= மந்தரமலை. அந்தரம்= வானம். இந்து= நிலா. மதலை= குழந்தை. விதலை= நடுக்கம். நேசம்= பொருத்தம். நாண்= கயிறு. சேண்= வானுலகம். கைப்பு= கசப்பு. மெய்ப்புலவர்= அறிவுடைய புலவர்கள். சதுர நவரச கோமளம் தண்கவிதை= சாமர்த்தியமும் ஒன்பான் சுவைகளும் அழகும் பெற்ற அறம்சார்ந்த கவிதை. பாரதி= கலைமகள். உகள சரணம்= இரண்டு திருவடி.

நயனம்= கண்கள். தானவர்கள்= வித்தியாதரர். ஏலும்= கூடும் - புணரும். வலவிழி ஆட= வலக்கண் துடிக்க. இகல் = பகைமை. நிசாசரர்= அசுரர். தினமும் மகிழும் இனியஅம்தண்மொழி மடமாதர்= நாடோறும் கூடிமகிழும் இனிய அழகிய இளமையுடைய மகளிர். இட விழியும் ஆட= இடது கண்களும் துடிக்க. அயில்= கூர்மை.

**பொழிப்புரை** : இந்திரன் முதலாக உள்ளதேவர்களின் வலக்கண்களும், வித்யாதரர் புணரும் இளமகளிரின் ஒளிவிளங்கும் வலக்கண்களும் துடிக்கவும், பகைமை உணர்வுடைய அசுரர்களின் இடது விழிகளும் அவர்கள் நாளும்புணர்ந்துமகிழும் சொல்லழகோடு இனிமையாகப்பேசுவதுடன் இளமையும் உடைய மகளிரின் இடது விழிகளும் துடிக்குமாறு, ஒப்பற்ற கூரிய வேல் ஏந்திய குகனும், ஆறுதாமரை மலர்போன்ற முகமுடையவனும், இலந்தைவனத்தில் இருந்து அருள்புரியும் சிவபிரானாகிய அருள்தரு கேடிலியப்பரின் மகனுமாகிய முருகப்பிரானைக் காக்கும்பொருட்டு ;

வானத்து நிலவாகிய மகன் பிறக்குமாறு; பாற்கடலில் இட்ட மந்தரமலையை மத்தாகவும் நடுக்கமறியா வாசுகியைப் பொருத்தமான - நீண்ட நாணாகவும் கொண்டு வானுலகவர் கடைந்தபோது எழுந்த அமுதத்தின் சுவையானது; சாமர்த்தியமும் ஒன்பான் சுவைகளும் அழகும் ஒருசேரப்பெற்ற அறம்சார்ந்த கவிதையை நோக்கக்கசப்பே என்று கூறுமாறு அறிவுசான்ற புலவர்களுக்குக் கவிதை நல்கும் கலைமகளின் இருதிருவடித் தாமரைகளை வணங்குவோம்.

**விளக்கம்** : பாற்கடலைக் கடைந்தபோது அதில் நிலா தோன்றியதாகக்கூறும் இலக்கிய மரபுபற்றி நிலவைப் பாற்கடலின் மகவு என்றார்.

ஆடவர்க்கு வலக்கண் துடிப்பது நல்லசகுனம், இடக்கண்துடிப்பது கெட்டசகுனம் என்பர். முருகன் அருளால் வானோர் சிறைவீடு பெறஇருப்பதால் அவர்களுக்கு வலக்கண்ணும், அசுரர் கொல்லப்பட இருப்பதால் அவர்களுக்கு இடக்கண்ணும் துடித்தன என்றார். இதனை, இராவணனால் சீதாப்பிராட்டி, இலங்கை அசோகவனத்தில் சிறைப்பட்டபோது திரிசடையிடம் சீதை, தனது இடதுகண் துடிப்பதுபற்றிக்கூற, நன்மை நடக்கவிருப்பதை அவளது இடதுகண்துடித்து உணர்த்தியதாகத் திரிசடை கூறுவதை எண்ணுக. .

பிறந்த பிறப்பினால் கிடைத்த உடலுக்கு நலம்தந்து அந்தஉடலுடன் அழியும் அமுதத்தைக் காட்டிலும், ஒருபிறப்பில் பயின்ற மெய்ப்புலவர் கவிச்சுவை, உயிரைப்பிரியா உள்ளத்தை பற்றிநின்று, ஏழ்பிறப்பும் இன்பம்தருவது என்பது - " ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்கு, எழுமையும் ஏமாப் புடைத்து " என்பது தமிழ்மறை ஆதலின் அமுதினும் மெய்ப்புலவர் கவிதை மேலானது என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : அறியா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

7. **பிரமன்**

அந்தண் மொழியை ஒருதன்மைத்(து)
ஆக்கா(து) எவர்க்கும் வெவ்வேறாய்
ஆக்கு கெனப்பா மடந்தையைத்தன்
அணிசேர் மணிநா மிசைஇருத்தி
உந்தி வனசத்(து) இருந்துசுகம்
உறும்எப் பொருளும் படைத்(து)அருளும்
உயர்நான் முகத்து மறைக்கிழவன்
உவந்து தினமும் தனிபுரக்க
முந்து சுடர்வேல் கரத்தானை
முழுதும் கொடுக்கும் வரத்தானை
முதிரும் நிகமச் சிரத்தானை
மூழ்கும் விசயச் சரத்தானை
சந்த மயில்வா கனத்தவனைத்
தயவு பெருகு மனத்தவனைத்
தமிழ்சேர் இலந்தை வனத்தவனை
தயங்கு விசாகத் தினத்தனையே. ( 7 )

**குறிப்புரை** : ஒருதன்மைத்து= ஒத்த இயல்புடையது. பாமடந்தை= கலைமகள். மணிநா= சிறந்த நாக்கு. உந்தி வனசம்= கொப்பூழாகிய தாமரை. மறைக்கிழவன்= வேதத்துக்குஉரிய நான்முகன். தனி= ஒப்பற்ற

முந்து= மிகச்சிறந்த. நிகமம்= வேதம். வரத்தான்= மேன்மையன். சிரத்தான்= உச்சியில் உள்ளவன் சரம்= மாலை. சந்தம்= அழகு. தமிழ்= இனிமை. தயங்கு= விளங்கும்.

**பொழிப்புரை :** மிகச்சிறந்த ஒளியுடைய வேலினைக் கையில்ஏந்தியவனை, அடியவர் விரும்பும் அனைத்தையும் கொடுக்கும் மேன்மையனை, மிகச்சிறந்த வேதத்தின் உச்சியில் உள்ளவனை, வெற்றிமலர் மாலையில் மூழ்குகிறவனை, அழகிய மயிலூர்தியனை, கருணையே பெருகும் உள்ளமுடையவனை, வழிபட்டார்க்கு இனிமைசேர்க்கும் கீழ்வேளூர்ப் பெருமானை, ஒளிவிளங்கும் விசாகத்துக்கு உரியவனை,

அழகிய தண்மைதரும் மொழிகளை அவைதம்முள் ஒத்தஇயல்புடன் படைக்காது, வெவ்வேறு வகையில் ஆக்குவாயாக என்றுகூறிக் கலைமகளைத் தனதுசிறந்த நாவில் இருக்கச்செய்து, திருமாலின் கொப்பூழாகிய தாமரையில் தான்இருந்துகொண்டு, உலகில் சுகம்தரும் எப்பொருளையும் படைத்து, உயிர்களுக்கு நான்கு முகத்துடன் அருள்புரியும் சிறந்த வேதத்துக்கு உரிய பிரமன்; நாடோறும் ஒப்பற்ற முறையில் காப்பானாக.

**விளக்கம் :** உலகமொழிகள் தம்முள் ஒலி, ஒளிக்குறிப்பால் வேறுபட்டிருத்தலைக் கலைமகள் திருமாலின் ஆணையால் படைத்ததாகக் கூறினார். திருமாலின் கொப்பூழாகிய தாமரையில் இருக்கும் நான்முகனை " பூமேவு செங்கமலப் புத்தேள் " (கந்தர் கலிவெண்பா . 1 ) என்பார் ஸ்ரீ குமரகுருபரஅடிகள்.

.

**8. இந்திரன்**

மருவும் தனக்கோட்(டு) இணைதால
வட்டம் துதிக்கை பெறுதெய்வ
மால்யா னையினை முன்மணந்து
வளர்சொல் கவளம் அருத்துவித்துப்
பெருகும் குசம்கை வசமாக்கிப்
பிரியாப் பாசத் தொடு சேர்க்கும்
பெரிய பாகன் எனும் முருகப்
பிரானைக் குகனைத் தனிபுரக்கத்
தருவின் நீழல் விரவுசுரர்
தடமா மகுடத் தலைபணியத்
தளிர்கற் பகமும் கடல்மணியும்
சாற்றும் ஏவல் ஆற்றிவரக்
குருமென் மலர்க்கொந்(து) அளவுஅளகக்
கொவ்வைக் கனிவாய் அயிராணிக்
குதலைப் பசுந்தேன் செவிமடுத்துக்
குலவும் குலிசப் பெருமாளே. ( 8 )

**குறிப்புரை :** இணைமருவும்= தம்முள் இணையாகப் பொருந்திய. தனக்கோடு= மார்பகங்களாகிய தந்தங்கள். தாலவட்டம்= பூமி. துதிக்கை= வணங்குதல். மால்= பெருமை. யானை= தெய்வயானையம்மை. வளர்சொல் கவளம் அருத்துவித்து= மிக்க சொற்களாகிய சோற்றுஉருண்டையை உண்ணச்செய்து. பெருகும் குசம்= பருத்ததனம்.- முலை. கைவசமாக்கி= கைகளால் பற்றி. பாசத்தொடுசேர்க்கும்= அன்புடன்அணைக்கும் பெரிய பாகன்= முதன்மைவாய்ந்த யானைப்பாகன்.

தரு= கற்பகமரம். விரவு= வாழும். தடமா= பெரியசிறந்த. மகுடச்சுரர் தலைபணிய என்க. கடல்மணி= கடலில் தோன்றிய சிந்தாமணி. சாற்றும்= சொல்லும். குரு= ஒளி. கொந்தள அளகம்= மகளிரின் கூந்தல் குதலை= இன்மொழி. குலிசப்பெருமான்= குலிசப்படையுடைய இந்திரன்.

**பொழிப்புரை :** கற்பகமரநிழலில் வாழும் தேவர்கள் தம்பெரிய சிறந்தமகுடமணிந்த தலை தாழ்த்தி வணங்கவும், தனது ஏவல்களைத் தளிர்களையுடைய கற்பகமரமும் கடலில் தோன்றிய சிந்தாமணியும் செய்யவும், ஒளிபொருந்தியதும் மென்மையானதும் மலர்சூடியதும் ஆகிய கூந்தலுடன் கொவ்வைக்கனி ஒத்தஇதழ்களுடைவளும் ஆகிய மனைவியாகிய இந்திராணியின் இன்மொழியாகிய புதுத்தேனைக் குடித்துமகிழும் குலிசப்படையுடைய தேவேந்திரன்;

தம்முள் இணையாகப் பொருந்திய முலைகளாகிய தந்தம், உலகவரின் துதிக்கை - வணக்கம் ஆகியவற்றைப்பெற்ற பெருமைபொருந்திய தெய்வயானையை - தெய்வயானையம்மையை முதலில் மணம்செய்துகொண்டு, பின்னர் மிக்கசொற்களாகிய சோற்று உருண்டைகளை உண்ணச்செய்து, அவளது

பருத்த முலைகளைத் தன்கைவசமாக்கிக்கொண்டு, நீங்காத அன்புடன் அணைக்கும் முதன்மைவாய்ந்த பாகனாக விளங்கும் முருகப்பிரானாகிய குகனை ஒப்பற்றுக் காப்பானாக.

**விளக்கம் :** தேவருலக அயிராவதமாகிய யானை வளர்த்தமைபற்றித் இந்திரன்மகள் தேவயானை எனப்பெற்றாள். அவளை யானையாகவே உருவகம்செய்கிறார். அவள் முலைகளைக் கோடுகளாகவும், உலகவரின் வணக்கம் பெற்றதைத் துதிக்கை பெற்றதாகவும் கூறினார். முருகன் தெய்வயானையம்மையை மணந்துகொண்டது களவினாலன்று. சூரனை முருகன் வென்றதன் வெற்றிப்பரிசாக அவள்தந்தை இந்திரன்தர மணந்ததால் அவளை மணந்துகொண்டபிறகு அந்த யானைக்கு இன்சொல்லாகிய கவளம் ஊட்டி, அவளது கோடுகளாகிய முலைகளைக் கைவசப்படுத்தி, நீங்காத பேரன்புடன் அவளைச்சேர்ந்தார் - கூடினார் என்றும் அவளைக் கைவசப்படுத்திய முருகப்பெருமானைப் பெரிய பாகன் என்றும் மிக்கநயமுடன் கூறினார்.

**இலக்கணக்குறிப்பு :** தனக்கோடு, இன்சொல் கவளம், பெரிய பாகன் - உருவகங்கள். துதிக்கை - செம்மொழிச்சிலேடை. கொவ்வைக்கனி வாய் - உவமத்தொகை. குதலைப் பசுந்தேன் - உருவகம்.

9. **சத்தமாதர்கள்**

( சந்தவிருத்தம் )

கனதம னியவரை வண்ணவில் கோட்டினள்
கலையினை நடவும்ஓர் வெம்முனைக் காட்டினள்
கடல்புகும் அவனியை முன்னையிற் சேர்த்தவள்
கதிர்விடு திகிரியை மன்னுகைக்கு ஏற்றவள்
இனமலி சதுமறை உண்மையைத் தேறினள்
எழுது(அ)ரு வளநகர் விண்ணவர்க்(கு) ஆக்கினள்
இனமயில் மிசைவரும் அன்னமெய்ப் பேட்டினள்
எனும்இவர் எழுவரை நன்னயத்(து) ஏத்துதும்
சினமொடு விழிதொறும் வன்னியைக் காட்டிய
திடமுளத் தகுவர்கள் பின்னிடப் போர்த்திடு
சிறைமயில் உயதிண்ணனைக் காட்டிய
திகழ்தரு அருள்பொழி கண்ணனைத் தேக்கமழ்
வனம்வரு குறமகள் அண்ணலைப் பார்ப்பதி
மனம்மகிழ் மழலைசொல் சண்முகத் தீர்த்தனை
மணம்மலி சரவண முன்னனைக் கீர்த்திகள்
மருவுபத ரிவன மன்னனைக் காக்கவே. ( 9 )

**குறிப்புரை :** தமனியம்= பொன். வரை= மலை. கோட்டினள்= வளைத்த மகேசுவரி. கலையினை= மானினை. நடவும்= செலுத்தும். வெம்முனைக்காட்டினள்= கொடிய பாலைக் காட்டில் வாழ்கிற துர்க்கை.. கடல்புகும் அவனி= கடலில் மூழ்கிய நிலவுலகு. முன்னையில் சேர்த்தவள்= முன்புபோல்வெளிக்கொணர்ந்த வராகி. கதிர்விடு திகிரி= ஒளிரும் சக்கரப்படை மன்னுகை= பெருமைபொருந்திய கை. ஏற்றவள் தாங்கிய நாராயணி. இனமலி= ஓரினமாகச் சிறந்த, சதுமறை= நான்குமறைகள். தேறினள்= தெளிந்த அபிராமி. எழுது அரு= தீட்டுத்கற்கரிய. வளநகர்= வளமான வானுகல அமராவதி நகர். ஆக்கினள்= உரிமையாக்கிய இந்திராணி. இனமயில்= தனக்கு இனமான மயில். மிசைவரு= ஏறிவரும். அன்னமெய்ப்பேட்டினள்= பெண் அன்னம் போன்ற கௌமாரி. நன்னயம்= மிக்கநயமுடன்.

வன்னி= நெருப்பு. திடம் உளம்= உறுதியான மனம். தகுவர்= அசுரர். போர்த்திடு= போரிட்டு. உய= ஈடேற்றம்பெற. திண்ணனை= பேராற்றலுடையவனை. அண்ணல்= தலைமை சான்றவன் - கணவன். பார்ப்பதி= பார்வதி தேவி. தீர்த்தன்= புனிதன். முன்னன்= முதல்வன்.

**பொழிப்புரை :** மிக்கசினத்துடன் தமது விழிகளில் சினத்தீயை வெளியிட்ட உறுதியான அசுரர் பின்வாங்கப் போரிட்டடு அசுரனை - சூரபன்மனை - மயிலாக ஈடேற்றம்பெற விளங்கும்அருள்புரிந்த பேராற்றலுடையவனை, கருணை விளங்கும் அருள்பொழியும் கண்களுடையவனை, தேன்மணக்கும் தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளிநாச்சியார் கணவனை, பார்வதிதேவி மனம்மகிழ மழலைபேசும்

ஆறுமுகப்புனிதனை, மிக்கமணம்கமழும் சரவணப்பொய்கைக்கு உரிய முதல்வனை, புகழ்பொருந்திய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அரசனைக் காக்கும்பொருட்டு;

கனமான மேருமலையை அழகியவில்லாக வளைத்த **மகேசுவரி**, பாலை நிலத்தில் மானினைச்செலுத்தும் **துர்க்கை**, கடலில் மூழ்கிய நிலவுலகை முன்போல் வெளிக்கொணர்ந்த **வராகி**, ஒளிவிரியும் சக்கரப்படையைப்பெருமைபொருந்திய கையில் ஏந்திய **நாராயணி**, ஓரினமாகச் சிறந்த நான்குமறைகளின் உண்மையைத் தெளிந்த **அபிராமி**, தீட்டுதற்கரிய வளமுடைய தேவருலக அமராவதி நகரை மீண்டும் தேவர்களுக்கு உரிமையாக்கித் தேவர்களைக்காத்த **இந்திராணி**, தனக்கு இனமாக விளங்கும் மயில் மேல் ஏறிவரும் பெண்அன்னம்போல் அழகிய **கௌமாரி** ஆகிய எழுவரையும் மிக்க நயமுடன் போற்றுவோம்.

**விளக்கம்** : அம்மையும் அப்பனும், முறையே ஆற்றலாகவும் பொருளாகவும் விளங்கும் தன்மையர் என்பது சைவமெய்ப்பொருளியல். இவர்கள் பிரிந்தறியாதவர் ஆதலின் அப்பனின் புகழை அம்மைமீதேற்றி - அம்மையின் செயலாக்கி இவர்களின் அம்மையப்பர் நிலையை - மாதொருபாகன் நிலையைச் சுட்டினார் என்க. “ அம்மையோடு அப்பன் ஆகிச் செறிவு ஒழியாது நின்ற சிவன் “ ( சித்தியார். பாயிரம் ) என்றதில் ஒடுஉருபு உடனிகழ்ச்சிப்பொருளது.

10. **முப்பத்துமுக்கோடி தேவர்கள்**

ஞானசுகம் மிக்கவனை வேலவனை யோகனை
நலம்கிளர் கிரிக்குலம் இடம்தொறும் இருப்பனை
ஞாலவலை யச்சுடிகை சோதிதரு சேடனும்
நடுங்கிட நடத்திய விளங்குமயில் அப்பனைக்
கோனவனை வெட்சிமலர் கோடன்மலர் தேன்உறை
கொழும்பிரசம் உற்றிடு கடம்(பு)அணி புயத்தனைக்
கூவிவரு குக்குடப் பதாகையனை மேதகு
குறிஞ்சியனை வித்தகம் உவந்(து)அருள் முகத்தனை
வானம்மலி மைப்புயல்கள் சாரளம் நிலாவிய
வளம்தரு மணிப்புரிசை எங்கணும் மதத்தொடு
வாதுவரை விட்டுலவும் வேழம்என மேவிய
வரம்பெறு திருப்பதி இலந்தவன நித்தனை
ஆனதொகை முப்பத்(து)ஒரு கோடிஇரு கோடிகள்
அணைந்திடு புகழ்க்குலவு உம்பர்கள் எனச்சொலும்
ஆதவரும் உருத்திரர்கள் மேவுவசு வானவர்
இலங்கிய மருத்துவர் தனித்தனி புரக்கவே. ( 10 )

**குறிப்புரை** : சுகம்= உடம்பு. யோகன்= உயர்ந்தவன். கிரிக்குலம்= மலைகள் ஞாலவலையம்= உலகைச் சூழ. சுடிகை= தலைஉச்சியில் உள்ளமணி - நாகரெத்தினம். சோதிதரு= ஒளிதரும். சேடன்= ஆதிசேடனாகிய பாம்பு. நடத்திய= நடித்த. கோடல் மலர்= காந்தள்மலர். தேன்உறை= வண்டுகள் வாழும். பிரசம்= தேன். குக்குடப் பதாகை= சேவல் கொடி வித்தகம்= நன்மை. மலி= மிக்க. நிலாவிய= பரவிய. புரிசை= அரணம் - கோட்டை. வரைவாது= மலைமூங்கில். வேழம்= யானை. வரம்பெறு= மேன்மையுடைய. நித்தன்= என்றும் உள்ளவன். முப்பத்து ஒருகோடி இருகோடி= முப்பத்து முக்கோடி.. கோடி= வகை. உம்பர்கள்- தேவர்கள். ஆதவர்= சூரியர். வசு= உருத்திரர்.

**பொழிப்புரை** : ஞானத்திருமேனியனும், வேலேந்தியவனும், உயர்ந்தவனும், நன்மைதரும் மலைஇடங்கள்கள்தோறும் இருப்பவனும், உலகைச்சூழ்ந்துள ஒளியைத்தனது தலையுச்சியில் உள்ள இரத்தினத்தால் தரும் ஆதிசேடனும் அஞ்ச நடிக்கும்விளங்கும் மயிலப்பனாகிய முருகனை, தலைமையனை, வெட்சிமலர் காந்தள்மலர் வண்டுகள் வாழும் மிக்கதேன்பொருந்திய கடம்பமலர் ஆகிய மாலைகள் அணிந்த தோள்களுடையவனை, கூவும் சேவற்கொடியுடையவனை, நன்மைகளைத்தனது மனமகிழ்ச்சியுடன் அருளும் திருமுகமுடையவனை, வானத்தில் விளங்கும் மிகுதியான மேகக்கூட்டம் சாரளத்தின்வழி உள்ளேபரவியதும், வளங்கள்தருவதும் ஆகிய கோட்டைஎங்கும், மலைமூங்கிலைக் கைவிட்டு மதத்துடன் உலவும் யானைபோல் மேன்மைபொருந்திய தலமாகிய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள என்றும்நிலைத்தவனாகிய அருள்தரு வாலமுருகப்பெருமானை முப்பத்துமூன்று

வகையில் உள்ள சூரியர்கள் 12, உருத்திரர் 11, வசுக்கள் 8, மருத்துவர்கள் 2 ஆகியோர் தனித்தனி காப்பாராக.

**விளக்கம் :** உவமையால் பெயர்பெற்ற சங்கப்புலவராகிய கழைதின்யானையார்என்பவர் கூறும்,

" கானயானை கைவிடு பசுங்கழை
மீன் எறிதூண்டில் நிவக்கும் நாடன் "

என்றதொடர் இப்பாவினால் நம்நினைவுக்கு வரும்.

**2 செங்கீரைப் பருவம்**

11. ஆறுசம யத்தவர்கள் வழிபாடு செய்வதற்(கு)
ஆறுபொரு ளாகமேவி
அவரவர் செயும்செயலை ஏற்பன்என
ஆறுதிரு வதனம்மேவிப்
பேறுபெறும் அச்சமயம் நச்சும்அவர் இச்சையுறு
பெத்தம்முத் திகளைஎலாம்
பிறழாமல் ஈவன்என அறிவிக்க ஈராறு
பேதம்இல் கரங்கள்மேவி
ஊறுதவிர் பலகோடி சடசித் தினுக்கெலாம்
உயிராக மேவுமுதல்வன்
ஒருவனாம் என்றுதெரி விப்பதற்(கு) ஒப்பில்அழ(கு)
ஒழுகுதிரு மேனிஒன்றாய்த்
தேறுபுக ழுடன்வந்த மன்னுகீழ் வேளூர
செங்கீரை ஆடியருளே
சிங்கார வேல்முருக சங்(கு)ஆழி மால்மருக
செங்கீரை ஆடியருளே. ( 1 )

**குறிப்புரை :** ஆறுசமயம் = சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம் பைரவம் என்ற அகச்சமயங்கள். நச்சும்= விரும்பிவாழும். பெத்தம்= மலக்கட்டுடைய வாழ்வு. முத்தி= மலமில்லாத பேரின்ப வாழ்வு - வீடுபேறு. பலகோடி சட சித்தினுக்குஎலாம் ஊறுதவிர்உயிராக என்க. சடம்= அறிவு இல்லாதன. சித்து= அறிவு உள்ளன. தேறு= தெளிந்த. செங்கீரை ஆடுதல் - பிள்ளை தனது ஐந்தாம் மாதத்தில் தன்தலை நிமிர்த்து, இருகையும் முழந்தாள்களும் ஊன்றி ஒருமுழந்தாளை முன்எடுக்க முயலும்போது ஏற்படும்தடுமாற்றதில் அழகாக அசைந்தாடுதல்.

**பொழிப்புரை :** ஆறுவகைப்பட்ட சமயத்தவர்களும் வழிபடும்பொருட்டு அவரவர் சமயக் கடவுளாய் நின்று, அவரவர் வழிபாடுகளை நான் ஏற்பேன் என்று அறிவிக்கும்பொருட்டு ஆறுதிருமுகங்களுடன் விளங்கியும், நற்பேறுபெற்ற அச்சமயம் சார்ந்தவர்கள் விரும்பும் மலக்கட்டுடைய பிறப்பும், மலமில்லாத வீடுபேறும் ஆகியவற்றை முறைப்படி அவர்கட்குத்தருவேன் என்பதை அறிவிக்க வேறுபாடில்லாத பன்னிரு கைகளுடன் விளங்கியும், துன்பமும்அறிவுமில்லாதனவும், அறிவுஉடையனவுமாகிய கோடிகோடிப் பொருள்களுக்குத் துன்பம்போக்கும் உயிராகப்பொருந்திய முதற்பொருள் ஒப்பற்றநானேயாம் என்பதை அறிவிப்பதற்கு ஒப்பற்ற அழகுஒழுகும் ஒருதிருமேனிதாங்கியும், தெளிந்த புகழுடன்வந்தவனாகிய கீழ்வேளூர்ப்பெருமானே! செங்கீரைஆடியருள்க ! அழகுடன் அனைவராலும் விரும்பத்தக்கவனாக விளங்கும் முருகப்பெருமானே! சங்கும் சக்கரப்படையும் ஏந்திய திருமால் மருகனே! செங்கீரையாடியருள்க!

**விளக்கம்** :சிவனாம் - முருகனாம் பரம்பொருள் ஒருவனே அகச்சமயங்கள் ஆறினும் அமைந்தவன் :

" அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர்பொருளாய்
வேறாம், குறியது உடைத்தாய் " - சித்தியார். சுபக்கம். 2

12. தத்துதிரை முத்தம்உமிழ் சீகரச் சாகரத்
தரணியிடை வாழும் உயிர்கள்

சந்ததமும் உந்துதுய ரம்தனில் அழுந்தாது
தக்கமுறை நன்மை பெறவே
புத்தியொடு முத்திதரு புண்ணியமும் நண்ணிய
புலன்கள்நுகர் இன்பம் அதுவும்
பொற்புற அவற்றிடை விளங்கிஅனு தினமும்
புகழ்பெற இருந்த பொருள்போல்
நித்தம்நிறை வுற்றபர ஞானிசுகம் ஆனசிவ
நின்மலனும் மதுர வசன
நீலமா(து) உமையும்மிகு ஓகைபெற இவர்நடுவண்
நேயமொடு வீற்றி ருந்த
சித்திபெறும் உத்தமர்கள் மன்னுகீழ் வேளூர
செங்கீரை ஆடி யருளே
சிங்கார வேல்முருக சங்(கு)ஆழி மால்மருக
செங்கீரை ஆடி யருளே. ( 2 )

**குறிப்புரை** : தத்து= தாவி. சீகரம்= செல்வச்செழிப்பு. சாகரம்= கடல். உந்து= பிடர்பிடித்துத் தள்ளும். புத்தி= ஞானம். நண்ணிய= பொருந்திய. பொருள்= திருவருள். பரஞானி= மேலானஞானத்தன். சுகமான சிவநிமலன்= முத்தியாக விளங்கும் சிவபிரானாகிய மலமில்லாதவன். நீல மாது= நீலநிற உமையம்மை. நேயம்= அன்பு. சித்தி= அறிவு. மன்னு= நிலையாகவாழும்.

**பொழிப்புரை** : தாவிவரும் அலைகள் முத்துகளை வெளியேற்றும் செல்வச்செழிப்புடைய கடல் சூழ்ந்த உலகில் வாழுமுயிர்கள், எக்காலமும் பிடர்பிடித்துஉந்தும் துயரத்தில் மூழ்காமல் தக்கவகையில் நன்மைபெற்று வாழும்பொருட்டு, ஞானமுடன் முத்தியைத்தரும் சிவபுண்ணியமும், உயிர்களிடைப் பொருந்திய புலன்களால் அனுபவிக்கும் இன்பமுமாக அழகுடன் அவ்வுயிர்களிடம் விளங்கி நாடோறும் புகழுடன் இருந்த திருவருள்போல; நாடோறும்முழுமையாகவிளங்கும் மேலானஞானியாம்சிவபெருமான், இன்சொல்வழங்கும் நீலநிறத்து உமையம்மை ஆகியஇருவரும் மகிழ இவர்கள் நடுவே அன்புடன் வீற்றிருக்கின்றவனும், ஞானம்பெற்ற சான்றோர்கள் நிலைபெற்ற கீழ்வேளூரினனும் ஆகிய முருகப்பெருமனே ! செங்கீரை ஆடியருள்க! அழகியவேலேந்தியவனும் அனைவரும் விரும்புகிறவனும் ஆனவனே! சங்கும் சக்கரப்படையும் ஏந்திய திருமால் மருகனே! செங்கீரை ஆடியருள்க!

**விளக்கம்** : புண்ணியத்தைப் பசுபுண்ணியம் என்றும்பதிபுண்ணியம் என்றும் இருவகையாகக் கூறுவர். ஓர்உயிரை உயிராகவே நினைத்துச் செய்வது பசுபுண்ணியம். ( செழியனைச் செழியனாகவே நினைத்துச்செய்யும் புண்ணியச்செயல் இது.) இதுதருவது சுவர்க்கம். சுவர்க்கம்பெற்றார்க்குமீண்டும் பிறப்புண்டு. செழியனைச் சிவமாகவே - பதியாகவே நினைத்துச்செய்யும் புண்ணியம் பதிபுண்ணியம். இதனால் பெறுவது வீடுபேற்று இன்பம் - பிறப்பில்லா இன்பம் - முத்தி இன்பம். இப் பதிஇன்பத்தையே " முத்தி தருபுண்ணியம் " என்றார்.

13. துள்ளும் தகட்(டு)அகட்(டு) இளவாளை விரிபாளை
துன்றுகமு(கு) ஊடு தாவித்
துன்றுபுகழ்ப் பழக்குலை உதிர்த்(து)அயல் வருக்கைகொள்
சுளைக்கனிகள் சாடி வெடிபோய்
அள்ளும் கவின்படைத்(து) இலகுகற் பகத்தருவின்
அம்பொன் மலர் மாரி சிந்தி
அந்தரம் நிரந்துவரு கந்தரம் அதிர்ந்திட
அணைந்துவிசை யோடு மோதித்
தள்ளும் பொன்தாரை வழியூடு புவிவந்து
சங்கம்மலி வாவி மேவித்
தாமரை மலர்த்திரள் உழக்கிவிரி தேன்உண்டு
சந்ததமும் வந்(து)உ லாவும்
தெள்ளும் புனல்பழனம் மன்னுகீழ் வேளூர
செங்கீரை ஆடி யருளே

சிங்கார வேல்முருக சங்(கு)ஆழி மால்மருக
செங்கீரை ஆடி யருளே. ( 3 )

**குறிப்புரை** : தகட்டு அகட்டு= தகடுபோல்மெல்லிய வயிறுடைய. துன்று= செறிந்த.வருக்கை= பலா. சாடி= மோதி. வெடிபோய்= பிளக்கச்செய்து போய். நிரந்துவரு= பரவிவரும். கந்தரம்= மேகம். தள்ளும்= வெளிப்படுத்தும் - பொழியும். பொன்தாரை= அழகிய மழைத்துளி. சங்கம்= சங்கு. உழக்கி= மிதித்து.

**பொழிப்புரை** : துள்ளிஎழும் தகடுபோன்ற வயிறுடை இளவாளைமீன், பாளைவிரிந்து செறிந்த பாக்குமரங்களின் இடையே தாவி, புகழ்பொருந்திய - நன்குமுற்றிய பாக்குக்குலைகளை உதிர்த்து, அருகிலுள்ள பலாமரத்தின் சுளைகளுடைய கனிகளில் மோதிப் பிளக்கச்செய்து, மிக்கஅழகுடன்விளங்கும் கற்பகமரத்தின் அழகிய பொன்போன்ற மலர்களை உதிர்த்து, வானில் பரவிவரும்மேகம் அதிர மிக்கவிசை யுடன் மோதி, அந்த மேகம்பொழியும் அழகியமழைத்துளியுடன் பூமிக்குவந்து, சங்குகள் மிக்க குளத்தை அடைந்து மிக்கதாமரை மலர்களை மிதித்துத் தேன்பருகி எப்போதும் உலாவும் தெளிந்தநீர்வளமுடைய நன்செய் நிலம்பெற்ற பெருமைபொருந்திய கீழ்வேளூர்ப் பெருமானே! செங்கீரை ஆடியருள்க! அழகியவேல் ஏந்திய முருகப்பிரானே! சங்கும் சக்கரப்படையும் ஏந்திய திருமால் மருகனே! செங்கீரை ஆடியருள்க!

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் இயைபுஏதுவணி.

14. அங்கண்அமு(து) ஒழுகுகலை எழுமதியம் வேணிஅணி
ஐந்துமுகம் உள்ள பரமன்
ஆறுமுகன் எனவந்த உண்மையினை அறியாத
அம்புய மலர்த்த விசினோன்
பங்கம்அறு தாரகப் பொருள்கூறு நெறிதவறு
பட்(டு)அவலம் மேவி னான்அப்
பழு(து)அகல மறையின்உரை முழுதும்உண ரத்தவசு
பண்ணுதும் எனத்தேறியே
துங்கம்உறும் அப்பிரமன் நாவில்உறை கலைமாது
தூயதட மலர்மே வல்போல்
துப்புநிகர் செஞ்சரணம் அமுதநிற ஆடகத்
தூவிஇள அரச அன்னம்
செங்கமல மலர்மீது மன்னுகீழ் வேளூர
செங்கீரை ஆடி யருளே
சிங்கார வேல்முருக சங்(கு)ஆழி மால்மருக
செங்கீரை ஆடி யருளே. ( 4 )

**குறிப்புரை** : அங்கண்= இடமெங்கும். கலை= ஒளி. வேணி= சடை. ஐந்து முகம் உள்ளபரமன்= சதாசிவ மூர்த்தி. அம்புயம்= தாமரை. தவிசினோன்= இருக்கையாக உடையநான்முகன். பங்கம் அறு= குற்றமற்ற. தாரகம்= ஓங்கரம். அவலம்=துன்பம். தவசு=தவம். துங்கம்=உயர்வு. தடமலர்=குளத்துமலர் - வெண்டாமரை. மேவல்=தங்குதல். துப்புநிகர்செஞ்சரணம்=பவளம் போல்சிவந்தகால்கள். ஆடகம்= ஆடகப் பொன். தூவி= சிறகு.

**பொழிப்புரை** : இடமெங்கும் இனிமைஒழுகும் ஒளியுடன் தோன்றும் நிலவினைத் தனது சடையினில் சூடிய ஐம்முகப்பரமனாகிய சதாசிவமூர்த்தியிடம் முருகப்பிரான் ஆறுமுகப்பெருமானாகத் தோன்றிய உண்மையை அறியாதவனாகிய தாமரைமலரை இருக்கையாகக் கொண்ட நான்முகன், குற்றமற்ற ஓங்காரப்பொருள் கூறுவதில் முறை தவறியதால் துன்பப்பட்ட அவனது குற்றம் நீங்கி ஓங்கரப்பொருள் முழுதும் அவன் உணரும்பொருட்டுத் தவம்செய்வோம் என்று தெளிந்தவளாகிய நான்முகனின் நாவில்வாழும் கலைமகள் குளத்தில் உள்ள வெண்டாமரைமலரில் இருத்தல்போல, பவளம்போன்று சிவந்தகால்களும், இனிய ஆடகப்பொன்போல் அழகியநிறச் சிறகும் இளமையும்வாய்ந்த அரசஅன்னப்பறவையானது, செந்தாமரை மலர்மேல் தங்கியிருக்கும் பெருமைபொருந்திய கீழ்வேளூர்ப்பெருமனே! செங்கீரை ஆடியருள்க! அழகியவேல் ஏந்திய முருகப்பெருமானே! சங்கும் சக்கரப்படையும் ஏந்திய திருமால் மருகனே! செங்கீரை ஆடியருள்க!

**விளக்கம்** : பஞ்சவண்ணன் என்றுவழங்கும் ஐம்முகச்சிவனாகிய சதாசிவமூர்த்தியின் ஐந்து திருமுகங்களுடன் அதோமும்கூடி ஆறுமுகனாகத் தோன்றியவன் முருகப்பிரான். இதனை ஸ்ரீகுமரகுருபரர் கந்தர்கலிவெண்பாவில்;

" ஐந்து முகத்தோடு அதோமுகமும் - தந்து
திருமுகங்கள் ஆறு ஆகி " ( கண்ணி 75 - 76 )

( அதோமுகம்= கீழ்நோக்கிய திருமுகம். ஐந்து திருமுகங்களாவன : ஈசானம், தத்புருஷம், அகோரம் வாமதேவம், சத்யோசாதம் . இவைமுறையே நாற்றிசைகளையும் , மேலும் ஆக ஐந்தையும்நோக்குவன.

ஓங்காரப்பொருள் : ஓங்காரம்; அகரம் உகரம், மகரம், நாதம் விந்து ஆகிய ஐந்தும் கூடியது. இவற்றுக்குரிய அதிதெய்வங்கள் முறையே ஐந்தொழில்புரியும் அயன் மால் பரன் மகேசன் சதாசிவன் ஆவர் என்றுபிரிவுபடுத்திக் கூறுவது **வியட்டி**ப் பிரணவம் ஆகும்.

ஓங்காரத்தை ஐந்தாகப் பிரிக்காது ஒன்றாகவைத்துப் பொருள், பரம்பொருளே என்று கூறுவது **சமட்டி** ஆகும். இவ்வாறுகூறும்போது இது சிவபரம்பொருளையே குறிக்கும்.

முருகப்பிரான் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத சிவமேயாதலின் ஓங்காரப்பொருள்கேட்ட அவனிடம் அது, பரம்பொருளை குறிக்கும் என்றுகூறாமல் தன்னை முதன்மைப்படுத்தி அகங்காரத்துடன், வியட்டியாக வைத்து, அகரம் படைப்புக்கடவுளாகிய தன்னைக்குறிக்கும் என்று பிழைபடக்கூறியதால் குட்டும் சிறையும்பட்டான்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமைத்தற்குறிப்பேற்றவணி.

15. சுத்தம்ஆர் வெண்படிகம் மாசற வரிந்துபுரி
தூநிலா முற்றம் மீது
சோதிமர கதசிகரம் வீசுபா(சு) ஒளியும்அளி
சூழும்மென் பந்தர் முல்லைப்
பத்திசேர் முகைஒளியும் மாதர்அணி கலன்நிலவு
பற்பரா கத்தின் ஒளியும்
பாயஇது பாசடையும் முத்தும்அம் புயமும்நிறை
பைந்தடம்ஏ னப்பே தைமார்
புத்திஆர் வத்தினொடு மூழ்கவரு போ(து)இளைஞர்
புனல்ஆழும் அதுகொங்கை பொற்
குடம்கொண்டு நீந்திடும் என்னநா ணிமகிழ்
புரிசெழும் பதரி வனம்வாழ்
சித்திரகூ டப்பரமர் புத்திரவே தத்தலைவ
செங்கீரை ஆடி யருளே
சிங்கார வேல்முருக சங்கு)ஏந்து மால்மருக
செங்கீரை ஆடி யருளே. ( 5 )

**குறிப்புரை** : சுத்தம் ஆர்= தூய்மையான. வரிந்து= பதித்து. புரி= கட்டிய. மரகத சோதி சிகரம்= பசுமை ஒளிரும் மேற்பகுதி. வீசு பாசு ஒளி= வெளியிடும் பச்சைஒளி. அளி= வண்டுகள். பத்திசேர் முகை= வரிசையாக அமைந்த மொட்டு. நிலவு= விளங்கும். பற்பராகம்= பதுமராகமணி. பாசடை= பசியஇலை. . பைந்தடம்= வளமான குளம். பேதைமார்= மகளிர். புத்தி= மனம். பொற்குடம்கொண்டு= அழகிய குடத்தைப் பற்றிக்கொண்டு. நீந்திடும்= நீந்தமுயல்வர். மகிழ்புரி= மகிழும். சித்தரகூடம்= சிதம்பரம். பரமர்= மேலான சிவபிரான்.

**பொழிப்புரை** : தூய்மையான வெண்ணிறப் படிகங்களைக் குற்றமறப்பதித்துக் கட்டிய தூய நிலாமுற்றத்தில், மரகதஒளிவீசுமாறும் பசியஒளியுடன் வண்டுகள் மொய்க்குமாறும் உள்ளமென்மையுடன் வரிசையாக அரும்பிய முல்லைமொட்டுகளுடனான முல்லைப்பந்தல் ஒளியும், மகளிர் அணிந்த அணிகலன்களில் பதித்த பதுமராகமணியின் ஒளியும் சேர, அதுமுத்தும் தாமரைமலர்களும் நிறைந்த வளமான குளம் என்றுகருதிய மகளிர் அதில்நீராட வரும்போது, அதனைகண்ட இளைஞர், நீரில் அமிழும் மகளிர்கொங்கைகளை அழகியகுடங்களாகக் கருதிவந்துவிடுவார்கள் என்று வெட்கப்பட்டு மகிழும்வளமான கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள சிதம்பரத்துச் சிவனின் - கேடிலியப்பரின் - மகனே! செங்கீரை ஆடியருள்க!

அழகியவேல் ஏந்திய முருகனே! சங்கும் சக்கரப்படையும் ஏந்திய திருமால் மருகனே! செங்கீரை ஆடியருள்க!

**விளக்கம்** : படிகத்தால் தளமிடப்பெற்ற நிலாமுற்றம் - நீர்நிறைந்த குளம். முல்லைப்பந்தர் நிழல் தாமரைப்பாசிலையின் மரகதஒளி, முல்லைமொட்டுகள் முத்துகள், மகளிர் அணிந்த அணிகளில் பதித்த பதுமராகமணிகளின் நிழல் தாமரைமலர்கள். இளமகளிரின் கொங்கைகள் பொற்குடங்கள் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உருவகவணி.

16. **வேறு**

நித்தன் மலைக்கொடி கண்கள் களித்திட
நீள்கதிர் தவழ்வதுபோல்
நிரைமணி முன்றிலின் வந்து தவழ்ந்து
நிமிர்ந்து சுரர்க்கெனவே
வைத்த சுவர்க்கம் முதற்பல பூமிகள்
மாதவம் ஆதிசெய்
மன்னிய பூமிகள் அலஎனல் போல்ஒளிர்
மதிநிகர் முகம்அசையச்
சத்தி தரும்சிவ பூசை தவம்புகழ்
சீர்பெறு வேள்விஎலாம்
செய்து பலன்பெறு தலம்இது எனும்நெறி
செப்புதல் போல்மலர்
அத்தம் நிலத்தினில் வைத்து மகிழ்ந்(து)இனி(து)
ஆடுக செங்கீரை
அதிக வளத்துறை பதரி வனக்குக
ஆடுக செங்கீரை. ( 6 )

**குறிப்புரை** : நித்தன்= நிலைத்தவன் - சிவபிரான்.. கதிர்= ஒளி. சுரர்= தேவர்கள். ஆதி= முதலியன. மன்னிய= பெருமைபொருந்திய. அல = அல்ல. சத்தி= அறிவு - ஞானம். தலம்= புனிதஊர். நெறி= முறைமை. அத்தம்= கை. துறை= இடம்.

**பொழிப்புரை** : சிவபிரான், மலைமகள் ஆகிய இருவர் கண்களும்களிக்க, நீண்டஒளி தவழ்ந்துவருவதுபோல், வரிசையாக நவமணிகள் பதித்தமுற்றத்தில் தவழ்ந்துவந்து, தலைநிமிர்த்தி, பசுபுண்ணியத்தரான தேவர்கள்பொருட்டும் மாதவம்முதலியன செய்தோர் பொருட்டும் வைத்த சுவர்க்கம் முதலியனவும் பெருமைபொருந்தியனவல்ல என்பதுபோல் ஒளிவீசும் முழுநிலவுபோன்ற முகத்தை இருபுறமும் அசைத்தும், ஞானம்தரும் சிவபூசை, தவம், புகழ்வாய்ந்த சிறப்புடைய வேள்வி முதலியஅனைத்தும் செய்து அதன்பலனாக வீடுபேறுபெறும் தலம்இதுவாகும் என்று வீடுபேறுபெற வழிகாட்டுவதுபோல் தாமரை மலர்போன்ற கையைக் கீழ்வேளூர்நிலத்தில் வைத்து மகிழ்ந்து செங்கீரையாடுக! மிக்கவளமான இடங்களுடைய கீழ்வேளூர்க் குகனே! செங்கீரையாடுக!

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி. ஆடுக - வியங்கோள் வினைமுற்று.

17. மணிகிளர் குஞ்சி முடித்திடும் உச்சியின்
வச்சிர ஒளிஆட
மாசறு தே(சு)உறு முத்(து)இயல் சுட்டிகள்
மதிஉடு எனஆடக்
கணிதம்இல் ஒளிதரு குண்டலம் ஆ(று)இரு
கதிரவர் போல்ஆடக்
கண்டச ரத்தொடு மண்டிய எழில்வளர்
கண்டிகை களும்ஆட
பணிதரும் அரதனம் விரவிய கதிர்வளை
பலபல விதம்ஆடப்
பயில்மர கதம்இடை உறும்அரை வடம்மிசை

பகர்கிண் கிணிஆட
அணிகிளர் பரிபுரம் ஆட அசைந்(து)இனி(து)
ஆடுக செங்கீரை
அதிக வளத்துறை பதரி வனக்குக
ஆடுக செங்கீரை. ( 7 )

**குறிப்புரை** : கிளர்குஞ்சி= மினுமினுப்புடைய தலைமுடி. வச்சிரமணி என்று கூட்டுக. வச்சிரஒளி= வைரஒளி. தேசு= ஒளி. முத்து இயல்= முத்தினால் ஆன. மதிஉடு= முழுநிலவும் விண்மீனும். கணிதம் இல்= அளவிடற்கரிய. கண்டசரம்= ஒருவகைக்கழுத்து அணி. பணிதரும்= வேலைப்பாடுடைய. அரதனம்= இரத்தினம். வளை= வளையல். இடை மரகதம் பயில்உறும் அரைவடம்= இடுப்பில் மிக்கமரகத மணிகள்பதித்த அரைஞாண். பகர்= புகழ்வாய்ந்த. பரிபுரம்= சிலம்பு.

**பொழிப்புரை** : மினுமினுப்புடைய உச்சந்தலை முடியில் முடிக்கப்பெற்றவைரஒளியுடைய மணிஆட, குற்றமற்ற ஒளியுடைய முத்தினால்ஆன நெற்றிச்சுட்டிகள் முழுநிலவுபோலவும் விண்மீன்கள் போலவும்ஆட, அளவிடற்கரிய ஒளிவீசும் பன்னிருகுண்டலங்களும் பன்னிருசூரியர்போல் ஆட, கண்டசரத்துடன் மிக்கஅழகு வளரும்கண்டிகைகள் ஆட, வேலைப்பாடுடையதும் இரத்தினங்கள் பலபதிக்கப்பெற்றதும்ஆகிய ஒளிமிக்க வளையல்கள் பற்பலவிதமாக ஆட, இடுப்பில் கட்டிய மிக்க மரகதமணிகள் பதிக்கப்பெற்ற புகழ்வாய்ந்த அரைஞாணில் ஒலிக்கும் கிண்கிணிகள் ஆட, ஒளிவிளங்கும் சிலம்புஆட, இனிமையாக அசைந்து செங்கீரைஆடுக. மிக்கவளமான இடங்களுடைய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள குகனே! செங்கீரை ஆடுக!

**இலக்கணக்குறிப்பு** : மதி உடு - உம்மைத்தொகை.

18. முகம்நிறை கலைமதி போல்ஒளி தந்திட
முகிழ்நகை நிலவூர
முழுமதி கண்டுஅலர் குமுதம் எனப்பொலி
மொய்ஒளி வாய்மலர
திகழ்அமு(து) அனைய செவ்வாய் ஊறிய
தேறல் வழிந்(து)ஒழுகச்
சிற்பரை விழியிணை ஆன இருசரம்
தெரிவ ருமகிழ்கூரப்
புகல்மணி நிலவிய குழையணி கா(து)இணை
புயம்மிசை நின்றாட
புத்தமு தச்சிறு குடம்நிகர் பண்டி
பொலிந்து குழைந்(து)அசைய
அகம்மகிழ் சுந்தர மேனி குலுங்கிட
ஆடுக செங்கீரை
அதிக வளத்துறை பதரி வனக்குக.
ஆடுக செங்கீரை. ( 8 )

**குறிப்புரை** : முகிழ்நகை நிலவு= புன்முறுவல் ஒளி. தேறல்= தேன். சித்பரை= ஞானவடிவான உமையவள். சரம்= அம்புகள். தெரிவரு= சொல்லுதற்கரிய. புகல்= விருப்பம். அணி= அணிந்த. பண்டி= வயிறு.

**பொழிப்புரை** : திருமுகம் ஒளிமுதிர்ந்த முழுநிலவுபோல் ஒளிவீச, புன்முறுவல் ஒளிர, முழுநிலவைக்கண்டு மலர்ந்த செங்குமுதமலர்போல் விளங்கும் மிக்கஒளிதிகழும் வாய்மலர, சிறந்து விளங்கும் அமுதம்போல் செவ்வாயில் சுரக்கும் அமுதமாகிய தேன்வழிந்து ஒழுக, உமையவளின் அம்புகள்ஒத்த இருவிழிகளில் சொல்லுதற்கரிய மகிழ்ச்சிமிக, விரும்பத்தக்க மணிகள் பதிக்கப்பெற்ற குழைகள் அணிந்த காதுகள் தம்முள் ஒத்த தோள்களைத் தழுவிநின்று ஆட, புதியஅமுதமயமான சிறு குடம்போன்ற வயிறு பொலிவுடன் குழைந்து அசைய, காண்பவர்மனம்மகிழும் அழகியஉடம்பு குலுங்கச் செங்கீரை ஆடுக. மிக்கவளமுடைய இடங்களுடைய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள குகனே செங்கீரை ஆடுக.

19. **வேறு**

பொருந்(து)இமை யத்(து)உமை கலியா ணம்கா ணும்தேவர்
புகழ்ந்த தவத்தினர் புவியோர் வந்தியாவ ரும்கூடி
நெருங்கிட உத்தர திசைதா ழும்சீர் கண்(டு)ஈசர்
நிலம்சமம் உற்றிட முனிநீ சென்றே தென்பூமி
வரும்பொதி யத்(து)உறை எனநா தன்பா தப்போதை
வணங்கி உரைத்தமிழ் மலைமேல் அன்(று)ஆர் வம்சேர
இருந்தவ னுக்(கு)அருள் குமரா செங்கோ செங்கீரை
இலந்தைவ வனத்திரு முருகா செங்கோ செங்கீரை ( 9 )

**குறிப்புரை** : இமயத்துப் பொருந்து உமை கலியாணம் என்க. பொருந்து= நடந்த. உத்தர திசை= வடதிசை. உறை= வாழ்க. பாதப்போது= திருவடித்தாமரை. உரை= புகழ். தமிழ்மலை= பொதிகை மலை. இருந்தவன்= அகத்திய முனிவர். அருள்= உபதேசித்த.

**பொழிப்புரை** : இமயமலையில் நடைபெற்ற உமையம்மையின் திருமணத்தைக் காணவந்த தேவர்கள், புகழ்வாய்ந்த தவத்தினர், இவ்வுலகவர் ஆகிய அனைவரும்கூடித் திரண்டுநெருக்கியதால், வடதிசை தாழ்ந்ததுகண்டு; சிவபிரான், நிலம்சமநிலைபெற " அகத்தியரே! நீர்போய்த் தென்திசையிலுள்ள பொதிகைமலையில் தங்குக " என்றுஅருள, சிவபிரானின் திருவடித்தாமரையை வணங்கிப் புகழ்வாய்ந்த பொதிமமலையில் ஆர்வமுடன் இருந்த அகத்தியமுனிவர்க்கு அருள்புரிந்த குமரனே! செங்கோ செங்கீரை. கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகனே! செங்கோசெங்கீரை.

**விளக்கம்** : முருகப்பிரான் அகத்தியர்க்கு அருளியது :

" தென்பொதியப் பதிஅமர் முனிக்குஇனிய மெய்யா " ( திருவலங்கல் திரட்டு. அருள்மாட்சிமை 8.)

20. நலம்கொள் மறைக்(கு)ஒரு முதல்வா
கங்கா ளன்பாகம்
நயந்த மலைக்கொடி புதல்வா
கந்தா செந்தூரா
குலம்கொள் சுரர்க்(கு)உளம் மிசைஆர்
சந்தா பம்தீரக்
குலுங்கு புனல்சர வணம்மேல்
வந்தாய் இன்(பு)ஆன
துலங்கு தவத்(து)உறை முனிவோர்
எந்தாய் என்(று)ஓது
சுகந்தம் விரித்(து)அலர் தொடைசேர்
மொய்ம்பா சிங்காரம்
இலங்கும் அயிற்படை ஒருவா
செங்கோ செங்கீரை
இலந்தை வனத்(து)உறை முருகா
செங்கோ செங்கீரை. ( 10 )

**குறிப்புரை** : கங்காளன்= தசைகழிந்த முழுஎன்புக்கூட்டினை மாலையாக அணிந்த சிவபிரான். உளம்மிசை ஆர்= உள்ளத்தில் தங்கிய, சந்தாபம்= பெருந்துன்பம். குலுங்கு= அலைமோதும். எந்தாய்= எம்தந்தையே / எம்தாயே. மொய்ம்பா= பெருவீரனே. ஒருவா= ஒப்பற்றவனே.

**பொழிப்புரை** : நன்மைபொருந்திய மறைகளின் முதற்பொருளே! அயன் மால் ஆகியோரின் தசைகழிந்த முழுஎன்புக்கூடினை மாலையாக அணிந்த சிவபிரான் விரும்பும் மலைமகளின் மகனே! கந்தா! திருச்செந்தூரனே! ஓரினமான தேவர்களின் உள்ளத்தில் பொருந்திய பெருந்துன்பம் தீரும்பொருட்டு நீர்அலைமோதும் சரவணப்பொய்கையில் நீ வந்தவனே! இன்பம் விளங்கும் தவத்தில்வாழும் முனிவர்கள் எம்தாயே / எம்தந்தையே என்றுசொல்லி வணங்கும் மணம்பரப்பி மலர்ந்த மாலையணிந்த வலிமைமிக்க பெருவீரனே! அழகு விளங்கும் வேற்படைஏந்திய ஒப்பற்றவனே! செங்கோ செங்கீரை. கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகனே! செங்கோ செங்கீரை.

**விளக்கம்** : கங்காளன்= சிவபிரான். கங்காளம்= அயன் மால் ஆகியோரின் முழுஎன்புக்கூடு. :

" கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை " ( திருமந்திரம். 1666 ) .
" நங்காயி தென்னதவம் நரம்போடு எலும்பணிந்து
கங்காளம் தோள்மேலே காதலித்தான் காணேடீ
கங்காளம் ஆமாகேள் காலாந்த ரத்துஇருவர்
தம்காலம் செய்யத் தரித்தனன்காண் சாழலோ ". ( திருவாச. திருச்சாழல்,
( இருவர்= அயன் மால். )

எந்தாய் : இஃது இருபொருள்தரும் சொல். இச்சொல் எம்தாய்= எம்தாயே என்றும், எம்தந்தாய் என்பதன் மரூஉமொழியாம் எந்தாய் என்றும் வரும். இறைவன் அம்மையப்பன் - மாதொரு பாகன் ஆதலின் அம்மையை எம்தாய் என்றும் அப்பனை எந்தாய் என்பதன் மூலமாகிய எம்தந்தாய் என்றும் நின்று இருவரையும் குறிக்கும். இங்ஙனம்அமைந்த இச்சொல்லின் நுட்பத்தை ஸ்ரீ குமரகுருபர அடிகள், தமது சிதம்பரச்செய்யுட்கோவையில்;

" செவ்வாய்க் கருங்கண்பைந் தோகைக்கும் வெண்மதிச் சென்னியற்கும்
ஒவ்வாத் திருஉரு ஒன்றே உளதுஅவ் உருவினைமற்று
எவ்வாச் சியம்என்று எடுத்துஇசைப் பேம்மின் அருட்புலியூர்ப்
பைவாய்ப் பொறிஅல்குல் எந்தாய் என்று பாடுதுமே. " ( 73 )

செவ்வாய் .... தோகை= அம்மை. வெண்மதிச் சென்னியன்= அப்பன். ஒவ்வாத்திருவுரு= தம்முள் வேறுபட்ட மாதொருபாகன் திருவுரு. வாச்சியம்= பொருள். தம்முள் வேறுபட்ட இவ்வோருவை அம்மைஎன்று போற்றுவதா? அப்பன் என்று போற்றுவதா? இரண்டையும் ஒருசேரக்குறிக்கும் எந்தாய் என்றுபாடலாம். ஏனெனில்; எந்தாய் என்பது எம்தாயே என்று அம்மையைக் குறிப்பதுடன். எம்தந்தையே என்பதன் மரூஉமொழியாய் நின்று எம்தந்தையே என்று அப்பனையும் குறிக்கும் ஆதலின்மாதொருபாகனை எந்தாய் என்றே பாடலாம் என்று முடிவெடுக்கிறார். தாயையும் தந்தையையும் ஒருசேரக்குறிக்கும் எந்தாய் என்ற இச்சொல்லால் முனிவர்கள் முருகனைப்போற்றும் நிலைகுறிக்கிறார் இப்பிள்ளைத்தமிழில்.

### 3. தாலப்பருவம்

21. மின்னுக் கொடிபோல் மயிலினம்போல்
மிழற்றும் தீஞ்சொற் குயிலினம்போல்
விரைகற் பகப்பூங் கொம்பினம்போல்
விளங்கும் கனக மாளிகைபோல்
கன்னல் சிலைவேள் பெருமிதம்போல்
கதிர்மா மணிபோல் விளக்(கு)ஒளிபோல்
...........................................................................................
.............................................................
அன்னப் பெடைபோல் மானினம்போல்
அவனி படைத்த பெருநிதிபோல்
அழகு பழுத்த கொழுங்கனிபோல்
அணிமா ளிகையின் மடமாதர்
மன்னிப் பயிலும் இலந்தைவன
வாழ்வே தாலோ தாலேலோ
மயில்மா முருகா மகபதிக்கு
மருகா தாலோ தாலேலோ. ( 1 )

**குறிப்புரை :** பெருமிதம்= களிப்பு. அவனி= உலகம். மன்னிப்பயிலும்= பெருமையுடன் புழங்கும்.மகபதி= இந்திரன்.

**பொழிப்புரை :** மின்னல்கொடி போலவும், மயில்கூட்டம் போலவும், மென்மையாகவும் இனிமையாகவும் கூவும் குயில்கூட்டம்போலவும். மணக்கும் கற்பகமரத்தின் மென்மையான கொம்பு போலவும், ஒளிவிளங்கும் பொன்னாலான மாலைபோலவும், கரும்புவில் ஏந்தும் மன்மதனின் களிப்புப் போலவும், ஒளிரும் சிறந்தநவமணிபோலவும், ஒளிரும் விளக்குப்போலவும், ..................................................... பெண்அன்னம் போலவும், மான்கூட்டம் போலவும், உலகம் படைத்த பெருஞ்செல்வம் போலவும், அழகுடன்

பழுத்த கொழுமையான கனிபோலவும் அழகியமாளிகைகளில் இளமகளிர் பெருமையுடன் புழங்கும் கீழ்வேளூரில் எமது வாழ்வுப்பொருளாக எழுந்தருளியுள்ள வாலமுருகனே! தாலோ தாலேலோ; மயில்மேல் வரும் அழகியமுருகனே! தாலோதாலேலோ.

**விளக்கம்** : புள்ளிஇட்ட இடங்களை ஓலைச்சுவடியில் கரையான் படித்துவிட்டது.

இறைவனை வாழ்வுப்பொருள் என்பது மரபு :

" வாழ்வே போற்றிஎன் வைப்பே போற்றி " ( திருவாசகம் 4: 120 )

" எங்கள் வாழ்வே! வாஎன்று அருளாயே " ( திருவாசகம் 382 ).

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் பல்பொருள் உவமையணி.

22. முதிர்தேன் துளிக்கும் நறைஆம்பல்
முறுக்கு நெகிழ்ந்து முகம்மலர
முற்றும் எழில்சந் திரகாந்த
முழுமா ளிகைதன் புனல்கொழிப்பக்
கதிர்மா மணிநீ(டு) அரமியம்மேல்
கணவர் புயமங் கையர்திளைப்பக்
கருதும் சகோரம்ம கிழ்தூங்க
கதிரோன் இரவோ என்(று)அயிர்ப்ப
.............................................................................................
..............................................................
அம்பொற் புரிசை இடம்தோறும்
ஆரம் உயிர்த்துச் சங்கினங்கள்
மதிபோல் நிலவும் இலந்தைவன
வாழ்வே தாலோ தாலேலோ
மயின்மா முருகா மகபதிக்கு
மருகா தாலே தாலேலோ. ( 2 )

**குறிப்புரை** : நரை= பெருமை. கொழிப்ப= வெளியேற்ற. அரமியம்= நிலாமுற்றம். திளைப்ப= அனுபவிக்க. கருதும்= மதிக்கத்தக்க. மகிழ்தூங்க= மிகமிக மகிழ. அயிர்ப்ப= ஐயுற. புரிசை= மதில். ஆரம்= முத்து.

**பொழிப்புரை** : முதிர்ந்த தேன் சுரக்கும் பெருமைபொருந்திய ஆம்பல்மலர் மொட்டவிழ்ந்து மலர்ந்து முகமகிழ்ச்சி காட்ட, முதிர்ந்த சந்திரகாந்தக் கற்களால் முழுதும்ஆன மாளிகை தன்னிடமிருந்து நீர்சுரக்க, ஒளிபொருந்திய நீண்ட நிலாமுற்றத்தில் தம்கணவர் தோளில் பொருந்தி மகளிர் இன்பம் அனுபவிக்க, மதிக்கத்தக்க சகோரப்பறவை மிகமகிழ, இவற்றைக்கண்ட சூரியன் இதுஇரவுநேரமோ என்று ஐயுற, ..............................அழகிய பொன்னாலான மதில்கள்தோறும் சங்குக்கூட்டம் முத்துகளை ஈன்றதால் அவ்விடங்கள் நிலவொளிபோல் விளங்கும் தாழ்வேளூரில் எழுந்தருளியுள்ளவனே! தாலே தாலேலோ. மயில்மேல் வரும் அழகிய முருகனே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : ஆம்பல்மலர்தல்,சந்திரகாந்தக்கல் நீர்சுரத்தல், மகளிர் கணவர் புயம்அணைத்து இன்புறல், சகோரம் நிலவொளி பருகிமகிழ்தல், முத்துகள் நிலவொளிவீசுதல் ஆகியனவெல்லாம் இரவுக்காலத்தன ஆதலின் இவற்றைக்கண்ட சூரியன் இது இரவுநேரமோ என்று ஐயுற்றதாகக் கூறினார்.

23. ஓலச் சிறைவண்(டு) இனம்பெடையோடு
உதிக்கும் சிறுகா லையில்கமலத்(து)
ஊறும் பசுந்தேன் பருகிமணம்
உயிர்த்துக் கனகத் தா(து)ஊதி
கோலப் பொழிலில் கணிகையர்தம்
கூர்வேல் வீழிபோல் உலவிஉச்சி
குறுகிக் கதிரோன் கதிர்ஒளிக்
குளிர்நித் திலம்வெண் திரைகொழிக்கும்
மேலக் கடலில் புகுவதன்முன்

விரைந்து மதுரக் காமரப்பண்
மிழற்றி அமுத கிரணன்வர
விரியும் நரைப்பூங் குமுதம்மிசை
மாலை பயிலும் இலந்தைவன
வாழ்வே தாலோ தாலேலோ
மயில்மா முருகா மகபதிக்கு
மருகா தாலோ தாலேலோ. ( 3 )

**குறிப்புரை** : ஓலம்= ஒலி. சிறைவண்டு= சிறகுடையவண்டு. இனம்= கூட்டம். உதிக்கும்= தோன்றும். சிறுகாலை= இளங்காலைப்பொழுது. கோலப்பொழில்= அழகியசோலை. கணிகையர்= பரத்தையர். கதிரோன் உச்சி குறுகி. நித்திலம்= முத்து. கொழிக்கும்= கரையில் ஒதுக்கும். மேலக்கடலில் விரைந்துபுகுமுன் என்க. மேலக்கடல்= மேற்கடல். காமரப்பண்= சீகாமரப்பண். அமுதகிரணன்= குளிரொளி வீசும் நிலா. விரியும்= மலரும். நரை= நறுமணம். மாலை பயிலும்=மாலை நேரத்தில் மொய்க்கும்.

**பொழிப்புரை** : ஒலிக்கும் சிறகுடைய வண்டுக்கூட்டம், தோன்றுகிற இளங்காலைப் பொழுதில் தாமரை மலரில் சுரக்கும்வளமான தேனினைப்பருகி, நறுமணம் பரப்பி, பொன்போன்ற மகரந்தத்தை வெளிப்படுத்தி,, அழகியசோலையில் உலவும் பரத்தையரின் கூரிய வேல்ஒத்த கண்களைப்போல் இங்குமங்கும் சுற்றி, சூரியன் உச்சியடைந்து கதிரொளி குறுகி, குளிர்ந்த முத்துகளைத் தனது வெண்மையான அலைகளால் கரையில் ஒதுக்கும் மேலைக்கடலில் விரைந்து புகுமுன், இனிய சீகாமரப்பண் இசைத்து, அமுதஒளியுடைய சந்திரன்வர, தேனுடன் அழகாகமலரும் குமுதமலரில் மாலையில் தங்கும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள வாலமுருகப்பெருமானே! தாலோ தாலேலோ. மயில்மேல்வரும் அழகிய முருகனே! இந்திரனுக்கு மருமகனே! தாலோ தாலேலோ.

24. கிளரும் பசுந்தோட்(டு) இளம்துளபக்
கேழ்ஆர் அலங்கல் சுருள்ஓதிக்
கெண்டை நெடுங்கண் செந்துவர்வாய்க்
கிளைக்கும் பணைப்பூண் முலைசுமந்து
தளரும் சிறிய இழைமருங்குல்
தண்ணம் கமலத்திருமாதைத்
தழுவி மகிழும் ஒருமாமன்
தன்பே ருவகை மீதூர
ஒளிரும் கனகத் தால்இயற்றி
ஒன்பான் மணியில் குயிற்றிமுழு(து)
உலகம் புகழக் கொணர்ந்தஎழில்
ஓங்கும் மணிப்பூந் தொட்டிலிடை
வளரும் குமரா இலந்தைவன
வாழ்வே தாலோ தாலேலோ
மயில்மா முருகா மகபதிக்கு
மருகா தாலோ தாலேலோ. ( 4 )

**குறிப்புரை** : கிளரும்= சிறந்துவிளங்கும். பசுந்தோட்டு= பசிய இலையுடைய. கேழ் ஆர்= ஒளியுடைய. அலங்கல்= மாலை. சுருள் ஓதி= சுருண்டகூந்தல். துவர்= பவளம். கிளைக்கும்= நெருங்கும். பணை= பருத்து. இழை= நூலிழை. தண்ணம்= குளிர்ச்சியும் அழகும். ஒருமாமன்= ஒப்பற்ற மாமனாகிய திருமால். கனகம்= பொன். பூந்தொட்டில்= அழகிய தொட்டில்.

**பொழிப்புரை** : சிறந்து விளங்கும் பசுமையான இலைகளுடைய துளசியாலான ஒளியுடைய மாலையணிந்து, சுருண்டகூந்தல், கெண்டைமீன்போன்றகண், செம்பவளம்போல் சிவந்த உதடுகளுடன்; தம்முள் நெருங்கிப் பருத்து, அணியணிந்த முலைகளைச் சுமந்து, ஒசிவதும் மெல்லிய நூல் ஒத்த இடையுடன், குளிர்ந்த செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளைத் தழுவிமகிழும் ஒப்பற்ற மாமனாகிய திருமால் பெரிதும்மனமகிழ்ச்சியுற, ஒளிபொருந்திய பொன்னாலானதும் நவமணிகள் பதித்ததும், அழகியதுமான தொட்டிலில் வளரும் குமரனே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ளவாலமுருகனே! தாலோ தாலேலோ. மயிலில்வரும் அழகிய முருகனே! இந்திரனுக்கு மருமகனே! தாலோ தாலேலோ.

**இலக்கணக்குறிப்பு** : கேழ் - உரிச்சொல். கெண்டை நெடுங்கண், துவர்வாய், இழைமருங்குல் - உவமத்தொகைகள்.

25. தக்க நவவீரர் கள்தாயர்
தருண வருணச் சுடர்படலை
தழைக்கும் நவமா மணித்தொகுதி
தகுதி விளங்கும் தொட்டில்இரு
பக்கம் மருவி நின்(று)ஆட்டும்
பருவத்(து) இமயப் பாவைஉடன்
பரமர் அவர்கண் தைத்த(து)எனத்
தாம்பைம் பொற்றுகிலால் தொட்டிலினை
மிக்க வகையால் புறம்பொதிய
விமலன் நகைக்க ஆங்(கு)அவர்கள்
வெள்கி வறிதே நிற்பஉமை
விரும்பி எடுத்து மடித்தலமேல்
வைக்க மகிழும் இலந்தைவன
வாழ்வே தாலோ தாலேலோ
மயில்மா முருகா மகபதிக்கு
மருகா தாலோ தாலேலோ. ( 5 )

**குறிப்புரை** : தக்க= தகுதிவாய்ந்த, தருணம்= புதுமை. வருணம்= ஒளி. சுடர்படலை= ஒளித்தொகுதி. மருவி= பொருந்தி. பருவத்து= காலத்தில். இமயப்பாவை= பார்வதிதேவி. உடன்= உடனே. கண்தைத்தது = கண்ணேறுபட்டது. மிக்க வகை= நன்கு. புறம்பொதிய= வெளியே மூட. வெள்கி= வெட்கப்பட்டு. மடித்தலமேல் வைக்க= சிவபிரானின் மடியில் வைக்க.

**பொழிப்புரை** : தகுதிவாய்ந்த ஒன்பான்வீரர்களின் தாய்மார், புதுமையாக ஒளிவீசும் ஒன்பான்மணிகளின்கூட்டம் பதித்த தகுதிவிளங்கும் தொட்டிலின் இருபக்கங்களிலும் இருந்து முருகப்பிரான் கிடக்கும் தொட்டிலை ஆட்ட, அக்காலத்தில் உமையம்மை சிவபிரானின் கண்பட்டது - கண்ணேறுபட்டது என்று உடனேதமது சிறந்தபொன்னாலான ஆடையால் தொட்டிலை நன்குவெளியே மூட, என்றும்மலமில்லாத சிவபிரான் அச்செயல் கண்டு நகைக்க, அதனால் அங்கிருந்தவர்கள் வெட்கிச் சும்மாஇருக்க, பின்னர் உமையம்மை விருப்புடன் முருகனாகிய அக்குழந்தையை எடுத்துச் சிவபிரான் மடியில்வைக்க, மகிழும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள வாலமுருகப்பிரானே! தாலோ தாலேலோ. மயில்மேல் வரும் அழகிய முருகா! இந்திரனுக்கு மருமகனே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : நவமணிகளாவன : கோமேதகம், நீலம் , பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைரம், வைடூரியம். இவை ஒன்பதும் அம்மையின் கால்சிலம்பில் இருந்தவை. இம்மணிகளாகிய தாய்மார் ஈன்ற வீரர்களே ஒன்பான் வீரர்கள். இம்மகளிரை,

" மங்கை சிலம்பின் மணிஒன்பதில் தோன்றும்
துங்க மடவார் " ( கந்தர்கலிவெண்பா )

என்று குறிப்பார் ஸ்ரீகுமரகுருபரஅடிகள்.

26. **வேறு**

வளமை தழைத்திடு சரவண வாவியில் வளரும் சிறுமகவே
மன்னிய ஆரல் மடந்தையர் பூண்முலை வருபால் நுகர்வோனே
இளமை மயில்புறம் மகிழ்கதிர் ஞாயி(று) எனதிகழ் மேனியனே
எங்கும் நிறைந்த சுகக் கடலாகிஎன் இதயத்(து) உறைபவனே
களபம் மிகுத்(து)அலர் புளக முலைக்கன கவுரிகண் ஒளிர்மணியே
கறுவு சமர்த்தொழில் நிறுவிய வீரக் காளையர் ஆதிபனே
தளவ மணத்திடு பதரி வனத்(து)இறை தாலோ தாலேலோ
சங்கரர் தந்தருள் கந்த துரந்தர தாலோ தாலேலோ. ( 6 )

**குறிப்புரை** : வாவி= பொய்கை. மன்னிய= பெருமைபொருந்திய. ஆரல்மடந்தையர்= கார்த்திகைப் பெண்கள். மயில்புறம் மகிழ் அலர்கதிர் இளமை ஞாயிறு= மயிலின் முதுகில் மகிழ்வுடன் அமர்ந்து கடல்நீரில் தோன்றும் இளஞாயிறு போன்று விளங்கும். களபம்= கலவைச் சாந்து. புளக கன முலை= புடைத்துக் கனத்த முலை. கறுவு சமர்த்தொழில்= சினம்மிக்க போர். நிறுவிய= செய்த. வீரக்காளையர்= வீரம்மிக்க வீரர்கள். ஆதிபன்= தலைவன். தளவம்= முல்லைமலர். சங்கரர்= இதம்செய்யும் சிவபிரான். துரந்தர= வல்லவனே.

**பொழிப்புரை** : வளம்பெருகும் சரவணப்பொய்கையில் வளர்கிற இளமகனே! பெருமையுடைய கார்த்திகைப்பெண்களின் அணிகலன் அணிந்தமுலைசுரந்த பால்பருகியவனே! மயிலின்முதுகில் மகிழ்வுடன் அமர்ந்து, கடல்நீரில் தோன்றும் இளஞாயிறு போன்று விளங்கும் செம்மேனியனே! அங்கிங்கு எனாதபடி எவ்விடத்தும் நிறைந்த இன்பக்கடலாகி என்இதயத்தும் வாழ்கிறவனே! மிக்க கலவைசாந்துடன் புடைத்துக் கனத்த முலைகளுடைய உமையம்மையின் கண்களில் ஒளிரும்பாவையே! சினம்மிக்க போர்செய்த வீரர்களின் தலைவனே! முல்லைமலர் மணக்கும் கீழ்வேளூரில் எழுந்தருளிஇருக்கும் வாலமுருகப்பிரானே! தாலோ தாலேலோ. அனைவர்க்கும் இதம்செய்கிறவனாகிய சிவபிரான்தந்த கந்தனே! வல்லவனே! தாலோ தாலேலோ .

**விளக்கம்** : இளமயில்புறம் மகிழ்கதிர் ஞாயிறு எனத்திகழ்மேனியனே -

" உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ்ஞாயிறு கடற்கண்டாங்கு
ஓவுஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி
..............................................................வாள்நுதல் கணவன்> "( திருமுருகாற்றுப்படை1- 6 )

27. திங்கள் முகத்திரு வாணிபு லோமசை சீர்பெற வந்தவனே
தெய்வ நதிப்ப கீரதி மலர்அங்கை செழிக்க வளர்ந்தவனே
துங்க மறைப்பிர மாவை வினாவிய தொல்மனு வாசகனே
சூழ்தரு வானவர் யாவரும் வந்து தொழும்பத பங்கையனே
. இங்கித வங்கிய மங்கல கீதம் இயம்பிய மான்மகளார்
ஏர்பெற முன்புசெய் மாதவம் நாடி எழுந்தரு ளும்பொருளே
சங்கம் ஒலித்துறை பதரி வனத்(து)இறை தாலோ தாலேலோ
சங்கரர் தந்தருள் கந்த துரந்தர தாலோ தாலேலோ. ( 7 )

**குறிப்புரை** : திரு வாணி= செல்வத்தில் வாழ்கிறவள். - திருமகள். புலோமசை- இந்திராணி. பகீரதி= கங்கை. செழிக்க= பொலிவுபெற. துங்கமறை= உயர்ந்த வேதம். மனுவாசகன்= நீதியன். இங்கிதம்= இனிமை. வங்கியம்= குழல். மான்மகள்= வள்ளிநாச்சியார். ஏர்பெற= நன்மைபெற. துரந்தர= வல்லவனே.

**பொழிப்புரை** : நிலாப்போன்ற முகமுடைய திருமகள், இந்திராணி ஆகியோர் சிறப்புப்பெற உதித்தவனே! தெய்வத்தன்மையுடைய கங்கையின் அழகியமலர்போன்றகை பொலிவுபெற வளர்ந்தவனே! உயர்ந்த மறைஓதும் பிரமனை ஓங்காரப்பொருள் என்ன? என்றுவினவிய பழமையான நீதியனே! வந்து சூழ்ந்துள்ள தேவர்கள் அனைவரும் வணங்கும் தாமரைத்திருவடியனே! இனிய குழல்போல் பேசிய வள்ளிநாயகி நன்மைபெற அவள் முன்புசெய்த தவத்தை எண்ணி அவள்முன் தோன்றிய பொருளே! சங்குகள்ஒலிக்கும் நீர்த்துறையுடைய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள வாலமுருகப்பிரானே! அனைவர்க்கும் இதம்செய்யும் சிவபிரான் அருளிய கந்தனே! வல்லவனே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : திருமகள் இந்திராணி ஆகியோரின் மகள்களாகிய வள்ளிநாச்சியர் தெய்வயானை-யம்மை, ஆகியோரை மணந்ததால் அத்தாயர் சிறப்புப்பெற்றனர் என்றார்.

28. அண்டரை முன்னம் வெகுண்ட பெருந்திறல் அதிசூர் ஒருமாவை
அலைவாய் விரைவாய் விழநீ டியகதிர் அடல்வேல் விடுவோனே
தொண்டரை என்றும் விடா(து)இக பரம்உறு சுகம்நுகர் வித்துமெனத்
தோன்(று)அப யத்தொடு வரதம் நிலாவிய தொடிஅணி செங்கையனே
கொண்டல் எனச்செறி பாசடை யும்திகழ் குளிர்தா ரகைஎனமேல்
குலவிய புதுமல ரும்பெயல் எனவரு கொழுவிய தேன்உறை

தண்டலை மண்டிய பதரிவ னத்(து)இறை தாலோ தாலேலோ
சங்கரர் தந்தருள் கந்த துரந்தர தாலே தாலேலோ. ( 8 )

**குறிப்புரை** : அண்டர்= தேவர். ஒருமா= ஒப்பற்றமாமரம். அடல்வேல்= வெற்றிவேல். இகபரம்= இம்மை மறுமை. நுகர்வித்தும்= அனுபவிக்கச்செய்வோம். பாசடை= பசுமமையான இலை. மேல் குளிர்தாரகை என என்க. தாரகை= விண்மீன். பெயல் எனவரு= மழைபோல் பொழியும். தண்டலை=சோலை.

**பொழிப்புரை** : முன்னொருகாலத்தில் தேவர்களைச் சினந்த பேராற்றலுடைய மிகஅச்சம்தரும் சூரனாகிய ஒப்பற்ற மாமரத்தைத் திருச்செந்தூரில் விரைந்து வெல்ல நீண்ட கதிர்வீசும் வெற்றிவேலினை வீசியவனே! தன்அடியவர்களைக் கைவிடாமல் அவர்கள் இம்மைமறுமை இன்பங்கள் அனுபவிக்கச்செய்யும் அபய வரதச்செங்கைகளில் வளையல் அணிந்தவனே! செறிந்த மழைமேகம்போல் அடர்ந்த பசுமையான இலைகளும் , அம்மேகங்களிடையே விளங்கும் விண்மீன்களும்போல் தோன்றும் குளிர்ச்சிவிளங்கும் புதுமலர்களும், மழைபோல் சொரியும்தேனும்கொண்ட சோலைகள் நிறைந்த கீழ்வேளூரில்எழுந்தருளியுள்ள பாலமுருகப்பிரானே! சிவபிரான் தந்த கந்தனே! தாலோ தாலேலோ.

**விளக்கம்** : பெருமானின் வலக்கரம் அபயமும், இடக்கரம் வரதமும் குறிக்கும் என்பதுமரபு.

**இலக்கணக்குறிப்பு** : கொண்டல் என........................கொழுவிய தேன் - முற்றுஉருவகவணி.

29. **சந்தவிருத்தம்**

கா(து)ஆர் தோடார் பாலா லோலா கோமானே
காவே தாவே ஆறாமூறா சீராளா
மாதா வேபோல் நாயேன் தாழா(து) ஆள்வோனே
வானோர் வாழ்வே ஞானா காரா தேசானே
வேதா தாலோ தாலே லோகீழ் வேளூர்வாழ்
சேயே தாலோ தாலேலோ தாலோ தாலேலோ
..........................................................................................................
.......................................................................................................... ( 9 )

**குறிப்புரை** : காது ஆர்= காதில் அருமையான. தோடார்= குண்டலமணிந்த சிவபிரான். பாலா= மகனே. லோலா= (அருள்)விளையாடல்புரிகிறவனே. கோமானே= குருவே. காவே= கற்பகச்சோலையே. தாவே= (எங்கும்) பரவி இருக்கிறவனே. ஆறே= அறப்பொருளே. மூரா= புன்முறுவலனே. சீராளா= புகழுடையவனே. நாயேன்= நாய்போல் கீழான என்னை. தாழாது= காலம் தாழ்த்தாது. ஞான ஆகாரா= ஞான வடிவனே. தேசானே= வீரனே. வேதா= கடவுளே. சேயே= குமரனே.

**பொழிப்புரை** : காதில் அருமையான குண்டலம் அணிந்த சிவபிரானுக்கு மகனே! அருள் விளையாடல் புரிகிறவனே! குருவே! கற்பகச்சோலையே! எங்கும் பரவிஇருக்கிறவனே! அறப்பொருளே! புன்முறுவலுடன் விளங்குகிறவனே! புகழுடையவனே! நாயாகிய என்னைக் காலம்தாழ்த்தாது தாய்போல் ஆள்கிறவனே! ஞானவடிவனே! வீரனே! கடவுளே! குமரனே! தாலோ தாலேலோ.

30. வேய்ஊ(து) ஓர்மால் நேயா தாலோ தாலேலோ
வேளே தார்சேர் தோளா தாலோ தாலேலோ
தீயூர் சூர்போர் ஏறே தாலோ தாலேலோ
சேனா பாரா வோரார் தாலோ தாலேலோ
மாயூ ராபா வாணா தாலோ தாலேலோ
மாயா வீடே ஈவாய் தாலோ தாலேலோ
கேயூ ராமா சீரா தாலோ தாலேலோ
கீழ்வே ளூர்வாழ் சேயே தாலோ தாலேலோ. ( 10 )

**குறிப்புரை** : வேய் ஊது மால்= புல்லாங்குழல் இசைக்கும் கண்ணன். நேயா- அன்பனே. வேள்= மன்மதன் - அழகன். தார்= மலர்மாலை. தீ ஊர்= தீமை மிக்க. ஏறு= ஆண்சிங்கம். ஓரார் சேனாபாரா= பகைவரைஅழிக்கும் தேவர் சேனைத்தலைவனே. பாவாணா= அருளாளர் பாக்களில்வாழ்கிறவனே. மாயா வீடு= அழிவில்லா வீடுபேறு. கேயூரம்= தோளணி. மாசீரா= பெரும்புகழனே.

**பொழிப்புரை** : புல்லாங்குழல் இசைக்கும் திருமாலின் அன்பனே! மன்மதனே மலர்மாலை யணிந்த தோளனே! தீமை மிக்க சூரனை வென்ற ஆண்சிங்கமே! பகைவரை அழிக்கும்சேனைத்தலைவனே! மயிலுடையவனே! அருளாளர் பாக்களில் வாழ்கின்றவனே! அழிவில்லாத வீடுபேற்றை விளங்குகிறவனே! தோளணி அணிந்தவனே! பெரும்புகழனே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள குமரனே! தாலோ தாலேலோ.

4. **சப்பாணிப்பருவம்**

31. சேரும்விண் புலமுகடு தொடுகுடுமி நிலவுபொன்
சிகரம்மலி பலமாமணிச்
சித்திரப் பத்திதிகழ் அபரிமித கோமளச்
செல்வம்நிறை மாளிகைதொறும்
காரும்மெச் சியகருங் கூந்தல் பொறைக்(கு)இணைக்
களபமுலைக்(கு) ஒசிமருங்குல்
கன்னிமங் கையர்முன்றில் இடைவைத்து வளர்க்கின்ற
கார்முல்லை மென்கொடியினுக்(கு)
ஆருநற் கொழுகொம்பு நட்டல்கண்(டு) அன்னையர்கள்
அகம்மகிழ்ந்(து) அருமணம்செய்
ஆசைஅறி வித்தனர்கள் என்(று)அளவில் வளநெடுகல்
யாணம்செய் கோலமெங்கும்
சாருநற் பதரிவனம் மேவுசிற் பரகுமர
சப்பாணி கொட்டியருளே
சனகமுனி முதல்முனிவர் பரவுதிரு முருகஒரு
சப்பாணி கொட்டியருளே. ( 1 )

**குறிப்புரை** : நிலவுசேரும் விண்புல முகடுதொடு குடுமி= நிலாவையுடைய வானமுகட்டைத் தொடும் உச்சி. அபரிமிதம்= எண்ணற்ற. கோமளம்= அழகு. காரும் மெச்சிய= கார்மேகமும் பாராட்டும்.. பொறை= அடர்த்தியாலான சுமை. களப இணை= கலவைச்சந்தனம் பூசியஇரண்டு. ஒசி= வளையும். கார்முல்லை= அழகிய முல்லைக்கொடி. ஆரும்= பொருத்தமான.

**பொழிப்புரை** : நிலாவினையுடைய வானமுகட்டைத்தொடும்உச்சியுடன், பொன்னாலாகிப் பலஅழகிய எண்ணற்ற மணிகள் பதித்ததும், சிறந்தசித்திரவரிசை விளங்குவதுமாகிய மாளிகைகள்தோறும், கார்மேகமும் பாராட்டும்படியான கருமையும் அடர்ந்ததால் சுமையுமுடைய கூந்தல்,கலவைச்சந்தனம் பூசியஇருமுலைகளின் கனம் ஆகியவற்றால் வளையும் இடையுடைய கன்னியர், தம்மாளிகை முற்றத்தில் காத்துவளர்க்கின்ற அழகியமுல்லைக்கொடி நன்குபடர, பொருத்தமான நல்லகொழுகொம்பு நடுவதுகண்ட அவர்களின்தாய்மார் மனம்மகிழ்ந்து, சிறந்தமுறையில் மணம்செய்துகொள்ளவேண்டும் என்ற தம்ஆசையை இதன்மூலம் அவர்கள் அறிவித்தார்கள் என்றுஉணர்ந்து மணம்செய்ய அளவற்ற வளமுடனான பெரிய திருமணம்செய்யும் அழகியஇடங்கள் எவ்விடத்தும் பொருந்திய நல்ல கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள மேலானஞானவடிவான அருள்தரு கேடிலியப்பரின் திருமகனே! சப்பாணி கொட்டியருள்க. சனகமுனிவர் முதலான முனிவர்கள் வணங்கும் வாலமுருகனே! ஒப்பற்ற சப்பாணி கொட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் விபாவனை அணியாகும். விபாவனை= வெளிப்படையாகச் சொல்லாத ஒன்றைக் குறிப்பால் ஆய்ந்து அறிதல்.

32. பெருமைபெறு வெண்டிரைச் சீகரச் சாகரப்
பேர்பெற்ற ஏழ்ஆடையும்
பிதிராது தட்டுற்ற ஒருமா நிலக்குமரி
பெறும்ஆ ருயிர்த்தொகைஎலாம்
ஒருமையுடன் நெஞ்சத்து வஞ்சப் பிணக்(கு)அறுத்(து)
உள்ளூறி அள்ளூறுநல்
உரைகொண்டு நின்திரு எழுத்தையும் வழுத்திநயம்
உயர்ஞான வேடம்அணியில்

அருமையுறும் இன்(பு)அருளி அபிமானம் அதிமோகம்
அச்சம்அறி யாமைஇன்னல்
ஆசைமதம் மாற்சரியம் வெகுளி முதல்அணுகா(து)
அகற்றுவிப் பதுநிகர்ப்பத்
தருமம்மிகு பதரிவனம் மருவுசிற் பரகுமர
சப்பாணி கொட்டியருளே
சனகமுனி முதல்முனிவர் பரவுதிரு முருகஒரு
சப்பாணி கொட்டியருளே. ( 2 )

**குறிப்புரை :** சீகரம்= செல்வச்செழிப்பு. சாகரம்= கடல். ஏழ்ஆடை= உப்பு, கருப்பஞ்சாறு, பால், தயிர், நெய், தேன், தூயநீர் ஆகியவற்றைத் தனித்தனி பெற்றகடல் ஆகிய ஆடை.. பிதிராது= கிழியாது. தட்டுற்ற= கட்டிய. ஒருமை= ஒரேதன்மை. நெஞ்சத்து= தமது மனத்தில். பிணக்கு= வேறுபாடு. உள்ளூறி= மனம்கசிந்து. அள்ளூறி= நாவில் இனிமையூறி. திருஎழுத்து= மந்திரச்சொல் - சரவணபவ. வழுத்தி= துதித்து. நயம்= மேன்மை. ஞானவேடம்= ஞானவடிவம். அபிமானம்= செருக்கு. அதிமோகம்= மிக்கபற்று . மதம்= ஆணவம். மாற்சரியம்= பொறாமை. நிகர்ப்ப= போல.

**பொழிப்புரை :** . வெண்மையான அலைகளுடன் பெருமையுடைய செல்வச்செழிப்புடைய கடல்என்னும் புகழ்வாய்ந்த ஏழுஆடைகளையும் கிழியாமல் கட்டிக்கொண்டுள்ளஒப்பற்ற பெரும்பூமியாகிய பெண்பெற்ற சிறந்த உயிர்க்கூட்டம் அனைத்தையும் ஒத்ததன்மையில் நினைத்து, தனதுமனத்தில் தோன்றும் வேறுபாட்டுணர்வாம் வஞ்சனையாகிய நோயினைஅறுத்தெறிந்து; மனம்கசிந்து, நாவில் இனிமைஊறி, உனது மந்திரமாகிய சரவணபவ என்பதைத்துதித்துச் சிறந்த ஞானக்கோலம் தாங்கினால், அத்தகையவர்க்கு இன்பவாழ்வுதந்து, அவர்களிடம் செருக்கு, மிக்கபற்று, அச்சம், அறியாமை, துன்பம், ஆசை, ஆணவம், பொறாமை சினம் முதலியன நெருங்காமல் செய்வதுபோல், அறம்மிக்க கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள மேலான ஞானவடிவான அருள்தரு கேடிலியப்பரின் குமரனே! சப்பாணிகொட்டியருள்க. சனகமுனிவர் முதலிய முனிவர்கள் வணங்கும் அருள்தரு வாலமுருகப்பிரானே! சப்பாணிகொட்டியருள்க.

**விளக்கம் :** கடல் ஏழுவகை என்ற புராணவழக்கினை அருணகிரிநாதரும்
" எழுகடல் மணலை அளவிடின் அதிகம் எனது உயிர்பிறவி அவதாரம் " என்பார். முருகப்பிரானைக் குறிக்கும் சரவணபவசொல் அவனது திருப்பெயரும், அவனுக்குரிய மந்திரமும்ஆகும் என்பதை அருட்டிரு பாம்பன் சுவாமிகள் அருளியுள்ள
" அண்ண லார்**பெயர் ஆறுஅக் கரங்களே** " என்ற மகுடம்கொண்ட" ஆறெழுத்துண்மை " தலைப்புடையபதிகமும், " உன்னைமறக்கினும் **நா சாற்றிடும் சரவணபவவே** " என்ற மகுடம்கொண்ட " திருச்சீரலைவாய் " பதிகமும் உணர்த்தும். ( திருவலங்கல் திரட்டு 7 , 9 பதிகங்கள் )

**இலக்கணக்குறிப்பு :** அபிமானம் ................வெகுளி - எண்ணும்மைத் தொகைகள்.

33. தேன்நனை கேசரத்(து) ஏடுவிரி நாண்மலர்
தெங்(கு)ஒத்(து) இலாதுகாய்க்கும்
செய்யவட தாருவில் துய்யபா சிலைஎனத்
திகழும் ஒருபாய்அவண்
ஊனம்அறு செங்கமல மங்கையொடு துயில்கூரும்
ஓங்குவணம் ஊரும்மாலோன்
உந்தித் தலக்கமலம் உந்திப் பயந்ததிசை
உயர்நான் முகத்துமதுரப்
பான்நன்மொழி வாணிபதி வேதத்தின் ஆதிபழம்
பொருள்சொ லாதமிகையால்
பசியகுடு மித்தலை குலுங்கப் புடைத்தசெம்
பதுமத்தி ருக்கரத்தால்
தானம்மலி பதரிவன வேலசிற் பரகுமர
சப்பாணி கொட்டியருளே
சனகமுனி முதல்முனிவர் பரவுதிரு முருகஒரு
சப்பாணி கொட்டியருளே. ( 3 )

**குறிப்புரை** : தேன் நனைசெய்= தேன்நனைக்கும். கேசரம்= பூந்தாது. தெங்கு= தென்னைமரம். செய்ய வடதாரு= சிறந்தஆலமரம். துய்ய பாசிலை= தூயபசுமையான ஆலிலை. ஒருபாய் எனத்திகழும்= மிகச்சிறந்த பாயாக விளங்கும், அவண்= அதில். ஊனம் அறு= குற்றமற்ற. செங்கமல மங்கை= திருமகள். துயில்கூரும்= அறிதுயில் கொள்ளும். வணம் ஊரும்= அழகுமிக்க. உந்தி= கொப்பூழ். பால்நன்மொழி= பால்போலும் இன்சொல். வாணிபதி= கலைமகள் கணவன். ஆதிப் பழம்பொருள்= ஓங்காரம். மிகை= குற்றம். பசிய= வளமான. குலுங்க= நடுங்க. தானம்மலி= வலிமைமிக்க. செம்பதுமத்திருக்கரத்தால் பசிய குடுமித்தலை குலுங்கப்புடைத்த என்க..

**பொழிப்புரை** : தேனால் நனைக்கப்பெற்ற பூந்தாதுடன் இதழ்மலர்ந்த தென்னைமரம் காய்ப்பது போலில்லாமல் சிறியஉருவுடன் காய்க்கும் சிறந்தஆலமரத்தின் தூய்மையான பசியஆலிலை ஆகியபாயில், குற்றமற்ற திருமகளுடன் அறிதுயில்கொள்ளும் சிறந்த அழகிய நீலவண்ணம்மிக்க திருமாலின் கொப்பூளாகிய இடத்தில் வளரும் செந்தாமரை ஈன்ற சிறந்தநான்முகமுடையவனும், பால்போலும் இன்சொல்பேசும் கலைமகளின் கணவனும் ஆகிய பிரமனை; வேதத்தின் ஆதியாகிய ஓங்காரத்தின் பொருளைச் சரியாகச்சொல்லாத குற்றத்தால், அவனது வளமான குடுமித்தலை நடுங்க, தன்வலிமைமிக்க செந்தாமரைபோன்ற திருக்கரத்தால் குட்டியவனும்,கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ளவனும் ஆகிய வேலனே! மேலான ஞானவடிவான அருள்தருகேடிலியப்பரின் குமரனே! சப்பாணிகொட்டியருள்க. சனகமுனிவர் முதலிய முனிவர்கள் வணங்கும் அருள்தரு வாலமுருகப்பிரானே! சப்பாணி கொட்டியருள்க.

34. விழை(வு)உறச் சந்தனக் காடுமலி மலயமலை
வீற்(று)இனி(து) இருக்கும்மோலி
வேணிப் பசுந்தமிழ் செந்நாப் பெருந்தவ
விதிக்குறு முனிக்(கு)அருளுவோய்
குழையும்உத் தமநேசஅடியர்உளம் அகலாது
குடிகொண்ட பாதவனசம்
கோமளப் பாகர்புய வரைமிசைப் பூப்பவளர்
குழகஅழ(கு) ஒழுகும்வடிவா
கழையும்நெற் பயிரும்மந் தாரமும் சாதியும்
கமுகும்ஆ லும்கதலியும்
கன்னிகா ரங்களும் புன்னையும் சண்பகக்
காவும்மா வும்பனசமும்
தழையும்நற் பதரிவனம் மருவுசிற் பரகுமர
சப்பாணி கொட்டியருளே
சனகமுனி முதல்முனிவர் பரவுதிரு முருகஒரு
சப்பாணி கொட்டியருளே. ( 4 )

**குறிப்புரை** : விழைவு உற= விரும்பத்தக்க. மலயமலை= பொதிகைமலை. மோலிவேணி= வேணிமோலி= சடைமுடி. விதி= அறிவு - ஞானம். பாதவனசம்= திருவடித்தாமரை. கோமளப்பாகர்= அழகை - அம்மையை - இடப்பாகம்கொண்ட சிவபிரான். வளர்= களிக்கும். குழக= இளையவனாகிய முருகனே. கழை= மூங்கில். மந்தாரம்= மந்தாரமரம். சாதி= சிறுசண்பகம். ஆலும்= ஆலமரமும். கதலி= ஒருவகை வாழை.கன்னிகாரம்= கோங்கு. பனசம்= பலா.

**பொழிப்புரை** : விரும்பத்தக்க சந்தனமரங்கள் பெருங்காடாக வளர்ந்த பொதிகைமலையில் இனிதுவாழும் சடைமுடியுடையவரும், பசுந்தமிழ் பேசுகிறநாவினரும், பெருந்தவத்தினரும், ஞானியும் ஆகிய அகத்தியமுனிவருக்கு உபதேசித்தவனே! மனம்குழையும் உத்தமராகிய அன்பர்உள்ளதைவிட்டு நீங்காது வீற்றிருக்கும் திருவடித்தாமரையுடன், அழகியஅம்மையை இடப்பாகம் கொண்ட சிவபிரானின் மலையாகிய தோளில் தோன்றிக்களிக்கும் என்றும் இளையவனே! அழகுஒழுகும் வடிவனே! மூங்கில், நெற்பயிர், மந்தாரமரம், சிறுசண்பகம், பாக்கு, ஆலமரம், வாழை, கோங்கு, புன்னை, சண்பகச்சோலை, மா, பலா முதலியன செழித்த சிறந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள மேலான ஞானவடிவான அருள்தரு கேடிலியப்பர் மகனே! சப்பாணிகொட்டியருள்க. சனகமுனிவர் முதலிய முனிவர்கள் வணங்கும் அருள்தரு வாலமுருகப்பிரானே! சப்பாணி கொட்டியருள்க.

**விளக்கம்** : அகத்தியர்க்கு உபதேசித்தது :

“ஐஆர் தென்பொதியப் பதிஅமர் முனிக்குஇனிய மெய்யா “ ( பாம்பன் சுவாமிகள். திருவலங்கல். அருள்மாட்சிமை. )

35. காதில்இடு வச்சிரக் குண்டலமும் நெற்றியில்
கவின்ஒழுகு பொற்சுட்டியும்
கரியக ஊசியின் வாய்ந்த முச்சியில் சுற்றிவிடு
கதிர்முத்தம் மிளிர்தொங்கலும்
சோதிமய மானதிரு மார்பிற்(கு) இசைந்(து)இலகு
தூமணிப் பொன்ஆரமும்
தோளில்அணி பன்மணிக் கேயூர மும்சிறிய
தொந்திசரி அரைநாணுடன்
சீதம்உறு நாதம்முரல் கிண்கிணித் தொகுதியும்
செந்தளி ரினும்சிவந்த
சீரடித் துணையில்அணி செம்பொற் சதங்கையும்
செய்யநூ புரமும்அசையத்
தாதுகமழ் பதரிவன நீதசிற் பரகுமர
சப்பாணி கொட்டியருளே
சனகமுனி முதல்முனிவர் பரவுதிரு முருகஒரு
சப்பாணி கொட்டியருளே. ( 5 )

**குறிப்புரை** : வச்சிரம்= வைரம். கரியக ஊசி= கருமையான கொண்டைஊசி. முச்சி= தலைஉச்சி. தொங்கல்= மாலை. இசைந்து இலகு=பொருத்தமாக விளங்கும். சிறிய சரி= சிறிதளவு சரிந்த. சீதம் உறு நாதம்= மென்மையான ஒலியால் இன்பம்தரும். நூபுரம்= சிலம்பு. அசைய= பொருந்திஇருக்க. நீதன்= நீதிமான்.

**பொழிப்புரை** : காதில்அணிந்த வைரகுண்டலமும், நெற்றியில் அழகுஒழுகும்பொன்னாலான நெற்றிச்சுட்டியும், கருமையான கொண்டைஊசியிடப்பெற்ற தலைஉச்சிமயிரில் சுற்றிவிட்ட ஒளிபொருந்திய முத்துகள்ஒளிரும் மாலையும், ஒளிமயமாக விளங்கும் அழகியமார்பிற்கு ஏற்ப விளங்கும் சிறந்தமணிகள் பதித்த மணிமாலையும், தோளில்அணிந்த அழகியபலவகைமணிகளால்ஆன தோள்வளையும், சிறியதும் சற்றேசரிந்ததுமான தொந்தியில் அரைஞாணுடன் காதுகுளிர மென்மையாக ஒலிக்கும் கிண்கிணிகளும், செந்தளிரைக்காட்டிலும் சிவந்த சிறப்புடைய இருதிருவடிகளில் சதங்கையும் சிறந்த சிலம்பும் பொருந்தி இருக்க விளங்குகிறவனாய், கீழ்வேளூரில் எழுந்தருளிஇருக்கும் நீதிமானே! மேலான ஞானவடிவனான அருள்தரு கேடிலியப்பரின்மகனே! சப்பாணிகொட்டியருள்க. சனகமுனிவர்முதலிய முனிவர்கள் வணங்கும் அருள்தரு வாலமுருகப்பெருமானே! சப்பாணி கொட்டியருள்க.

36. **வேறு**

தத்துதி ரைக்கடல் உத்தர திக்(கு)அமர்
சமரத்(து) அரிமுகவன்
தானையும் மானமும் ஈனம் உறும்படி
சங்கிராமத் தொழில்செய்யும்
உத்தம மெத்திய பூதக ணாதிபர்
உயர்வீ ரரைஏவி
ஓங்(கு)இர தத்தை நடத்தி எதிர்த்தவன்
ஓராயி ரம்முடியும்
பத்திகொள் கைத்தலம் ஈரா யிரமும்
படஅடு கணைவிட்(டு)அப்
பற்றலன் உயிருண வச்சிரம் உய்த்தருள்
பதுமச் செங்கையினால்
கொத்(து)உறு வெட்சி மலர்த்தொடை வேலவ
கொட்டுக சப்பாணி

கொற்றவ பதரி வனத்(து)உறை சண்முக
கொட்டுக சப்பாணி ( 6 )

**குறிப்புரை** : தத்து= தாவிச்செல்லும். உத்தரதிசை= வடக்குத்திசை. சமரத்து அரிமுகவன்= போர்வல்ல சிங்கமுகாசூரன். ஈனம்= இழிவு. சங்கிராமத்தொழில்= போர்த்தொழில். உத்தம= உயர்ந்தவனே. மெத்திய= புகழ்பெற்ற. ஓங்கு= சிறந்த. முடி= தலை. பட= அழிய. பற்றலன்= பகைவன். வச்சிரம்= வச்சிராயுதம். கொத்துறு= கொத்தாக மலர்ந்த. கொற்றவ= வெற்றியனே.

**பொழிப்புரை** : தாவிச்செல்லும் அலைகளுடையகடலில், வடதிசையிலிருந்துகொண்டு ஆட்சிபுரிந்தபோர் வல்ல சிங்கமுகனுடன் போர்செய்த உயர்ந்தவனே! புகழ்பெற்ற பூதகணத்தலைவர்கள், சிறந்தவீரர்கள் ஆகியோரைஏவி, சிறந்ததேரினைச் செலுத்திப் போருக்குவந்து எதிர்த்த சிங்கமுகனின் ஆயிரம்தலைகளும், வரிசையாக அமைந்த ஈராயிரம் கைகளும் அழியக்கொல்லும் அம்புகளை விட்டு, அப்பகைவனின் உயிரைக்கொல்ல வச்சிராயுதமும் செலுத்திய தாமரைத்திருக்கரத்தால், கொத்தாகமலர்ந்த வெட்சிமலர் மாலையணிந்த வேலனே! சப்பாணிகொட்டுக. வெற்றியனே! ஆறுமுகனே! சப்பாணிகொட்டுக.

37. இலகு மணிச்சுடி கைப்பணி அர(சு)உடல்
எங்கும்வெ யர்த்(து)ஓட
எட்(டு)அர(வு) உட்க நடுங்கி மதகரி
எட்டும்வென் னிட்(டு)அதிர
நிலவு திசைக்கிரி பம்பரம் ஒத்(து)உயர்
நிலமிசை நின்றாட
நேமிப் பெருவரை சுழலக்கதிர்மதி
நெளியக் கடல்சுவறச்
சுலவு முகிற்பட லத்தொடும் அண்டச்
சுவர்பிதிர் உற்(று)உதிரத்
தோன்(று)அவு ணக்குலம் வேரற நீடிய
சோதி மணிக்கலபம்
குலவு மயில்பரி நடவு திறல்குக
கொட்டுக சப்பாணி
கொற்றவ பதரி வனத்(து)உறை சண்முக
கொட்டுக சப்பாணி. ( 7 )

**குறிப்புரை** : சுடிகை மணிஇலகு பணி= தலைஉச்சியில் இரத்தினமணி விளங்கும் ஆதிசேடன். எட்டு அரவு= அநந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன் ஆகிய எட்டுப்பாம்புகள். உட்க= அஞ்ச. கரி எட்டு= எண்திசைகளிலும்இருந்து உலகைத்தாங்கும்எட்டுமதயானைகள்-. ஐராவதம்,புண்டரீகம், வாமனம், குமுதம், புட்பதந்தம்,சாருவம், பூமம், சுப்ரதீபம் என்பன. வென்னிட்டு அதிர= புறமுதுகுகாட்டிஓடி நடுங்க. திசைநிலவு கிரி= எண்திசை மலைகள். நேமிப்பெருவரை= மாமேருமலை. சுலவு= சுற்றும். பிதிர் உற்று= வெடித்து. மணிக்கலபம்= அழகிய தோகை.

**பொழிப்புரை** : தலைஉச்சியில் இரத்தினமணி விளங்கும் ஆதிசேடன் அச்சத்தால் உடல் முழுவதும் வியர்த்து ஓட, எட்டுப்பாம்புகளும் அஞ்சிநடுங்க, எண்திசைகளிலும் இருந்துகொண்டு பூமியைத்தாங்கும் எட்டு மதயானைகளும் புறமுதுகுகாட்டிஓடி நடுங்க, எண்திசை மலைகளும் நிலத்தில் நின்றுகுதிக்க, மாமேருமலை பம்பரம்போல் சுழல, ஞாயிறும் திங்களும் உடல்நெளிய, வானில்சுற்றும் மேகஅடுக்குடன் அண்டத்தின்சுவர் வெடித்துஉதிர, அசுரர்கூட்டவேர் அற்றுப்போக, மிக்கஒளியுடன் விளங்கும் அழகியதோகையுடன் விளங்கும் மயிலாகிய குதிரையைச் செலுத்தித்தோன்றும் ஆற்றல்மிக்க குகனே! சப்பாணி கொட்டுக. வெற்றியனே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகனே! சப்பாணி கொட்டுக.

**விளக்கம்** : இதில்வரும் பாம்புகள், யானைகள் முதலிய புராணவழக்கின.

**இலக்கணக்குறிப்பு** : எட்டுஅரவு, மதகரிஎட்டு -தொகைக்குறிப்புகள்.

38. சீதக் களப உலாசப் புளகிதச் செப்பு முலைத்திருவும்
செந்தமி ழும்திகழ் நன்கலை யும்தரு சீருறு பாரதியும்

ஓதக் கடலமு(து) உரையில் கணவற்(கு) உதவு புலோமசையும்
உள்ளம் உவந்(து)உ வகைக்கட லாடவிண் உம்பர்கள் குடியேற
ஆதிக் கத்துடன் அண்டத் தொகுதியின் ஆணை செலுத்திமனத்(து)
அச்சம் இலிச்சய வச்சிர மிடல்உடல் அச்சூர் உரம்உருவ
கோதைச் சுடர்வடி வேலைத் தொட்டவ கொட்டுக சப்பாணி
கொற்றவ பதரி வனத்(து)உறை சண்முக கொட்டுக சப்பாணி. ( 8 )

**குறிப்புரை** : உல்லாசம்= களிப்பு. புளகித= பருத்த. கடலமுது= தேவாமிர்தம். ஆட=திளைக்க. ஆதிக்கம்= உரிமை. இலி= இல்லாதவன். மிடல்= ஆற்றல். உரம்= மார்பு. கோதை= மாலை. தொட்டவ= எடுத்து ஏவியவனே.

**பொழிப்புரை** : குளிர்ந்த கலவைச்சந்தனம் பூசியதும், பருத்ததும், சிமிழ்ஒத்ததும் ஆகிய முலைகளுடைய திருமகளும், செந்தமிழ், சிறந்தகலைகள் ஆகியவற்றைத்தரும் கலைமகளும், அலைகளுடைய பாற்கடலில் தோன்றிய தேவாமுதத்தையும் தனது சொற்களின் மூலமாகவே கணவற்குத்தரும் இந்திராணியும் மனம்மகிழ்ந்து மகிழ்ச்சிக்கடலில் திளைக்கவும், வானுலகில் தேவர்கள் குடிஏறவும் அருளும்பொருட்டு; உரிமையுடன் அண்டக்கூட்டம் அனைத்தின்மேலும் தனது அதிகாரத்தைச் செலுத்தி, மனத்தில் அச்சமில்லாதவனாய் வாழ்ந்தவனும், வச்சிரம்போல் உடல்பெற்றவனுமாகிய சூரபன்மனுடைய மார்பில் ஊடுருவுமாறு வெற்றிமாலை சூடியதும் ஒளியுடையதுமாகிய வேலினை ஏவியவனே! சப்பாணி கொட்டுக. வெற்றியனே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகனே! சப்பாணி கொட்டுக.

**விளக்கம்** : " ஒருமொழி ஒழிதன் இனம்கொளற்கு உரித்தே" ( நன். 358 ) என்பதால் திரு, பாரதி, புலோமசை ஆகியோர் உவகைக்கடலாட என்றதன்மூலம் அவர்களின் கணவர்கள் அவர்களுடன்கூடி உவகைக்கடலாடியது குறித்தார்.

39. **வேறு**

குறை(வு)அறு மதுரம் விளக்கிய சொல்கிளி ஒப்பான
குறமகள் புளக முலைத்துணை யிற்கள பச்சேறு
நறுமலர் அனைய கரத்தினில் அப்பி நயப்பாக
நறுமுகை விரியு மலர்த்தொடை மைக்குழ லில்சூடி
இறு(கு)இடை நலியும் எனச்சொலி மற்புய வெற்பூ(டு)உள்
இதமுற மருவி பனக்(கு)இது தக்க(து)எ னக்கூறி
மறுவறு கலவி வளர்த்தவ கொட்டுக சப்பாணி
வளம்மலி பதரி வனக்குக கொட்டுக சப்பாணி. ( 9 )

**குறிப்புரை** : மதுரம்= இனிமை. புளகம்= பருமை. கரத்தினில்= கையால். நயப்பாக= விருப்புடன். மைக்குழல்= கருமையான கூந்தல். இறுகு= ஒடுங்கிய. மல்= வலிமை. வெற்பு ஊடு= மலைகளிடையே. இதம்உற= பக்குவமாக. மருவி= அணைத்து. பனக்கு= பெருமைக்கு.

**பொழிப்புரை** : இனிமையைக் குறைவின்றி விளக்குகின்ற கிளிஒத்த சொற்கள்பேசும் வள்ளிநாயகியின் பருத்த இருகொங்கைகளில், கலவைச் சந்தனத்தை மணக்கும் மலர்போன்ற கையால் அப்பி, விருப்புடன் மணக்கும் மொட்டவிழும் மலர்மாலையைக் கருமையான கூந்தலில் சூட்டி, ஒடுங்கியஇடுப்பு வருந்தும்என்று வலிமையான மலைகளாகிய மார்பிடையே பெருமைபொருந்திய உனக்கு இதுவே தக்கதுஎன்று மனம்பக்குவம் அடையுமாறு அணைத்துக் குற்றமில்லாத கலவியை மிகுத்தவனே! சப்பாணி கொட்டுக. வளம்மிக்க கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள குகனே! சப்பாணிகொட்டுக.

**விளக்கம்** : முலையில் களபச்சேறு அப்புதல், கூந்தலில்மலர்மாலை சூட்டல் ஆகிய கலவிக்கு ஆயத்தப்படுத்தும் முன்னோடிகள் என்பர்.

**இலக்கணக்குறிப்பு** : புயவெற்பு ஊடு - ஊடு - ஏழனுருபு.

40. துதிபெறு புலமை நிரம்பிய மெய்ப்புகழ் நற்கீரர்
சொலும்நல கவிதை திருச்செவி வைத்த முதல்தேவ
கதிதரு கருணை பெருக்கிய கட்புல வித்தார

களிஅளி முரல மதுப்பொழி பற்ப மலர்ப்பாத
விதிமுறை ஒழுகும் அவர்க்(கு)ஒரு கற்பக நற்றாம
விரைசெறி நறிய கடப்ப மலர்த்தொடை அற்பாள
மதிஅணி அமலன் அளித்தவ கொட்டுக சப்பாணி
வளம்மலி பதரி வனக்குக கொட்டுக சப்பாணி. ( 10 )

**குறிப்புரை** : நல கவிதை= நலம்தரும் திருமுருகாற்றுப்படை. முதல்தேவ= முதன்மையான இறைவனே. கட்புலம்= பார்வை, வித்தார= மிக்கவனே. பற்பமலர்= தாமரைமலர். நற்றாம= சிறந்த மாலை யணிந்தவனே. விரை= பூந்தேன். அற்பாள= அன்பினை வழங்குகிறவனே. வலம்= வெற்றி.

**பொழிப்புரை** : போற்றப்பெறும் புலமைநிரம்பிய மெய்யான புகழ்வாய்ந்த நற்கீரர், பூதத்தால் சிறைப்பட்ட அனைவரும் விடுதலைபெறச் சொன்ன திருமுருகாற்றுப்படையைக் கேட்டருளிய முதன்மையான இறைவனே! நற்கதிவழங்கும்கருணையைமிகுதியாக வழங்கும் அருட்பார்வை மிக்ககவனே! வண்டுகள் களிப்புடன் முரல, தேன்பொழியும் தாமரைபோன்ற திருவடியனே! அடியவர்க்குவிதிக்கப்பெற்ற முறைப்படி இடையறாது வாழ்பவர்க்கு ஒப்பற்ற கற்பகமரமாக அருள்கிறவனே! பூந்தேன் மிக்க நறுமணம் கமழும் கடப்பமாலையணிந்து அன்பினை ஆள்கிறவனே - அருள்கிறவனே! பிறைசூடியவனும் மலமில்லாதவனுமாகிய அருள்தரு கேடிலியப்பர் மகனே! சப்பாணிகொட்டுக. வலம்மலிந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள குகனே! சப்பாணி கொட்டுக.

**இலக்கணக்குறிப்பு** : அன்பாள என்பது அற்பாள என்றானது செய்யுள்விகாரம்.

### 5. முத்தப்பருவம்

கன்னல் சுவையும் தனிமதுரம் கனிந்த கதலிக் கனிச்சுவையும்
கனகப் பொகுட்டுச் சிவந்தஇதழ்க் கமலத்(து) எழுந்த தேன்சுவையும்
பின்னல் தரங்கப் பயோததியில் பிறந்த அமுதத்(து) அரும்சுவையும்
பிணியின்(று) உயர்ந்த வேய்ங்குழலில் பிறங்கும் இசையின் நறும்சுவையும்
வன்னத் திவவும் ஆடகயாழ் மன்னும் பசிய நரம்பிசையின்
வாய்ந்த சுவையும் மிகநாண மருவு மழலை வார்த்தையினால்
முன்னைப் பொருளுக்(கு) உபதேசம் மொழிவாய் முத்தம்தருகவே
முரு(கு)ஆர் தருஆர் இலந்தைவன முருகா முத்தம் தருகவே. ( 1 )

**குறிப்புரை** : கன்னல்= கரும்பு. தனி= ஒப்பற்ற. பொகுட்டு= தாமரைக்கொட்டை. பின்னல்= தொடர்ந்த. பயோததி= பாற்கடல். பிணி= முறுக்குதல். திவவு= யாழின் நரம்புகளை வலிமையுடன் முறுக்கிக்கட்டும் யாழ்உறுப்பு - முறுக்காணி. மன்னும்= பெருமைபொருந்திய. நாண= வெட்க. மருவு= பொருத்தமான. முன்னைப்பொருள்= ஓங்காரம். மொழிவாய்= கூறியவாய். முருகு= அழகு.

**பொழிப்புரை** : கரும்பின் சுவை, ஒப்பற்ற இனிமைகனிந்த கதலிவாழைக்கனியின் சுவை, பொன்னிறத் தாமரைக்கொட்டையும், சிவந்த இதழ்களுமுடைய செந்தாமரைத்தேன் சுவை, தொடர்ந்துஎழும் அலைகளுடைய பாற்கடலில் பிறந்த அமுதத்தின் அரியசுவை, முறுக்குதல் இல்லாமல் சிறந்துவிளங்கும் புல்லாங்குழலில் பிறக்கும் இனியஇசைச்சுவையும், ஆடகப்பொன் அழகுடன் விளங்கும் திவவினால் வலிமையாகக் கட்டப்பெறும் சிறந்தநரம்பின் இசையும் ஆகிய அனைத்தும் வெட்குமாறு பொருந்திய மழலைபேச்சால், ஓங்காரப்பொருளை உபதேசித்த வாயால் முத்தம் தருக. அழகியமரங்கள் நிறைந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு முருகப்பிரானே முத்தம்தருக

**இலக்கணக்குறிப்பு** : சுவையும் சுவையும்...... என்றுவரும் உம்மைகள் எண்ணும்மைகள்.

2. வழங்கும் பெரிய திசையில் உயர் வடவேங் கடம்தென் குமரிசுடர்
வயிரப் படையோன் திசைஅளக்கர் மகரம் உயர்த்தோன் பெருந்திசையின்
தழங்கும் கடலென்(று) உரைத்த எல்லை தன்னின் வழங்கும் தீந்தமிழும்
சகல புவனம் பொதிந்த அண்டத் தலங்கட்(கு) உரித்தாம் வடமொழியும்
பழங்குஞ் சரஈர் உரிபோர்த்த பரமன் சொலும்ஆ கமப்பொருளும்
பகர்நால் வேதப் பலபொருளும் படிக்கும் ஏனைப்பலபொருளும்
முழங்கும் பவளத் துவர்வாயால் முத்தம் தருக முத்தமே

முரு(கு)ஆர் தருஆர் இலந்தைவன முருகா முத்தம் தருகவே. ( 2 )

**குறிப்புரை:** பெரிய திசை- கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு. வயிரப்படையோன்= இந்திரன். மகரம் உயர்த்தோன்= மீன்கொடியுடைய.மன்மதன். அளக்கர்= உலகம். உயர்த்தோன் பெருந்திசை= மீன்கொடியுடைய மன்மதனின் மேற்குத்திசை. தழங்கும்= முழங்கும். பொதிந்த= அடக்கிய. தலம்= இடம் - உலகங்கள். பழங்குஞ்சரம்ஈர் போர்த்த= முற்காலத்தில் யானைத்தோல் போர்த்த.

**பொழிப்புரை :** பெருந்திசைகளாகிய வடக்கு தெற்கு கிழக்கு மேற்கு ஆகியவற்றில் சிறந்த வடதிசையில்உள்ள.திருவேங்கடம், தெற்கிலுள்ள குமரி, ஒளிரும் வச்சிரப்படையுடைய இந்திரனுக்குரிய கிழக்கு, உலகில் மீன்கொடியுடைய மன்மதனின் மேற்கு ஆகியவற்றிடையே உள்ளகடலினை எல்லையாக உடையநிலத்தில் வழங்கும் இனியதமிழ், அனைத்துஉலகங்களையும் தன்னுள் அடக்கிய அண்டத்தில்உள்ள இடங்கள் ஆகியவற்றுக்குரிய வடமொழி, முற்காலத்தில் யானையின் தோலினைப்போர்த்த சிவபிரான் அருளிய ஆகமங்களின்பொருள், நால்வேதங்கள் கூறும் பலபொருளும், மற்றும் நாம்படிக்கும் பிறபொருள்களையும், வெளிப்படக்கூறும் முத்தாக விளங்குகி றவனே! பவளம்போன்ற செவ்வாயால் முத்தம்தருக. அழகுடையமரங்கள்நிறைந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு முருகப்பெருமானே! முத்தம்தருக.

**விளக்கம் :** இது கூறும் பண்டைத்தமிழக எல்லையை; :

" வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅது உருகெழு குமரியின் தெற்கும்
குணாஅது கரைபொரு தொடுகடல் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும் " ( புறம். 6: 1- 4 )

என்றுகுறிக்கிறது.

தமிழ்நாடு தவிர அண்டமெங்கும் வடமொழிஎன்றது வடமொழியாளர்கூற்று..

43. வழுவை கருமா மருப்புமுத்தும் வனைக்கார் கமுகு கழைமுத்தும்
வனசம் கரும்பு மதிமுத்தும் மாதர் மிடற்றின் வருமுத்தும்
தொழுதி அரவின் முத்தாம சொரிமுத் தமும்மீன் தலைமுத்தும்
சுரைபி எயிற்றின் நந்தின்முத்தும் சொல்லும் கார்நெல் உடும்புமுத்தும்
விழுது படுநீர்க் குரண்டம்இப்பி மேவுமுத்தும் விலைப்பட்டு
மேனி துளையுண்டு இனிமையின்றி வெளிறும் கருவாய் முத்தம்அந்தோ
முழுதும் இனிய உனது செவ்வாய் முத்தம் தருக முத்தமே
முரு(கு)ஆர் தருஆர் இலந்தைவன முருகா முத்தம் தருகவே. ( 3 )

**குறிப்புரை :** கருமா வழுவை= கரிய விலங்காகிய யானை. வனைக்கார்= அழகிய கார்மேகம். கழை= மூங்கில். வனசம்= தாமரைமலர் மதி= நிலவு. மிடறு= கழுத்து. தொழுதி= கூட்டமான. முத்தாம= முதிர்ந்த உடம்பு. சுரபி= பசு. நந்தின்= சங்கின். சொல்லும் கார்நெல்= புகழ்பெறும் அழகியநெல்கதிர். குரண்டம்= கொக்கு. இப்பி= முத்துச்சிப்பி. விலைப்பட்டு= விலை நிர்ணயிக்கப்பெற்று. இனிமை= அழகு. கருவாய் வெளிறும்= கருநிறம்பெற்று அழகில்குன்றும்.

**பொழிப்புரை:** கரிய விலங்காகிய யானைமருப்பில் தோன்றும் முத்தும், அழகிய கார்மேகம், பாக்குமரம், மூங்கில்ஆகியவற்றில் தோன்றும் முத்தும், தாமரைமலர், கரும்பு, நிலா, மகளிர்கழுத்து, கூட்டமானபாம்பின் முதிர்ந்தஉடம்பு ஆகியனசொரியும் முத்தும், மீனின்தலை, பசுவின் பல், சங்கு, புகழப்பெறும் அழகியநெல், உடும்பு, சேற்றுநீரில்திரியும்கொக்கு, சிப்பிமுதலியவற்றில்கிடைக்கும் முத்துகள் ஆகியனவிலைநிர்ணயத்துடன் துளையிடப்பெற்றும், கருநிறம்பெற்றும் அந்தோ! தன்அழகில்குன்றும். ஆனால் எக்காலமும் முழுவதும் இனிமையுடைய உன்செவ்விதழ் முத்தம் தருக. அழகியமரங்கள் நிறைந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு முருகப்பெருமானே! முத்தம் தருக.

**விளக்கம் :** முத்துப்பிறக்கும் இடங்களாக இங்குக்கூறப்பெற்றவற்றுள் முத்துச்சிப்பியில் சங்கில் பிறக்கும்முத்தே உண்மைமுத்து. பிற மரபுவழிகூறப்பெறுவன.

44. உடுவிண்(டு) அடுத்த குவட்(டு)இமயத்(து) ஓங்கும் அரசற்(கு) ஒருமகளாம்
உரிமைப் பிராட்டி தனதுமனம் உவந்து முலைப்பால் கறந்(து)ஊட்டித்
தொடுகை மணக்கும் நெய்பூசித் தூதுவர்இட்(டு) இளவெந் நீராட்டித்

துகிலால் ஈரம் புலர்த்திமஞ்சள் தோய்வேப் பிலைநீர் சுற்றியபின்
குடுமி திருத்தி நீறணிந்து குலவும் நிலக்காப்(பு) அணிந்துமுத்தம்
கொள்ளக் கனிவாய் முத்தம்அரன் கொள்வான் குனியும் அமையத்தின்
முடிகொள் நதித்தாய் முத்தமிடு முத்தம் தருக முத்தமே
முரு(கு)ஆர் தருஆர் இலந்தைவன முருகா முத்தம்தருவே ( 4 )

**குறிப்புரை** : உடு விண்டு= விண்மீனைப் பிளந்துகொண்டு, தொடுகை மணக்கும் நெய்= தொட்டகை மணக்கும் தைலம். தூதுவர்= கலப்பில்லாத துவர்ப்புடைய சிகைக்காய்மஞ்சள்தோய் வேப்பிலைநீர்= ஆலாத்தி நீர். குடுமி= தலைமுடி.

**பொழிப்புரை** : விண்மீனைப் பிளந்துகொண்டு மேலோங்கிய இமயமலையை ஆளும்சிறந்த அரசனாகிய இமவானுக்கு ஒரேமகளான உரிமையுடைய பார்வதிதேவி, தொட்டகையை மணக்கச்செய்யும் எண்ணெய் உனக்குத் தடவி, துவர்ப்புடைய சிகைக்காயால் எண்ணெய்ப்பசை போக்கி இளவெந்நீரால் குளிப்பாட்டி, தூயஆடையால் துவட்டி ஈரம்போக்கி, வேப்பிலையிட்ட மஞ்சள் நீரினால் ஆலாத்தி சுற்றியபின், தலைமுடிசீவி, நிலத்தைத்தொட்டு மண்காப்பிட்டு, தனதுமனம்மகிழ்ந்து முலைப்பால் கறந்து ஊட்டியபின், முத்தமிடச் சிவபிரான் குனியும்போது கட்டாணி முத்தாக விளங்குகிறமுருகனே! சிவபிரானின் முடியிலுள்ள கங்கைத்தாய்க்கு முத்தமிடும்நீ முத்தம்தருக. அழகியமரங்கள் நிறைந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானே! முத்தம்தருக.

**விளக்கம்** : அம்மை, உண்ணாமுலையம்மை - யாராலும் பால்பொருட்டுச் சுவைக்கப்பெறாத முலையினள் ஆதலின்கறந்து ஊட்டி என்றார். குழந்தையை நீராட்டுமுன் அதன் தலைக்குச் சிறிது எண்ணைதடவும் மரபுண்டாதலின் இடையில் ....... இவ்வாறு புள்ளியிட்ட இடம் **நெய்** என்றசொல்லால் நிரப்பப்பெற்றது.

**இலக்கணக்குறிப்பு** : தொடுகை - வினைத்தொகை. கொள்வான் - வான் ஈற்றுவினைஎச்சம்.

45. கத்தும் தரங்கம் மணிகொழிக்கும் கடல்சூழ் உலகும் வானுலகும்
கதிர்வெங் குலிசத் தவன்முதலோர் காணி களுமாம் திசைகள்ஒரு
பத்தும் கலங்க வரும்புரத்தைப் பலிசெய் நகையின் வெம்மையும்தண்
பனியைத் துரக்கும் கடுங்கிரணப் பகலோன் எனும்கண் வெம்மையும்சீர்
மெய்த்தும் பகழி மதன்உடலம் வெதும்பப் பொடித்த திருநுதலின்
விழிவெம் மையும்தீர்ந் தான்மேனி மிகவும் குளிர்ந்து புளகம்எழ
முத்தம் கொடுக்கும் கனிவாயால் முத்தம் தருக முத்தமே
முரு(கு)ஆர் தருஆர் இலந்தைவன முருகா முத்தம் தருகவே.

**குறிப்புரை** : கத்தும் தரங்கம்= முழங்கும் அலைகள். குலிசத்தவன்= குலிசப்படையுடைய இந்திரன். காணி= காணிக்கை. திசை பத்து= முதன்மைத்திசை 4 + கோணத்திசை 4 + கீழ் மேல்திசைகள் 2 = 10. புரம்= முப்புரம். பலிசெய= நீறாக்க - சாம்பலாக்க. நகை= புன்முறுவல். துரக்கும்= ஓட்டும். கண்வெம்மை= ஞாயிறாகிய வலதுகண் வெப்பம். சீர்மெய்த்தும்= சிறப்பை மெய்ப்பிக்கும். பகழிமதன் உடலம்= அம்புகள் உடைய மன்மதன் உடம்பு. பொடித்த= நீறாக்கிய. தீர்ந்தான்= தீர்ந்தசிவபிரான். புளகம் எழ= மெய்மயிர் பொடிப்ப.

**பொழிப்புரை** : முழங்கும் அலைகளால் முத்துகளைக் கரையில்ஒதுக்கும் கடல்சூழ்ந்த பூவுலகமும், வானுலகமும், ஒளிரும்குலிசப்படை ஏந்திய இந்திரன் முதலியவர்கள் இட்ட காணிக்கைகளாகிய பத்துத்திசைகளும் மனம்அஞ்ச, அனைத்தையும்அழிக்கவரும் முப்புரங்களை நீறாக்கிய சிவபெருமானின் புன்முறுவல் வெம்மை, குளிர்ந்த பனிஓட்டும் கடுமையான சூரியன் ஆகிய வலதுகண்வெப்பம், தனது சிறப்பினை மெய்ப்பிக்கும் மலரம்புகளுடைய மன்மதனின் உடம்பு அழியநீறாக்கிய நெற்றிக்கண் வெப்பம் ஆகியன தீர்ந்து உடம்பு மிகக்குளிர்ந்து மயிர்க்கூச்செறியவந்த சிவபிரானுக்கு முத்தம்கொடுக்கும் கட்டாணிமுத்தே! உன்கொவ்வைக்கனி ஒத்தஇதழினால் முத்தம் தருக. அழகியமரங்கள்நிறைந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகனே! முத்தம் தருக.

**விளக்கம்** ; சிவபிரானின் நுதற்கண் தீ, இடக்கண் நிலா, வலக்கண் சூரியன் என்பதுமரபு. குழந்தையைக்காணவந்த சிவபிரான், மன்மதனை எரித்த நுதற்கண் தீ, வலக்கண் ஞாயிறு ஆகியவற்றின் வெப்பத்துடன், முப்புரம் எரித்த புன்முறுவல் தீயும் தீர்ந்துவந்ததாகக் குறித்தார்.,

சிவபிரான் முப்புரம் எரித்ததை " முப்புரம் எரித்த அச்சிவன் " என்பார் அருணகிரியார். " மூஎயில் செற்ற ஞான்று " என்று ஏழாம்திருமுறை திருப்புன்கூர்ப் பதிகம் 8 குறிக்கும்.

" முப்புரம் என்பது மும்மல காரியம் " என்பார் திருமூலர்.

**இலக்கணக்குறிப்பு** : கனிவாய் - உவமத்தொகை. வாய் - முதலாகுபெயர்.

46. குடம்மானும் மடிசுரந்(து) ஆன்கன்றை உன்னமென் குவிமுலை சொரிந்தபாலும்
கொள்ளுநகை மனமிசைக் கற்பிலகு சிற்றிடைக் கொங்கையுடை மாதர்பகரும்
இடம்மீது சிந்துவெண் தயிரும்நறு நெய்யும்அயல் ஏர்வளமை மள்ளர்தத்தம்
இனியமட மாதர்மொழி ஒப்புஎன்ற குறைதவிர எந்திரத் தனிஆலையிட்(டு)
அடல்போல ஆட்டுபைங் கன்னலின் சாறும்நறை அம்புய மலர்த்தேறலும்
அலைமோது நதிகால்கள் குளம் மேவு நீரும்நிறை(வு) ஆயஅரி ஒன்றலாகக்
கடல்ஆறும் எனமன்னு பதரிவனம் வருமுருக கனிவாயின் முத்தம்அருளே
கனகாச லப்பெண்அருள் அனகா சிலைக்குமர கனிவாயின் முத்தம்அருளே.

**குறிப்புரை** : குடம்மானு= குடம்போன்ற. ஆன்= பசு. நகைகொள்ளும்= மகிழும். பகரும்= விலைகூறி விற்கும். சிற்றிடைக் கொங்கையுடை மாதர் அயல் ஏர்வளமை மள்ளர்தம் இனியமட மாதர்மொழிம் குறைதவிர ஒப்பு - என்றுகூட்டுக. அடல்= கொல்லல். நறை= தேன். நதி கால்கள் குளம் மேவு= ஆறு கால்வாய் குளம் ஆகியவற்றை அடைந்து. நிறைவு ஆயநீர் அரியும் ஒன்றல்= நிறைந்த நீர் அதன்நிறம் ஆகியன ஒன்றாகக் கலத்தல். மன்னு= பெருமைபொருந்திய. கனகாசலப்பெண்= மேருமலையில் தோன்றிய பார்வதி தேவி. அனகா= இறைவனே.

**பொழிப்புரை** : குடம்போல் பருத்தமடியுடைய பசு, தன்கன்றினை நினைத்ததும் சொரிந்தபாலும், மகிழும் மனத்தில் கற்புச்சிறந்துவிளங்கும் சிறியஇடையும் முலையும்ஆகியனபெற்ற ஆய்ச்சியர் தயிர் நெய் ஆகியவற்றின் விலைகூறி தரும்போது சிந்துமாறுதரும் - விற்கும் ஆய்ச்சியர் சொல்லுக்கு, ஏரினால் நிலத்தை வளப்படுத்தும் உழவர் பெண்களின் இனியசொல்லுடன் இளமைபொருந்திய மகளிரின்சொல்லும் கரும்பாலையில் வைத்து நெருக்கிக்கொல்லப்பெறும் வளமான கரும்புச்சாறும் குறையின்றி ஒப்பாகும். மேலும், கரும்பைச் சாறுபிழி இயந்திரத்திலிட்டுப் பிழிந்தகரும்புச்சாறும், மணக்கும் தாமரைமலர்த்தேனும் அலைமோதும் நதி, கால்வாய்கள், குளங்கள் ஆகியவற்றை நிரப்பியதாலான நீரும்தம்முள் கலந்ததால் அவ்விடங்கள் கடலும் ஆறும்போல் விளங்கும்பெருமைபொருந்திய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தருமுருகப்பிரானே! உனது கொவ்வைக்கனிஒத்த இதழினால் முத்தம்தருக. பொன்மலையாகிய இமயமலைப்பெண் - பார்வதிதேவி அருளிய இறைவனே! மலைகளில் எழுந்தருளியுள்ள குமரா! உன்கொவ்வைக்கனி ஒத்த இதழினால் முத்தம் தருக.

**விளக்கம்** : இமயமலைப்பனிச்சிகரங்கள், காலைஇளம்பரிதியின் பொன்னொளிபட்டுப் பொன்னாகப் பொலிகின்றன. ஆதலால் இமயமலையைக் கனகாசலம் என்று சொன்னார்.

**இலக்கணக்குறிப்பு** : மானும் - உவமஉருபு. நதி கால்கள் குளம்- எண்ணும்மைத்தொகைகள்.

47. பாரவர் மதிக்கும்மண வாரம்நிறை முலையினால் பண்புறு குறிஞ்சிநிலனும்
பண்ணுகளி வண்டர்இசை பாடிஉழை தோன்றிஅமர் பைங்குழலின் முல்லைநிலனும்
வாரம்நிகழ் வஞ்சிஉறு காஞ்சிமிசை மன்னிஎழில் வளர்கரு நிலப்போகம்ஆர்
வளமைதர லால்இலகு மருதநில னும்பெருமை வாய்ந்துநெடு வேலைமோதி
சாரமறு நிலத்தை உற்றவிழி இணையினால் தட்பம்மிகு நெய்தல்நிலனும்
சாற்றுமொழி யால்வெய்ய பாலையும் காட்டிவரு தையலார் விளையாடுசிங்
காரமொடு சீரும்மலி பதரிவனம் வருமுருக கனிவாயின் முத்தம்அருளே
கனகாச லப்பெண்அருள் அனகா சிலைக்குமரா கனிவாயின் முத்தம்அருளே.

**குறிப்புரை** : பாரவர்= உலகோர். மணம்= நன்னிலை. வாரம்நிறை= திரட்சி மிக்க. களி= களிப்பு. வண்டர்= வண்டுகள். உழை= பூஇதழ். களி பண்ணு= களிப்பினை உண்டாக்கும்.உழைதோன்றி= பூவிதழில் தோன்றி. பைங்குழலில் அமர்= வளமான கூந்தலில்சூடிய((முல்லை)மலரில்)அமர்தல். வாரம் உறு வஞ்சி= அன்புடைய பெண். காஞ்சி= இடையில் அணியும் அணிகலன். மிசை= மேலே. எழில்மன்னி= அழகுடன் உயர்ந்து. கருவளர் போகநிலம்= கருவை வளர்க்கும் இன்பம்தரும் நிலம் - அல்குல். வேலைமோதி=

கண்ணாகிய வேலால் குத்தி. சாரம்= இனிமை. நிலத்தை= (ஆடவர் மனமாகிய) நிலத்தினை. விழி இணை= இருவிழி. தட்பம்= குளிர்ச்சி. சாற்றுமொழி= சொல்லும் சொல். சிங்காரம்= அழகு.

**பொழிப்புரை :** உலகவர் மதிக்கின்ற நன்னிலையும்திரட்சியும் மிக்க முலைகளால் குறிஞ்சி நிலத்தையும், களிப்புடைய வண்டுகள் முரன்று வளமான கூந்தலில் சூடிய முல்லைமலரிதழ்களின் அருகில் தோன்றி அதில்அமர்வதால் முல்லைநிலத்தையும், அன்புடைய பெண்களின் இடையணியாகிய காஞ்சியணியின் மேட்டிடத்தில் அழகா ய்இருந்துகொண்டு கருவைவளமாக வளப்பதுடன் அதன்பொருட்டு இன்பமுமதரும் இடத்தால் (அல்குலால்) மருதநிலத்தையும், இன்பமின்றிக்கிடக்கும் பிறர்மனநிலையைத்தன் நீண்டகண் வேலால்குத்திக் குளிர்ச்சியுடையதாக்கும் குளிர்ச்சிபொருந்திய நெய்தல் நிலனும், சொல்லும் சொல்லால் பாலைநிலனும் போல் தம்மைக்காட்டிவரும் மகளிர்விளையாடும் அழகுடன் சிறப்பும்மிக்க கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு முருகப்பெருமானே! முத்தம்தருக. பொன்மலையாகிய இமயமலையில் தோன்றிய பார்வதிதேவி அருளிய இறைவனே! மலைகளில் எழுந்தருளிய குமரனே! கொவ்வைக்கனி போன்ற இதழ்களால் முத்தம் தருக.

**விளக்கம் :** விளையாடும் கீழ்வேளூர்ப்பெண்களை, முலைகளால் குறிஞ்சியாகவும், தலையில் சூடியமுல்லைமலர்களால் முல்லையாகவும், போகத்தால்மகவுவளம் தரும்அல்குலால் மருதமாகவும், கண்பபார்வையால் குளிர்ச்சிதருவதால் நெய்தலாகவும், விளையாட்டில் கடுமையாகப்பேசும் சொற்களால் பாலையாகவும் உருவகித்தார்.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் முற்றுருவகவணி.

48. வானமுறு கின்னர முதற்பறவை இனமெலாம் மருளுற்று நிலம்வீழவும்
வானவரும் மன்னவரும் எழுதுசித் திரம்என்ன மன்னிஅசை வற்றமாவும்
பேனமுது வாரிமுதல் ஆனபுனல் யாவையும் பெற்றஒலி அற்(று)அமையவும்
பின்னமொடு பட்டமர மும்தளிர் துதைந்(து)அலர் பிறங்கிமீ மிசைவளரவும்
ஈனம்உறு வன்கல்லும் நவநீத மாய்உருகி இறுகா(து) இருந்துவிடவும்
எண்ணரிய பண்ணும்ரா கமும்உருவம் ஆனஎழில் ஏந்திழைக லார்கள்பாடும்
கானம்உறு புரிசைமலி பதரிவனம் வருமுருக கனிவாயின் முத்தம்அருளே
கனகாச லப்பெண்அருள் அனகாசி லைக்குமர கனிவாயின் முத்தம்அருளே. ( 8 )

**குறிப்புரை :** வானம் உறு= வானில் பறக்கும். கின்னரம்= இசையில் மயங்கும் ஒருவகைப்பறவை. அசைவற்ற= அசையாதவராக. மா= விலங்கு. பேனம்= நுரை. பின்னம்= வெட்டப்பெற்ற குறை. பிறங்கி= விளங்கி. மீமிசை= மேன்மேலும். ஈனம்= கீழ்ப்பட்ட. நவநீதம்= வெண்ணெய். உருவம்= வடிவம். ஏந்திழை= அழகிய மகளிர். கானம் உறு= இசைப்பாட்டு மிக்க.

**பொழிப்புரை :** வானில் பறக்கின்ற கின்னரப்பறவை முதலிய பறவைஇனம் அனைத்தும் மனம்மயங்கி நிலத்தில்விழவும், தேவர்களும் அரசர்களும் தீட்டப்பெற்ற ஓவியம்போல் அசையாதிருக்கவும், விலங்குகளும், நுரையுடைய கடல்நீர் முதலிய நீர்நிலைஅனைத்தும் அலையால் தமக்குரிய ஒலிஎழுப்பாது இருக்கவும், வெட்டப்பட்டதால் குறைவுபட்டனவும் பட்டுப்போனவையும் ஆகிய மரங்களும் தளிர்விட்டு மேன்மேல்வளர்ந்து மலர்கள் செறியவும், இழிந்த வன்மையானகல் வெண்ணெய் போல் உருகியபின் முன்போல் இறுகாமல் இருக்கவும் செய்யக்கூடிய எண்ணற்றசிறந்த பண் இராகம் ஆகியவற்றையே தம்வடிவாகக் கொண்டுவிளங்கும் அழகியபெண்கள் பாடும் இன்னிசைஒலிமிக்க மதில்சூழ் வீடுகளுடைய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலமுருகப்பிரானே! உன் கொவ்வைக்கனி போன்ற இதழ்களால் முத்தம் தந்தருள்க. இமயமலையில் தோன்றிய பார்வதிதேவி தந்த இறைவனே! மலைகளுக்குஉரிய குமரனே! உன்கொவ்வைகனிபோன்ற இதழ்களால் முத்தம்தருக.

**விளக்கம் :** தினைப்புனத்தில் தினைப்பயிர் தின்னும் யானை, புனம்காவல் செய்யும் மகளின் இன்னிசையினால் பயிரைத்தின்னாது மெய்ம்மறந்து நின்றது என்பது அகநானூறு தரும் செய்தி. நம் அண்ணமலைப்பல்கலைகழகம் இசையினால் பயிர்கள் மேலும்நன்குவளரும் என்று ஆய்ந்துகண்டது நாமறிந்த செய்தி. குன்றக்குடி வயலின்மேதை வைத்தியநாதன் தன்வயலின் இசையால் அவையினை ஆட்டிவைத்ததும் நாம்கண்டதே. பாடுவோரையும் கேட்போரையும்அது, தன்னுடன் இசைவிப்பதால் இசைஎன்றுபேர்பெற்றது.

**இலக்கணக்குறிப்பு :** புரிசை - சினையாகுபெயர்.

49. அகர உகர வடிவமுடைய அமலர் புதல்வ சிற்குண

அரிய பெரிய எவையும் அருள்செய் அருளின் உருவ கற்பக
மகவிண் அதிபன் உரிய குமரி மகிழும் இனிய பொற்புய
மறவர் சிறுமி மழலை மதுர வசனம் உரைசெய் விற்பன
சகல புவன சமுக தலைவ சதுர மறையின் உத்தம
சரவ ணபவ நிலவு குலவு சடிலர் விழியின் உற்பவ
முகரம் மருவு பதரி வனசண் முகவ தருக முத்தமே
முதிரும் அமுத மதிய வதன தருக முத்தமே. ( 9 )

**குறிப்புரை** : அகர உகர வடிவமுடைய அமலர்= அகரம் உகரம் ஆகியவடிவம் உடைய என்றும் மலமில்லாதவராகிய சிவபிரான். சிற்குண= ஞானவடிவனே. மக விண் அதிபர்= மிகப்பெரிய வானுலக அதிபனாகிய இந்திரன். குமரி= மகள் - தெய்வயானையம்மை. மறவர் சிறுமி= வள்ளிநாயகி. உரைசெய் விற்பன= புகழும் ஞானியே. சமுகம்= கூட்டம். நிலவு= பிறைநிலா. சடிலர்= சடையுடைய சிவபிரான். முகரம்= சங்கு. முகவ= முகனே.

**பொழிப்புரை** : அகர உகர வடிவில் எழுந்தருளும் இயல்பாகவே மலமில்லாத சிவபிரான்மகனே! ஞானமேகுணமாக உள்ளவனே! அரியதும் பெரியதும்ஆகிய எதனையும் அருளும் அருள்வடிவனே! வேண்டுவார் வேண்டுவன அருளும் கற்பகமே! பெரிய வானுலக அதிபன் இந்திரனுக்குமகளாகிய தெய்வயானையம்மை தழுவி மகிழும் இனிய அழகியதோள்களுடையவனே! வேட்டுவர்குலச்சிறுமியாகிய வள்ளிநாயகி இன்சொற்களால் புகழும்ஞானியே! அனைத்து அண்டங்களில் வாழும் உயிர்க்கூட்டத்துக்குத் தலைவனே! நான்குமறைகளால் போற்றப்பெறும் உத்தமனே! சரவணப்பொய்கையில் தோன்றியவனே! பிறைநிலா விளங்கும் சடையுடைய சிவபிரான் விழியில் தோன்றியவனே! சங்குகள் வாழும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகனே! முத்தம் தருக. கலைகள்முதிர்ந்த அமுதமயமான நிலவுபோன்ற முகமுடையவனே! முத்தம் தருக.

**விளக்கம்** : சிவபிரானின் அருஉருவத்திருமேனியில் - சிவலிங்கத்தில் - அமைந்தபீடம் விந்து என்றும், அதில்அமைந்த பாணம் நாதம் என்றும்போற்றப்பெறுவது மரபு. அகரம் பாணம், உகரம் விந்து. இதனைத் திருமந்திரம்,

" விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம், விந்துவதே பீடம் நாதம் இலிங்கமாம் " என்னும். இது அருஉருவாய் அமைந்த சிவலிங்கத்திருமேனியைக்குறிக்கும்.

" அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு " என்பது தமிழ்மறை.

இத்திருக்குறள், எழுத்துகளுக்கு அகரம் ஒன்றாய் உடனாய் வேறாய் நின்று உதவுவதுபோல் இறைவன் ஒன்றாய் உடனாய் வேறாய் விளங்கி உயிர்களுக்கு அருளும் மாட்சியை விளக்குகிறது.

அகரத்தின் **ஒலிவடிவம்** இயல்பான வாய்திறத்தலால் அமைவது, எழுத்துகள் அனைத்தும் அகரத்திற்குரிய வாய்திறப்பதாலேயே ஒலிவடிவம் பெறும். வாய்திறத்தலின்றி எழுத்தொலி இல்லை. அதுபோல் அனைத்து உயிர்களின் இயக்கத்திற்கும் மூலமாக விளங்குகிற இறைவனின் அருளே அனைத்தயும் இயக்குகிறது. இது அகரம் போல் இறைவன் **ஒன்றாய்** இருந்து உயிர்களுக்கு அருளும் மாட்சியை விளக்குவது.

அகரத்தின் **வரிவடிவம்** சுழி, வளைகோடு, கிடைக்கோடு, செங்குத்துக்கோடு ஆகியவற்றால் அமைவது. இவ்வகைக் கோடுகளில் சிலவற்றையோ அனைத்தையுமோ பெறுவதாலேயே எழுத்துகள் வரிவடிவம் பெறுகின்றன - உருவநிலைபெறுகின்றன. அதுபோல் இறைவனது படைத்தல் காத்தல் அருளல் ஆகிய முத்தொழில்களாலேயே உலக உயிர்களும் பொருள்களும் உருப்பெற்று விளங்குகின்றன.

அகரம் ஒலிவடிவாலும் வரிவடிவாலும் அனைத்து எழுத்துகளுடன் கூடியிருந்தாலும், தனக்கெனத் தனித்த ஒலிவடிவும் வரிவடிவும் பெற்றது. இறைவன் உயிர்களுடனும் உலகப்பொருள்களுடனும் ஒன்றாய் உடனாய் இருப்பினும் அவ்வுயிர், பொருள் ஆகியவற்றின் பண்புகளின்றித் தனக்கெனத் , தன்வயத்தனாதல், தூயஉடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசத்தின் நீங்கல், பேரருள் உடைமை, முடிவுஇல்லாத ஆற்றலுடைமை, வரம்பு இல்லாத இன்பம் உடைமை ஆகிய எண்குணங்களால் உயிர்கள்போலன்றித் தனித்து விளங்குகிறான். ( இச்செய்தியின் விளக்க விரிவைக் கூகுல் வலையில் குன்றக்குடி ஆதீனப்புலவர் கந்தசாமி கதிரேசன் என்ற என்பதிவில் காணலாம்.)

**50.** பரவும் அடியர் இதய தவள பதுமம் மலர நற்பொருள்

பயிலும் ஒருமை மொழியை அருள்செய் பரம குரவ நித்திய
இரவு விடிய நெடிய குரல்செய்(து) இலகு பெரிய குக்குட
இணையில் அரவு முறிய இடறி அகலும் மயிலின் இச்சைய
குரவின் இனிய நறிய தெரியல் குலவு மரும பற்பல
கொடையும் மணமும் அதிக விசைய குணமும் உயர வைத்தமும்
முரசம் ஒலிசெய் பதரி வனசண் முகவ தருக முத்தமே
முதிரும் அமுத மதிய வதன முருக தருக முத்தமே.

**குறிப்புரை** : தவள இதய பதுமம்= ஒளிவடிவா, தூய இதயமாகிய தாமரை. ஒருமை மொழி= ஒப்பற்ற சொல் - ஓங்காரம். பரம குரவ= மேலான குருவே. குக்குட= சேவல் உயர்த்தவனே. முறிய= ஆற்றல் கெட. இச்சைய= விருப்பனே. தெரியல்= மாலை. மரும= திருமார்பனே. விசைய= வெற்றி.

**பொழிப்புரை** : தன்னை வணங்கும் அடியவர்களின் ஒளிவடிவான இதயமாகிய தாமரைமலர் மலருமாறு சிறந்த ஓங்காரப்பொருளைச் சிவபிரானுக்கு ஓதிய மேலான குருவே! நாள்தோறும் இரவுவிடியுமாறு நீண்டுவிளங்கும் குரலுடைய ஆற்றல்வாய்ந்த சேவல்கொடியுடையவனே! ஒப்பற்ற நாகத்தின் ஆற்றல்கெடத் தன்காலால்இடறிச்செல்லும் மயிலூர்தியில் விருப்பனே! குரவமலரின் இனியநறுமணம்மிக்க மாலையணிந்த திருமார்பனே! கொடை, திருமணம், மிக்கவெற்றி ஆகியவற்றுக்குரியகுரிய குணங்கள் பலவகையில் சிறப்புற முழங்கும் மூவகைமுரசும் முழங்கும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள ஆறுதிருமுகனே! முத்தம் தருக. கலைகள் முதிர்ந்த அமுதமயமான நிலவுபோன்ற முகமுடையமுருகனே! முத்தம் தருக.

**விளக்கம்** : மும்முரசு : " இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்
தமிழ்கெழு கூடல் " ( புறம். 5 8: 12- 13 )

### 6. வருகைப்பருவம்

51. சீலம்மெச் சியதவம் புரிபரா சரன்உதவு
சிறுவர்முன் செய்தபிழையால்
செய்யமனம் அச்சமுறு மச்சம்ஆ குதிரெனச்
செப்புசா பத்தைநீக்கிக்
காலமைப் புயல்உலவு தென்பரங் குன்றின்அவர்
கருமமல மாயைதவிரக்
கண்அருள்செய்(து) எண்ணரிய சிவஞானம் நல்கிவரு
கற்பனை கடந்தமுத்தி
சாலவுற்(று) அகலாமல் வைத்தகுரு பரன்எனச்
சாற்றிஉளம் நெக்(கு)உருகியே
தளராமல் அனுதினமும் வழிபடும் பேரன்பர்
தங்களுக்(கு) எல்லாம்அநு
கூலம்மெய்ப் பதரிவன வாலசுப் பிரமணிய
கோதைவே லவன்வருகவே
கொக்(கு)இறகொ(டு) அக்(கு)அணியும் நக்கன்அருள் உக்கிரசேய்
குக்குடத் துவசன்வருகவே. ( 1 )

**குறிப்புரை** : மெச்சிய சீலம் தவம்புரி= போற்றத்தக்க ஒழுக்கமுடன் தவம்செய்யும். உதவு= பெற்ற. செய்ய= சிறந்த. மச்சம்= மீன். காலமைப்புயல்= பருவகாலக் கார்மேகம். கருமம் மலம் மாயை= வினை ஆணவம் மாயை ஆகிய மும்மலங்கள். கண்அருள்செய்து= அருள்நோக்கருளி, சால உற்று= என்றும்பெற்று. கோதை= மாலை. அக்கு= உருத்திராக்கம் / எலும்பு. நக்கன்= சிவபிரான். உக்கிர சேய்= பேராற்றல் மிக்கமகன்.

**பொழிப்புரை** : போற்றத்தக்க ஒழுக்கமுடன் தவம்செய்யும் பராசரன் என்னும்முனிவன் பெற்ற இளையமகன்கள் முற்காலத்தில் செய்தபிழைகாரணமாக, சிறந்தமனத்தவர் அஞ்சுமாறு "மீன்கள்ஆகுங்கள்" என்றுமுனிவர் தன்மகன்களுக்குச்சாபமிட; பருவகாலக்கார் மேகம் உலவும் அழகிய திருப்பரங்குன்றத்தில் அந்தமகன்களுடைய செயலால் அவர்களுக்குஏற்பட்ட தீவினை, ஆணவம், மாயை ஆகிய மும்மலக் குற்றங்களும் நீங்கஅருள்பாலித்துச் சிவஞானம் அருளி, அதனால் எண்ணுதற்கரிய முத்திப்பேற்றையும்

எக்காலமும்பெற்று அம்முத்தியில்அகலாமல் இருக்கஅருளிய குருபரன் இவன் என்றுசொல்லி மனமுருகி வழிபடும் சிறந்தஅன்பர்களுக்கு எல்லாஅனுகூலம்தரும் கீழ்வேளூர் அருள்தரு வாலசுப்பிரமணியப் பெருமானே! மாலையணிந்த வேல்ஏந்தியவனே வருக. கொக்குஇறகும் என்புமாலையும் அணிந்த சிவபிரான் அருளிய பேராற்றல் மிக்கமகனே! சேவற்கொடிஉயர்த்தவனே! வருக.

**விளக்கம்** : பராசரமுனிவரின் மகன்கள் அறுவரும் திருப்பரங்குன்றச் சரவணப்பொய்கையில் முதலை உருக்கொண்டு நீரினை அலைத்து விளையாட,அதனால் மீன்கள்மிதக்க, அவற்றைக்கோரையில் கோத்து விளையாடினர். அப்போது நீராடவந்தமுனிவர் அதுகண்டு சினந்து அவர்களை மீன்களாகுமாறு சாபமிட்டார். பின்னொருகாலத்தில் உமையம்மை முருகப்பெருமானை மார்புடன் அணைத்தபோது பெருகிச்சிந்திய முலைப்பாலினைப்பருகிய அந்தஆறுமீன்களும் சாபம் நீங்கின என்பதுபுராணச்செய்தி. இதையே இச்செய்யுளில் குறித்தார்.

52. சேடனைப் பொருவுவலி உள்ளபண மணிஒளிரு
தேசுவா சுகிநாணினைச்
செந்தமனி யச்சிகர முந்துமந் தரம்எனும்
திகழ்மத்தின் மீதுகொளுவி
நீ(டு)அலைத் திரள்குலவு பாற்கடலை மாற்கடவுள்
நீள்அமரர் ஞெலியமலியும்
நித்தஅமு தத்தின்உற் பத்தியுற்று அதிசீத
நிழலின்முத் தாபம்மாற்றிச்
சூடகக் கமலமலர் அங்கையர் மங்கையர்கள்
சுரர்முனிவர் புகழநாளும்
துகள்அற்ற அமுதமய மானகனி நனிதந்து
தூயதிசை எட்டும்எட்டும்
கோடரப் பதரிவன வாலசுப் பிரமணிய
கோதைவே லவன்வருகவே
கொக்(கு)இறகொ(டு) அக்(கு)அணியும் நக்கன்அருள் உக்கிரசேய்
குக்குடத் துவசன்வருகவே. ( 2 )

**குறிப்புரை** : சேடன்= ஆதிசேடன். பொருவு= ஒத்த. பணமணி= நாகபடத்தில் உள்ள நாகரெத்தினம். தேசு= ஒளி. நாணினை= கயிற்றினை. செந்தமனியச்சிகரம்= சிறந்தபொன்னாலான உச்சி. முந்து= மிகஉயரமான. கொளுவி= பூட்டி. ஞெலிய= கடைய. நித்த அமிதத்தின் உற்று= நிலைத்த அமுதம் போல் தோன்றி. அதிசீத நிழல்= மிகக்குளிர்ந்த நிழலாகிய கருணை. முத்தாபம்= மூவகைத் துன்பங்கள். மாற்றி= போக்கி. சூடகம்= கைவளையல். அங்கையர்= அழகிய கைகளுடையவர். கமலமலர் மங்கையர்= செந்தாமரை வெண்டாமரையில் இருக்கும் திருமகள் கலைமகள். துகள்= குற்றம். நனி= மிக. திசை எட்டும் எட்டும்= எண்திசைகளையும் தொடவளர்ந்த. கோடரம்= சோலை.

**பொழிப்புரை** : ஆதிசேடனைப்போல் வலிமையுள்ளவனும், படத்தில் நாகரெத்தினம் ஒளிவீசும் ஒளியுடைவனுமாகிய வாசுகிப்பாம்பினை நாணாகக்கொண்டு, சிறந்தபொன்முகடுடைய உயரமான மந்தரமலையை மத்தாகக்கொண்டு, அதில்அந்நாணினைப்பூட்டி, நீண்டஅலைகள்மிக்க பாற்கடலினைத் திருமாலும் அனைத்துத்தேவர்களும் நாளும்கடையத் தோன்றிய அமுதத்தைக் காட்டிலும் சிறக்கத்தோன்றி, மிகக்குளிர்ந்த கருணையால் மூவகைத்துன்பங்களையும் போக்கி, செந்தாமரை வெண்டாமரைமலர்களில் இருக்கும் மகளிராகிய வளையல் அணிந்த திருமகள் கலைமகள், தேவர்கள் முனிவர்கள் போற்ற நாடோறும் குற்றமற்ற அமுதமயமான தூயஇன்பக்கனி தருகிறவனாய், விளங்கும் எட்டுத்திசைகளையும் தொடவளர்ந்த சோலைசூழ்ந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள வாலசுப்பிரமணியனாகிய மாலையணிந்த வேலேந்திய வேலன் வருக. கொக்கிறகும் என்புமாலையும் அணிந்த சிவபிரான் அருளிய பேராற்றல் மிக்க மகனே! சேவற்கொடிஏந்தியவனே வருக.

**விளக்கம்** : மூவகைத்துன்பங்களாவன : தன்னைப்பற்றிவரும் துன்பமாகிய ஆதிஆன்மிகம், ஐம்பூதங்களாலும் பிறஉயிர்களாலும்வரும் துன்பமாகிய ஆதிபௌதிகம், தெய்வத்தால் வரும் துன்பமாகிய ஆதிதெய்விகம் என்பன. எட்டுத்திசைகளாவன முதன்மைத்திசை நான்கும் கோணத்திசை நான்குமாகும்.

கொக்கிற்கு - ஒருவகைப் பூ என்றும், குண்டாசுரனைக் கொன்று அவன் இறகைச்சூடினார் என்றும் கூறுவர். ( குருவருள் விளக்கம். மகாவித்துவான் ச. தண்டபாணிதேசிகர். பக். 619 )

**இலக்கணக்குறிப்பு** : எட்டும் எட்டும் - முன்னது எட்டுஎன்ற எண்ணிக்கையையும், பின்னது பெயரெச்சவினையுமாகும்.

53. கோடுமுத்(து) உமிழ்வனச வாவியில் சினவாளை
குதிகொண்டு முதிர்வாழையின்
குலைசாடி நெடுநாளி கேரத் தனிக்கனிக்
குலைஉதிர்த்(து) இனியபனச
நீடுமுள் குடம்அனைய பழம்உடைய இடறிமடல்
நிலவுகமு(கு) அலையமோதி
நீள்நிறப் புயல்வயிறு குழையமழை பொழியும்வகை
நெடி(து)ஓடி உம்பர்தருவின்
ஊடுபொற் பொடிசிதறு நறுமலரின் நற(வு)ஊற்றின்
ஒழுகுபே ரருவியுடனே
உயர்நிலையி னின்றுவந்து உழுதவயல் நிறைபுனலின்
உற்றதன் கிளையினோடு
கூடுநற் பதரிவன வாலசுப் பிரமணிய
கோதைவே லன்வருகவே
கொக்கிறகொ(டு) அக்(கு)அணியும் நக்கன்அருள் உக்கிரசேய்
குக்குடத்து வசன்வருகவே. ( 3 )

**குறிப்புரை** : கோடு= கூட்டம். வனசவாவி= தாமரைக்குளம். குதிகொண்டு= துள்ளிப்பாய்ந்து. சாடி= மோதி. முதிர்நெடு வாழை என்க. நாளிகேரம்= வாழைக்கனி. பனசம்= பலாமரம். இடறி= எற்றி. நீள்நிறப் புயல்= மிகக்கருத்த மேகம். குழைய= கலங்க. உம்பர்தரு= கற்பகமரம். பொற்பொடி= மகரந்தம். ஊற்றின்= ஊற்றுப்போல்.

**பொழிப்புரை** :. கூட்டமாக முத்துகளை ஈனும் தாமரைக்குளத்தின் சினம்மிக்க வாளைமீன் துள்ளிப்பாய்ந்து உயரமான வாழையின் முதிர்ந்தகுலையில் மோதி, அவ்வாழையின் ஒப்பற்ற கனிக் குலையை உதிர்த்து, உயரமான பலாமரத்தின் முட்களுடைய குடம்போல் பருத்த இனியபழம் உடைய எற்றி, மடல்களுடன்கூடிய பாக்குமரத்தின் தலைஅசையுமாறு மோதி, மிகக்கருமைவாய்ந்த மேகத்தின் வயிறு கலங்கி மழைபொழியுமாறுகுத்தி மேலேறி, கற்பகமரத்தின் ஊடுபோய் அம்மரத்தின்மகரந்தம் சிதறும் மணம்மிக்க மலரிலிருந்து ஊற்றுப்போல் சொரியும் தேனருவியுடன் கலந்து அந்தஉயரத்திலிருந்து கீழிறங்கி உழுதவயலின் நிறைந்த நீரில்வாழும் தன்சுற்றத்தைஅடையும். இத்தகு வளமான கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலசுப்பிரமணியனாகிய மாலையணிந்த வேலேந்திய வேலனே வருக. கொக்கிறகும் என்புமாலையும்அணிந்த சிவபிரான் அருளிய பேராரல்மிக்க மகனே! சேவற்கொடி ஏந்தியவனே! வருக.

54. நாமகள் செவ்வியுறை தாமரைப் பீடிகையை
நான்முகக் கடவுள்நோக்கி
நங்கையில் உறைதியேல் இடுபெயர் உரூடிஎன
நாடிமுடி யாதவன்பால்
தேமறைத் தொகுதிவிரி வாய்மலர்த் தவிசிடை
திருந்துபு பொருந்தவைத்துத்
திசைமுழுதும் இசைநிறுவி முற்செய்கை தவறாது
சீர்பெற வைக்கும்ஞான்று
தோம்அறச் செய்ம்இட்டி ஒன்(று)அனந் தம்பலன்
துன்னவரு தலம்யாதெனச்
சொலபுல கன்உரை கொண்(டு)உவந்(து) அந்தமுறை

தூயபர மேட்டிஆரும்
கோமளப் பதரிவன வாலசுப் பிரமணிய
கோதைவே லவன்வருகவே
கொக்(கு)இற(கு) அக்(கு)அணியும் நக்கன்அருள் உக்கிரசேய்
குக்குட துவசன்வருகவே. ( 4 )

**குறிப்புரை** : செவ்வி தாமரைப்பீடிகை உறை நாமகளை= அழகிய தாமரைமலர் இருக்கையில் வாழும் கலைமகளை. நங்கையில் உறைதியேல்= எம்மிடம் வாழ்ந்தால். இடுகுறி ஊரூடி என= இடுகுறிப்பெயருக்கு உரிய ஊரூடி - சிவபிரான் - என்றுகூறப்பெறும். . நாடி முடியாதவன்பால்= தேடியும் அடையமுடியாத அச்சிவனிடம். தேர்= நான்தேர்ந்த. மறைத்தொகுதி= நான்மறைகள்,. விரிவாய்= கூறும் நா. திருந்துபு பொருந்த வைத்து= அழகுற வாழவைத்து. இசை நிறுவி= புகழை நிலைநாட்டி.. முற்செய்கை தவறாது= உனது கலைகளை வழங்கும் செயலில் தவறுநேராது. தோம்அற= குற்றமின்றி. செய்ம் இட்டி= செய்யும் வேள்வி. அனந்தம்பலம்= எண்ணற்ற நன்மைகள். துன்னவரும் தலம்= அடையத்தரும்புனித இடம். சொல= கேட்க. புலகன்= பிரமனது மானசமகனாகிய புலகன். கொண்டு= ஏற்று. தூய பரமேட்டி= தூய சிவபிரான். ஆரும்= தங்கியுள்ள.

**பொழிப்புரை** : அழகிய தாமரைமலராகிய பீடத்தில் வாழும் கலைமகளை நான்முகன் பார்த்து," நீ எம்மிடம்வாழ்ந்தால் ரூடி என்னும்இடுகுறிப்பெயருடையவனும், என்னால் தேடிக் காணமுடியாத வனுமாகிய சிவபிரானிடம் நான்தேர்ந்த நான்மறைகளையும் ஓதும் மலரிருக்கையாகிய என்நாவில் அழகுறவைத்து, உன்புகழைத் திசை எங்கும் நிலைநாட்டுவதுடன், உனது முன்னைச்செயலும் வழுவாது " என்றுகூற, அவ்வாறு சிறப்புடன் கலைமகள் நான்முகனின் நாவில் இருந்தகாலத்தில் " நான்முகனிடம் குற்றமற வேள்விகளனைத்தும் ஒருசேரமுழுப்பயனையும் தருமாறு வேள்விசெய்யத்தக்க இடம்யாது" என்றுகேட்க, நான்முகனின் மானசமகனாகிய புலகன் கூறியபடியான இடமாக விளங்கும், பதரி வனத்தில், சிவபிரானாக மாலையணிந்த வேலேந்தியவனாய், அழகியகீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தருவாலசுப்பிரமணியப் பெருமானே! வருக. கொக்குஇறகினுடன் என்புமாலையணிந்தசிவபிரான் அருளிய பேராற்றல் மிக்கமகனே! சேவற்கொடிஏந்தியவனே! வருக.

55. மீபுரக் குலமேழும் அணவுசெம் பொன்மணி
விளிம்(பு)உறு பளிங்குமாடம்
மீதுமுத் தப்பவளம் வச்சிரம்கோ மேதகம்
விரவுசெய் குன்றின்மீது
நூபுரச் செஞ்சரண மங்கையர்கள் வண்டலின்
நுவன்றமென் குதலையின்சொல்
நுதியவளை வாய்ப்பசுங் கிள்ளைகள் பயின்(று)இனிது
நுவலுவது கண்டேபிர
மாபுரத்(து) உறைகின்ற செஞ்சூட்டு வண்சிறை
மணித்துவர் நிகர்த்தபைந்தாள்
வாலஓ திமம்அவர்கள் நடைகற்ப மனம்உன்னி
வந்துவதி யும்பெருமைசேர்
கோபுரப் பதரிவன வாலசுப் பிரமணிய
கோதைவே லவன்வருகவே
கொக்(கு)இறகொ(டு)அக்(கு)அணியும் நக்கன்அருள்உக்கிரசேய்
குக்குடத்து வசன்வருகவே

**குறிப்புரை** : மீபுரக்குலம்ஏழும்= ஏழுமேலுலகங்கள். அணவு= சென்றடயும். விளிம்பு= உச்சி. செய்குன்று= செயற்கைஆன குன்று. நூபுரச் செஞ்சரணம்= சிலம்பணிந்த சிவந்தபாதம். வண்டலிட= விளையாட. நுதியம்வளை= நுனிவளைந்த. பிரமாபுரம்= பிரமலோகம். செஞ்சூட்டு= சிவந்த கொண்டை. மணித்துவர் = அழகிய பவளம். வாலஓதிமம்= இளைய அன்னப்பறவை. வதியும்= வாழும். கோபுரம்= மாளிகைவாசல்

**பொழிப்புரை** : ஏழுமேலுலகங்களையும் சென்றடையும் சிறந்தபொன் நவமணி இழைத்த உச்சியுடைய பளிங்கு மாடங்களின், முத்து பவளம் கோமேதகம் ஆகியனகலந்து பதித்துக்கட்டப்பெற்ற

செய்குன்றின்மேல், சிலம்பணிந்த சிவந்தபாதங்களுடைய பெண்கள் விளையாடும்போது கூறிய குதலைச்சொற்களை, நுனிவளைந்த மூக்கினையுடைய பச்சைக்கிளிகள் பயின்று இனிக்கக் கூறுவதைக் கண்டு, பிரமலோகத்தில்வாழ்கின்றவையாகிய சிவந்தகொண்டையும் வளமானசிறகும் செழித்தபவளச் செங் காலுடைமுடைய இளம்அன்னப்பறவைகள் அப்பெண்களின் நடைகற்கஎண்ணி வந்துவாழும் பெருமையுடைய மாளிகைகளின் வாசலுடைய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள வாலமுருகப்பிரானே! வருக. கொக்குஇறகுடன் உருத்திராட்சம் அணிந்த சிவபிரான் அருளிய பேராற்றல் உடையமகனே! சேவற்கொடி ஏந்தியவனே! வருக.

**விளக்கம்** : மேல் உலகங்கள் ஏழு : பூலோகம், புவலோகம், சுவர்க்கலோகம், மாலோகம், தவலோகம், பிரம்மலோகம், சிவலோகம் என்பன என்பர்.

கொக்கு இறகொடு அக்கு அணி நக்கன் -

" கொக்குஇறகு சென்னி உடையான் கண்டாய் " ( திருமுறை 6. திருமழபாடி. )

56. **வேறு**

குயில்போல் மிழற்றும் செந்துவர்வாய்க்
குறத்தி கனத்த குங்குமம்பூண்
கொங்கைக் களிற்றைக் கண்டுமனம்
குழைந்து விழைந்து குறையிரந்து
பயில்வான் அமுதே பசுங்கிளியே
பாவாய் காவாய் என்(று)அவள்தன்
பவளத் துவர்வாய் அமு(து)அருந்தி
பணைத்தோள் புடைத்துக் கூத்தாட
மயில்ஆர் சாயல் நோக்கிமனம்
மகிழ்ந்து நாணி முகம்கோட்ட
வருபுன் முறுவல் நிலவினுக்கு
வனச மலர்வாள் முகம்மலரும்
அயில்வே லவனே ஆறுமுகத்(து)
அமுதே வருக வருகவே
அத்திக்(கு) இளையாய் இலந்தைவனத்(து)
அரசே வருக வருகவே. ( 6 )

**குறிப்புரை** : மிழற்றும்= கொஞ்சும். குங்குமம்= செஞ்சாந்து. குழைந்து= உருகி. குறை இரந்து= தன்குறைகூறிக்கேட்டு. வான்பயில் அமுதே= வானுலக அமுதமே. துவர்வாய்= செந்நிறஉதடு. பணைத்தோள்= பெருமைபொருந்திய தோள். நோக்கி= அழகுடையவள்ளிநாயகி. கோட்ட= செய்த. நிலவு= நிலவின் ஒளி. வாள்முகம்= ஒளிபொருந்திய முகம். அயில்= கூர்மை. அத்தி= யானைமுகத்து விநாயகர்.

**பொழிப்புரை** : குயில்போல் கொஞ்சிப்பேசும் பவளம்ஒத்துச்சிவந்த இதழ்களுடைய வள்ளிநாச்சியாரின் செஞ்சாந்துபூசிய கொங்கைகளாகிய ஆண்யானைகளைக்கண்டு, மனம்உருகி, விரும்பி, தன்குறைகூறி, வானில்பயிலும் அமுதமே! பச்சைக்கிளியே! பதுமைஒத்த அழகியே! என்னைக்காத்தருள்க என்று கூறி, அவளுடைய பவளச்செவ்விதழ் அமுதமுண்டு, அதனால் பெருமைபொருந்தியதோள்புடைத்துக் மகிழ, அதுகண்ட மயிலின் சாயலும் அழகுமுடைய வள்ளிநாயகிசெய்த புன்முறுவலாகிய நிலவின் ஒளிக்குத் தாமரைமலர்போன்ற ஒளிபொருந்திய முகம்மலரும் கூர்மையான வேலேந்தியவனே! ஆறுதிருமுகங்களுடைய அரசனே! வருக வருக, யானைமுகத்து விநாயகன் தம்பியே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அண்டத்துஅரசனே! வருக வருக.

**விளக்கம்** : நிலவின்ஒளிக்குத் தாமரைமலர்ந்ததாகக் கூறும் நயம்காண்க.

57. கொண்ட கணவன் புறத்(து)ஒழுக்கால்
கொதித்த மடவார் புலந்(து)உகுத்த
குளிர்முத் தமும்நின் தொழமிடைந்த
கொற்ற அரசர் முடிகள்நெருக்
குண்ட அதனால் உதிர்மணியும்

ஒண்தீந் தமிழ்சொற் பாவலருக்(கு)
உதவும் பரிசில் ஆங்(கு)அவர்கொண்(டு)
ஒழிந்து கிடந்த ஒளிமனவும்
வண்டு படியும் குழல்மாதர்
வண்டல் இழைத்த அரதனமும்
மருவி நடப்போர் தமைவருத்தும்
வழியன்(று) இதுபூ மலிவழிகாண்
அண்டர் மகுடம் உரிஞ்சுபதத்(து)
அமுதே வருக வருகவே
அத்திக்(கு) இளையாய் இலந்தைவனத்(து)
அரசே வருக வருகவே. ( 7 )

**குறிப்புரை** : புறத்து ஒழுக்கு= வெளியிடத்து ஒழுக்கம் - பரத்தையர் தொடர்பு. மிடைந்த= செறிந்த. ஒளிமனவு= ஒளிபொருந்திய மணிகள். அரதனம்= இரத்தம். மருவி= பொருந்தி. பூ= மென்மை. அண்டர்= தேவர்கள். வழிகாண்= வழி. உரிஞ்சு பதம்= உராய்ந்த திருவடி.

**பொழிப்புரை** : மணந்துகொண்ட கணவரின் பரத்தைமையால் மனம்கொதித்த மனைவியர் புலவியால் சினந்துசிந்திய குளிர்ந்தமுத்துகள், முருகப்பிரானாகிய உன்னை வணங்கும்பொருட்டு ஒருசேரக்கூடிய வெற்றியுடைய அரசர்களின் திருமுடிகள் தம்முள்நெருக்குண்டதால் உதிர்ந்தநவ மணிகள், ஒளியும் இனிமையும்கொண்ட தமிழ்ச்சொற்களைக் கையாள்வதில் வல்லகவிஞர்களுக்குத்தரும் பரிசில் அவர்கள் பெறும்போது சிந்திக்கிடந்த ஒளிபொருந்திய நவமணிகளும்,வண்டல் இழைக்கும் மகளிர் விரல்சிந்திய இரத்தமும் ஆகியன அவ்வழியில்செல்கிறவர்களை வருத்தமுறச் செய்யும். இது அத்தகுவழியன்று; மென்மையானவழி என்றுவந்து உன்தாளில் தமது திருமுடிசூடிய தலைபொருந்தி உராய்ந்த திருவடியுடைய அமுதமே! வருக வருக. விநாயகருக்கு இளையவனே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அரசனே! வருக வருக.

**விளக்கம்** : வண்டல் இழைத்தலாவது : தன்னைப்பிரிந்து சென்றகணவனது வருகைபற்றி அறிய; மணலில், மகளிர்தம் கண்களைமூடிக்கொண்டு சுட்டுவிரலால் வட்டமிடும்போது வட்டத்தின் நுனிஇரண்டும் தம்முள் பொருந்தின் விரைவில்வருவார் என்றும், நுனிகள் தம்முள் பொருந்தாதாயின் இப்போது வாரார் என்றும் கொள்ளுதல். இதுதவிர மற்றொரு முறையும்உண்டென்பர். அது, சற்றுப்பெரியவட்டமொன்று இட்டு, அதனுள்சின்னஞ்சிறுவட்டங்களிட்டு, அச்சிறுவட்டங்களை எண்ணும்போது எண்ணிக்கை இரட்டைப் படையில்வரின் கணவர் விரைவில் வருவார்என்றும் ஒற்றைபடையில்வரின் விரைவில்வாரார் என்றும்கொள்ளுதல். இவ்விருவகையையும் பண்டைஇலக்கியங்களில் காணலாம்.

**இலக்கணக்குறிப்பு** : காண் - இதுவழியன்று காண் என்பதில்வந்ததுபோன்ற இடைச்சொல்.

**58.** வீறு மதத்துக் கருங்களமர்
விரைந்து குழுமி நாள்பார்த்து
விளையும் புலத்துக் கரும்பகட்(டு)ஏர்
மிகுப்பார் உழுவார் விதைதெளிப்பார்
நாறு பறிப்பார் சேறுஅமைப்பார்
நடுவர் கருஆர் எருஇடுவார்
நாடி எழுந்த களைகளைவார்
நறுநீர் யாப்பார் பயிர்காப்பார்
தேறு கதிர்செந் நெல்அரியாப்பார்
சேர்த்த சூடு பிரித்(து)அடிப்பார்
செந்நெல் குவிப்பார் மனையிடத்தில்
சேர்ப்பார் ஆகச் செழும்பொன்னி
ஆறு பெருக்காய் வரும்புனல்நாட்(டு)
அமுதே வருக வருகவே
அத்திக்(கு) இளையாய் இலந்தைவனத்(து)

அரசே வருக வருகவே. ( 8 )

**குறிப்புரை:** வீறுமதம்= வெற்றிபொருந்திய அறிவு. கருங்களமர்= வலிமைவாய்ந்த உழவர். நாள்= நல்லநாள். புலம்=நிலம். கரும்பகட்டு ஏர்= வலிமையான எருதுபூட்டியஏர். மிகுப்பார்= பலமுறை உழுவார். நாறு= நாற்று. கருஆர் எரு= கருப்பிடித்தலுக்கேற்ற எரு. யாப்பார்= கட்டுவார். தேறுகதிர்= கதிர் முற்றிய. அரியாப்பார்= நெல்லரியை வலிமையாகக் கட்டுவார். சூடு= நெற்கட்டு. மனையிடம்= வீடு.

**பொழிப்புரை :** வெற்றிபொருந்திய அறிவுஉடைய வலிமையான உழவர்கள் விரைந்துகூடி நல்லநாள்பார்த்து, நன்செய்நிலத்தில் வலிமையான எருதுபூட்டிய ஏரால் பலமுறைஉழுது, விதைதெளித்து, பிறகு நாற்றுப்பறித்து, நாற்றுப்பறித்த இடத்தைச்சேறாக்கி, நட்டு, கருப்பிடிக்க ஏற்றஎருவிட்டு, முளைத்த களைகளை விருப்புடன் களைந்து, நன்னீர்கட்டி, பயிர்காத்து, முற்றிய கதிருடைய நெல்லைக்கட்டாக வலிமையுடன் கட்டிக்கொண்டுவந்து, சேர்த்த கட்டினைப்பிரித்து அடித்து, செந்நெல்லைக்குவித்து, அதைதம் வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்ப்பார், இதற்குரியவாறுவரும் காவிரியாறு நீர்ப்பெருக்குடைய சோழநாட்டு அமுதானவனே! வருகவருக. விநாயகருக்குஇளையவனே! கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அரசனே! வருகவருக.

**இலக்கணக்குறிப்பு :** மிகுப்பார், உழுவார், தெளிப்பார், பறிப்பார், அமைப்பர், நடுவார், இடுவார், களைவார், யாப்பார், காப்பார், யாப்பார், குவிப்பார் - முற்றெச்சங்கள்.

59. **வேறு**

பயிலும் எழிலி பிழையை ஒருவு பரிவு புரியும் ஒருவனே
பரமர் அரவ சயனர் பிரமர் பதியின் அதிக பதியனே
மயிலும் வலிய களிறும் நடவி மலையின் உலவும் அரசனே
வளவர் குலமும் வழுதி குலமும் வளர உரைசெய் தமிழனே
அயிலும் மழுவும் மதியும் முதல அணிபன் இருகை முதல்வனே
அறிவும் நிதியும் வயதும் அழகும் அருளும் முருக இசையெலாம்
குயில்சொல் பதரி அடவு மருவு குழகன் வருக வருகவே
குறவர் வனிதை தழுவு கொழுநகுமரன் வருக வருகவே. ( 9 )

**குறிப்புரை :** எழிலி= மேகம். ஒருவு= ஒழிக்கும். பரிவுபுரியும்= அன்புசெலுத்தும். பரமர்= மேலானவராகிய சிவபிரான். அரவ சயனர்= நாகத்தில் அறிதுயில்கொண்ட திருமால். பதி= கடவுள் அதிக பதியன்= உயர்ந்த கடவுளே. வலிய களிறு= வலிமைமிக்க ஆண்யானை. உரைசெய்= வாழ்த்திய. அயில்= வேல். மதி= மதித்தற்குரியஅங்குசம். அடவு= காடு. குழகன்= இளையோன் / முருகன்.

**பொழிப்புரை :** மேகத்தின் பிழையை ஒழிக்கும் அன்பைச்செலுத்தும்.ஒப்பற்றவனே! சிவபிரான், திருமால், நான்முகன்முதலிய கடவுளரைக்காட்டிலும் உயர்ந்தகடவுளே! மயில், வலிமைமிக்க ஆண்யானை ஆகியவற்றை ஊர்ந்து, மலைகளில்உலாவும் அரசனே! சோழர் குலமும் பாண்டியர்குலமும் சிறந்துவிளங்க வாழ்த்திய தமிழனே! மதித்தற்குரிய வேல், மழு, அங்குசம் முதலியவற்றை அணிந்த பன்னிரண்டு கைகளுடைய முதற்பொருளே! அடியவர்க்கு ஞானம், செல்வம், வாழ்நாள், அழகு, முதலியன அருளும் முருகனே! இனிமையாக எல்லாவகையிலும் கூவும்குயில்கள் வாழும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள என்றும்இளைவனே! வருக வருக. வள்ளிநாயகியைத் தழுவும் கணவனே! என்றும் குமரனே! வருகவருக.

**விளக்கம் :** எழிலிசெய் பிழை - " கெடுப்பதூஉம் " என்று பொய்யாமொழி குறிக்கிறது. இதன் விளக்கம் " பெய்யாமலும் பெய்தும்கெடுப்பது " என்பதாகும்.மாரி என்றசொல்லுக்கு "அழிவு" என்பதும் பொருள். இப்பொருளைக்குறிப்பிட்டு ஒரு தனிப்பாடல்;

" வேண்டாத போதுபெய்வாய் வேண்டும் பொழுதுபெய்யாய்
தாண்டுநீ செய்வதெலாம் தப்புகளே - நீண்(டு)உலவும்
வட்டமுகி லேஉன்னை மாரிஎனச் சொன்னோர்க்குப்
பட்டம்அது கட்டுவேன் பார் "

என்ற செய்யுளில் மாரிஎன்றசொல் அழிப்பது என்றபொருளில் வந்துள்ளதை அறியலாம்.

முருகன் வலிமைமிக்க ஆண்யானையில் ஊர்ந்ததை; " அங்குசம்கடாவ ஒருகை " ( திருமுருகு. 110 ) என்பது உணர்த்தும். இந்தயானை பேராற்றல் மிக்கஎன்பதை " கூற்றத்தன்ன மாற்றரு மொய்ம்பின், கால்கிளர்ந்தன்ன வேழம் மேல் கொண்டு " ( திருமுருகு. 81- 82 ) என்பது உணர்த்தும்.

இன்றும் வள்ளல் பாரியாண்ட பறம்பின் இன்றைய திருக்கொடுங்குன்றத்துக் கோயிலில் முருகபெருமான் திருமுன் அவனது யானைஊர்தி உள்ளதைக் காணலாம்.

60. அலகில் கலைகள் அகிலம் அருள்செய் அமலன் வருக வருகவே
அமரர் பணிய நிலைமை உதவும் அபயன் வருக வருகவே
கலப மயிலின் இலகு சரண கமலன் வருக வருகவே
கருணை பெருகு நயனம் இனிய கடவுள் வருக வருகவே
நிலவு பொதிய முனிவர் பரவு நியமன் வருக வருகவே
நெடிய கயிலை அசலர் பெறுநல் நிதியன் வருக வருகவே
குலவு பதரி அடவி மருவு குழகன் வருகவருகவே
குறவர் வனிதை தழுவு கொழுந குமர வருக வருகவே ( 10 )

**குறிப்புரை** : நிலைமை= சூரபன்மன் உள்ளிட்டோரைக் கொன்ற தன்மை. அபயன்= அஞ்சாதவீரன். கலபம்= தோகை. சரணகமலன்= திருவடித்தாமரையுடையவன். இனிய கருணைபெருகு நயனம் என்க. நிலவு= விளங்கும். நியமன்= தூய்மையன். அசலர்= மலைக்குஉரியவர் - சிவபிரான். நிதியன்= கடவுள்மணி.

**பொழிப்புரை** : எண்ணற்ற கலைகளை உலகிற்கு அருளிய என்றும்மலமில்லாதவனும்; சூரபன்மன் முதலியோரைக் கொன்றமையால் அனைவரும் தன்னைவணங்கும் நிலைமை அருளிய அஞ்சாத வீரனும்; தோகைமயில் மேல்ஏறி விளங்கும் திருவடித்தாமரையனும்; இனிய கருணை பெருகும்நோக்குடையவனும்; பொதியமலை அகத்தியர் வணங்கும் தூய்மையனும்; விளங்கும் உயரமான கயிலைமலைக்குரிய சிவபிரான்தந்த கடவுள்மணியும்; உயர்ந்த கீழ்வேளூரில் எழுந்தருளிய என்றும் இளையவனும், வள்ளிநாச்சியாரைத் தழுவும் கணவனும் ஆகிய அருள்தரு வாலமுருகப்பெருமானே வருக வருக.

### 7. அம்புலிப்பருவம்

61. தமரம்ஆர் அலைவாயின் வந்துசூர்க் கிளைஎலாம்
சார்அமிர்தம் நல்கும்அதனால்
சசிஎன்றும் நலம்மேவ வருமானை மன்னிஉயர்
தன்மையால் எந்தநாளும்
திமிரம்மூ(டு) இராவேலை ஒளியினொ டும்எய்திச்
செழுங்குமுதம் மலரவரலால்
செப்பமுடன் உத்தரம் தங்குமா திரம்ஆன
சீருற்ற தன்மைஅதனால்
விமலம்ஆர் காயத்தை உற்(று)இரும் தாபத்தை
மேவாது செய்யும்அதனால்
வேதமுதல் ஆனஇவன் நின்னைஒப் பான்இவனை
மேவிவிளை யாடல்இனிதால்
அமரர்சே னாதிபதி பதரிகா னன்குகனோடு
அம்புலீ ஆடவாவே
அம்புயா சனன்பரவு நம்பனார் புதல்வனுடன்
அம்புலீ ஆடவாவே. ( 1 )

**குறிப்பு** : அம்புலிப்பருவப் பத்துச்செய்யுள்களையும் சாமம், பேதம், தானம், தண்டம் என்று நால்வகையில் அமைத்துப்பாடுவது மரபு. அவை முறையே சாமமாவது, நிலவொடு முருகனை ஒற்றுமைப் படுத்திக்கூறுதல், பேதமாவது வேறுபடுத்தி உயர்த்திக்கூறுதல், தானமாவது இன்னநன்மைகள் தருவான் என்றுகூறுதல். தண்டமாவது வாராயேல் இன்ன தண்டனை உனக்குக்கிடைக்கும் என்று கூறுதல்.

**முருகனுக்குக் குறிப்புரை** : தமரம் ஆர்= போரொலி மிக்க. அலைவாயின்= திருச்செந்தூரில். சூர்க்கிளை= தேவர்சுற்றம். அமிர்தகணம்= அமுதம் நுகரும் தேவர்கள்.சசி= இந்திராணி. நலம்மேவ= இன்புற. மானை மன்னி= மகானான இந்திரனுடன் நிலையாகவாழ்ந்து. திமிரம் மூடு இரா= ஆணவ இருள்மூடிய மயக்கம். வேலை= காலத்தில்.. செழுங் குமுதம் மலர= சிறந்த மக்கள் கூட்டம் ஞானம்பெற. உத்தரம்=

உயர்வு. மாதிரம்= பூமி. ஆன= ஆகியது. சீர் உற்ற= சிறப்புப்பெற்ற. விமலம்ஆர் காயத்தை உற்று= மும்மலம் இல்லாத திருமேனியைப்பெற்று. இருந்தாபம்= பெருந்துன்பம். மேவாது=உறாமல்.

**முருகனுக்குப் பொழிப்புரை : 1.** பேரொலிமிக்க திருச்சீரலைவாயாகிய திருச்செந்தூர்க்கு வந்து, ( சூரபன்மனிடம் சிறைப்பட்ட )தேவர்சுற்றம் அனைத்தும் முன்புஅனுபவித்த அமுதம் நுகருமாறு விடுதலை செய்ததால், 2.இந்திராணி, இன்புறற்குஉரிய மகான் ஆகிய இந்திரனொடு பொருந்திவாழுமாறு அவளை உயரச்செய்த தன்மையால், 3 எக்காலத்தும் உயிர்கள் ஆணவ இருள்மூடி மயங்குங்காலத்தில் சிறந்தமக்கள்கூட்டம் ஞானம்பெற வருவதால், 4. பூமியானது சிறந்தமுறையில் உயர்வுபெற்று வானுலகமாகச்சிறப்புறவந்த தன்மையால், 5. மும்மலமில்லாத திருமேனிபெற்று உயிர்கள் பெருந்துன்பமுறாது செய்தகாரணத்தால்

**நிலவுக்குக் குறிப்புரை :** அலைவாய்= கடல். சூர்க்கிளை= சூரபன்மனின் சுற்றம் சார்அமிர்தம்= பொருந்தமானஇன்பம். சசி= நிலவாகியநீ. என்றும் நலம்மேவ= எந்நாளும் இன்புற. மானை மன்னி= மானாகிய களங்கம்பொருந்தி. திமிரம் மூடு= இருள் மூடிய. இராவேலை= இரவுப்பொழுதில். எய்தி= வந்து. செங்குமுதம் மலரா= செங்குவளைமலர் மலர. செப்பமுடன் மாதிரமான உத்தரம் தங்கும்= சிறந்தமுறையில் ஆகாயமென்னும் உயரத்தில்நிலைக்கும். சீருற்ற= சிறப்புப்பெற்ற. விமலம் ஆர்= அழகுபெற்ற. காயம்= உடம்பு. இரும்தாபம்= மிக்க வெப்பம். மேவாது= அடையாமல்

**நிலவுக்குப் பொழிப்புரை : 1.** பேரொலிமிக்க கடலில் தோன்றி சூரபன்மனின் சுற்றத்தார் எல்லாருக்கும் பொருத்தமான இன்பம் தருவதால். 2. நிலவாகியநீ எந்நாளும் இன்புற மானாகிய களங்கத்தைப் பொருந்தி முழுநிலவாய் உயர்ந்த தன்மையால், 3. நாடோறும் இருள்மூடிய இரவுப்பொழுதில் ஒளியுடன் வளமான செங்குவளைமலர் மலரவரும் அதனால், 4. சிறந்தமுறையில் ஆகாயம் என்னும் உயரத்தில் நிலைப்பதால், 5. அழகிய உன்குளிர்உடம்பால் உலகு மிக்கவெப்பம் அடையாமல் செய்வதால்.

**முடிப்பு :** வேதங்களின் முதன்மைப்பொருளாக விளங்கும் இவன் உனக்கு ஒப்பானவன். இவனுடன் பொருந்த விளையாடுவது இனிமையானது. எனவே தேவசேனாபதியாகிய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள இக்குகனுடன் அம்புலியே! விளையாடவா. தாமரையை இடமாககொண்ட நான்முகன்கள் வணங்கும் நம்பனின் - சிவபிரானின் மகனாகிய இம்முருகப்பிரானுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம் :** " ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே. ஆனால் இதுவரை இறந்த நான்முகர்கள் நூறுகோடிப்பேர் " ஆதலால் " அம்புயாசனர் பரவு நம்பனார் " என்றார். அம்புயாசனர் என்பதில்வரும்" அர் " என்றவிகுதி பன்மை குறித்தவிகுதியும், நம்பனார் என்பதில்வரும்" ஆர் " என்றவிகுதி ஒருவனேயாகிய சிவபிரானைக்குறித்த உயர்வுகருதிய பன்மைவிகுதியும் ஆகும். இதனை;

" நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்
ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே "

என்னும் அப்பரடிகள்அருள்வாக்கினால் அறியலாம்.

62. மேனாளில் உம்பர்தினம் வெம்பிய சிறைப்பிணியை
விடுவித்(து)அவ் உம்பர்தத்தம்
மெல்லியல்நல் லார்கள்இதழ் அமுதும்வா ரிதிஅமுதும்
இருமூவகை அமுதோ(டு)உண்
வானாடு குடியேற்றி வைத்த(து)உண்(டு) ஒருபகலின்
மற்றும்உள முற்றும்நவில்வாம்
வளம்வளரும் இருநிதியும் வாரிதரு ஒருகடவுள்
மாமணியும் உயர்சுரபியும்
தேன்நாத வண்டுமுரல் கின்றஐந் தருவும்உயர்
சீரும்இவண் அடியர்வேண்டில்
செப்பும்அரை மாத்திரையில் நீடூழி நிற்கஅருள்
செய்வன்இது சரதம்ஆம்ஆல்
ஆனாத வாழ்(வு)உதவு பதரிகா னன்குகனோ(டு)

அம்புலீ ஆடவாவே
அம்புயா சனர்பரவு நம்பனார் புதல்வனுடன்
அம்புலீ ஆடவாவே. ( 2 )

**குறிப்புரை** : மேல்நாள்= முன்னாளில். வெம்பிய= மனம்நொந்த. தத்தம்= தங்கள் தங்கள். வாரிதி அமிழ்தும்= பாற்கடல் தந்தஅமுதம். இருமூவகை அமுது= ஆறுசுவையடைய உணவு. வானாடு= தேவருலகம். ஒருபகல்= ஒருநாள். இருநிதி= சங்கநிதி, பதுமநிதி. கடவுள்மாமணி= தெய்விகத்தன்மை -யுடைய கவுஸ்துவமணி. சுரபி= காமதேனு. தேன்நாதம்= இனியஒலி. ஐந்தரு= கற்பகம், சந்தனம், சந்தானம், பரிசாதம், மந்தாரம் என்பன. அரைமாத்திரை= அரைநொடி. சரதம்= உண்மை / சத்தியம். ஆனாதவாழ்வு= நீங்காத வாழ்வு - முத்தி வாழ்வு - அழியாதபேரின்ப வீடுபேற்று வாழ்வு,

**பொழிப்புரை** : முன்னாளில் தேவர்கள் சூரபன்மனின் சிறையில்கிடந்து நாடோறும் வருந்தியபோது சூரனைவென்று, அவர்களைச் சிறையிலிருந்து விடுவித்து, அவர்களின் மனைவிமார்களின் இதழ்அமுதமும், பாற்கடல்தந்த தேவாமுதமும் அறுசுவைஉணவும் உண்ணுமாறு அவர்களை அவர்களின் தேவருலகில் ஒரேநாளில்குடியேற்றிவைத்ததுடன், இவன் செய்தஉதவிகளை மேலும் கூறுகிறேன். சங்கநிதி பதுமநிதி, பாற்கடல் தந்தஒப்பற்ற தெய்வத்தன்மையுடைய கவுத்துவமணி, உயர்ந்தகாமதேனு, இனிமையாக ஒலிக்கும் வண்டுகள்முரலும் கற்பகத்தருவும் இவன் தந்ததுடன், இவ்வுலகஅடியவர்வேண்டியவற்றை அவர்கள் வேண்டியவாறே அவர்கள் வேண்டிக்கொண்ட அரைநொடியில் அவற்றில்அவர்கள் நிலைத்துநிற்க அவன் அருள்வதும் சத்தியமாகும். மேலும் அழியாத பேரின்பம்துய்க்கும் வீடுபேறும் வழங்குவான். எனவே கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலமுருகப்பெருமானாகிய குகனுடன் அம்புலியே! விளையாடவா! தாமரையை இடமாக்கொண்ட நான்முகன்கள் வணங்கும் சிவபெருமானின் மகனுடன் அம்புலியே! விளையாடவா. .

**விளக்கம்** : சங்கநிதி பதுமநிதி - இவை குபேரனின் செல்வங்கள்.இவைபற்றி அப்பரடிகள்;
" சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வான் ஆளத் தருவரேனும் " ( திருமுறை 6. திருப்பூந்துருத்தி. இப்பெருமான் அருளும்இவற்றில் எதையும் நிலவாகியநீஅருளமுடியாது என்றகுறிப்பினால் இச்செய்யுள் முருகப்பிரானின் உயர்வினை மட்டும்கூறும் பேதங்கூறியவாறாம்.

63. மண்டிய முரண்திருகு மூலஆ ணவதிமிரம்
மாயஇரு மாயைஆன
மாயேந் திரசா லங்கள் பயந்(து)ஓடி
மடியஅடு கருமநிகளத்
துண்டம்மிகு கண்டமுற இச்சுக போகங்கள்
துச்சமென இச்சைமாறத்
துகள்அற்ற பரிசுத்த சிவசக்தி யாம்பரஞ்
சோதிமய மானஅருள்கைக்
கொண்டுபொருள் கண்டுஇனிய உல்லாச பூரணக்
குதூகல ஆனந்தமாம்
குறைவற்ற செல்வமும் தந்(து)அருளு வான்இவன்
கொள்கைநீ உற்(று)அறிகுவாய்
அண்டபகிர் அண்டம்உயர் பதரிகா னன்குகனோ(டு)
அம்புலீ ஆடவாவே
அம்புயா சனர்பரவு நம்பனார் புதல்வனுட்ன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மண்டிய= செறிந்த. முரண்=உயர்வுக்கு மறுபட்ட. திருகு= பறிக்கும். மூலஆணவ திமிரம்= பிறமலங்குக்குக் காரணமான ஆணவஇருள். மாய= தன்வலிகெட்டுப்போக. இருமாயை ஆன= ஆற்றல்மிக்க மாயையால்ஆன. மாயேந்திரசாலம்= பெரிய அற்புதங்களைக்காட்டுதல். அடு= உயிர்களை வருத்தும். கருமங்கள்= வினைகள். துண்டம் மிகுகண்டம் உற= பிளவுபட்டுத் துண்டுபட.. இச்சக போகங்கள்= இவ்வுலக இன்பஅனுபவங்கள். துச்சம்= பொய் - நிலையற்றவை. இச்சைமாற= விருப்பங்கள் வேறுபட. துகள்= குற்றம். பரஞ்சோதி= மேலான வணங்கும் ஒளி. கைக்கொண்டு= மேற்கொண்டு. பொருள்கண்டு=

உண்மையை அறிந்து. உல்லாசம்= மனக்களிப்பு. பூரணக் குதூகலஆனந்தம்= முழுமையான பேரின்பவாழ்வு. கொள்கை= குணம். உற்று= வந்துசேர்ந்து. பகிரண்டம் உயர்= அண்டவெளியினும் உயர்ந்த.

**பொழிப்புரை** : செறிந்ததும் உயிர்களின் உயர்வுக்கு மாறுபட்டதும், உயிரின் அறிவைப் பறிப்பதும் கன்மம் மாயை ஆகியவற்றுக்கு மூலமானதும் ஆகிய ஆணவமலம் தன்வலிமைகெட்டு அழியவும், ஆற்றல் மிக்க மாயையும் அதனால் ஆகிய பெரியஅற்புதங்களைக்காட்டுதல் முதலியனவும் அஞ்சிஓடிப் பிளவுபட்டு மடியவும், இவ்வுலகஇன்பஅனுவங்கள் நிலையற்றவை என்றறிந்து, அதனால் விருப்பங்கள் மாறுபட, குற்றமற்ற தூய சிவசத்தியாகிய மேலானஒளிவடிவான திருவருளை மேற்கொண்டு, உண்மையை அறிந்து இனிமையானதும் மனக்களிப்புத்தருவதும், முழுமையான பேரின்மயமானதும் ஆகிய குறைவில்லாத செல்வமாகிய வீடுபெறு இவன்தருவான், இதுவே இவன் குணம்ஆகும். இதனை நீ இங்குவந்து சேர்ந்துஅறிந்துகொள்க. எனவே அண்டம், அண்டவெளி இவற்றைக் காட்டிலும் உயர்ந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள இக்குகனோடு அம்புலியே! விளையாடவா. தாமரைமலரினை இடமாகக்கொண்டநான்முகன்கள் வணங்கும் சிவபெருமான் மகனாகிய அருள்தரு வாலமுருகனுடன், அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : உலகியலின்ப விருப்புஒழித்துத் திருவருள் நுகரும் விருப்புப் பெற்றதை " இச்சைமாற " என்று குறித்தார். இச்செய்யுள் தானம் குறித்ததாகும்.

64. வன்னவளை சூல்உளைந்(து) அம்போ ருகத்தின்உடு
வர்க்கம்என முத்தம்ஈனும்
வளமைபெறு சரவணத் தீர்த்தத் தடந்துறையின்
வந்(து)ஆடி நியமமுடனே
முன்னுகும ரேசன்அருள் சந்நிதியின் வந்துகை
முகிழ்த்(து)இசை துதித்தஎவரும்
முடியாத பெருவாழ்வு பெற்றார்கள் இச்செய்கை
முயலுவ(து) உனக்கு)அருமையேல்
இன்னிழல் இலந்தையடி வலம்வருதி வரம்எலாம்
ஈவன்இடு கின்றதெய்வம்
இலந்தைஅடி யிலும்இடும் என்றபழ மொழிகேட்ட(து)
இல்லையோ இனியேனும்நீ
அன்னம்நிறை வாவிசூழ் பதரிகா னன்குகனோ(டு)
அம்புலீ ஆடவாவே
அம்புயா சனர்பரவு நம்பனார் புதல்வனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : வன்னவளை= அழகிய சங்கு. உளைந்து= வருந்தி.உடுவர்க்கம்= விண்மீன் இனம் தடந்துறை= பெருமைபொருந்திய நீர்த்துறை. ஆடி=நீராடி. இயமம்= முறை. முன்னு= நினைத்து. முகிழ்த்து= கூப்பி.இசைதுதித்த= பாடிவணங்கிய. முடியாத பெருவாழ்வு= எல்லையற்ற வீடுபேற்றின்பவாழ்வு. இலந்தைஅடியிலும்= கூரையைபிய்த்துக்கொண்டு அதன்அடியிலும். இடும்= வழங்கும்.

**பொழிப்புரை** : அழகிய சங்குகள் சூல்முதிர்வால் வருந்திக் தாமரைமலர்களில் முத்துகளை ஈனும்வளமான பெருமையுடைய சரவணப்பொய்கைக்கு வந்துநீராடி, அருள்தரு வாலசுப்பிரமணியப் பெருமானை நினைத்து முறைப்படி திருமுன்வந்து கைகூப்பிப் பாடியஅனைவரும் வீடுபேற்று இன்பவாழ்வு பெற்றனர். இவ்வாறு செயற்படுவது இயலாது என்றுநினைத்தால், இனியநிழலுடைய கீழ்வேளூர் அருள்தரு வாலசுப்பிரமணியப் பெருமனை வலம்வருக. கொடுக்கின்ற அத்தெய்வம் கூரையைப்பிய்த்துக் கொண்டுகொடுக்கும் என்ற பழமொழியை நீகேட்டதில்லையா! இனியாவது நீ அன்னப்பறவைகள் நிறைந்த குளங்கள்சூழ்ந்த கீழ்வேளூர்க் குகனுடன் அம்புலியே! விளையாடவா. நான்முகன்கள் வணங்கும் சிவபெருமான் மகனாகிய அருள்தரு வாலசுப்பிரமணியப்பெருமானுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : " இடுகின்ற தெய்வம் இலந்தையடியிலும் இடும் " என்பது, " கொடுக்கின்ற தெய்வம்கூறையைப் பிய்த்துக்கொண்டும் கொடுக்கும் " என்றபழமொழியை நினைவூட்டுகிறது. இச்செய்யுள் தானம் பற்றியது ஆகும்.

65. சிங்கா தனத்(து)இருந்(து) ஆயிரத்(து)எட்(டு)எனச்
செப்பும்அண் டங்கள்எங்கும்
செங்கோல் செலுத்திஅமு தாசனர்கள் பணிசெயத்
திக்குவிச யம்செலுத்தி
மங்காத புகழ்பெற்ற சூரன்இவன் மொழியின்வழி
வாராத முறைமையாலே
மறம்உற்ற சதுர்அங்க சேனையையும் ஒப்பற்று
வாழ்தம்பி மார்கள்தமையும்
தங்(கு)ஆர்வ மைந்தரையும் அடல்செய்து மற்றவன்
தன்உட லினைப்பிளந்து
சாரும்உயிர் தன்னைமயில் ஆக்கிஅதன் மீ(து)ஏறு
தன்மைஅறி யாததன்றே
அங்(கு)ஆதி மறைதுதிசெய் பதரிகா னன்குகனோ(டு)
அம்புலீ ஆடவாவாவே
அம்புயா சனர்பரவு நம்பனார் புதல்வனுடன்
அம்புலீ ஆடவாவே .

**குறிப்புரை** : அமுதாசனர்கள்= தேவர்கள். திக்குவிசயம்= திசைதோறும் வெற்றி. சூரன்= வீரன். மொழியின்வழி= சொற்படி. சதுர் அங்கசேனை= யானை குதிரை தேர் காலால் ஆகிய நால்வகைப் படை. தம்பிமார்= தம்பியர் ஆகிய தாரகன் சிங்கமுகன். ஆர்வம் தங்கு மைந்தர்= அன்புஉடைய மகன்கள். அடல் செய்து= கொன்று. சாரும்=உடம்பில் பொருந்திய. அங்கு= அப்போது.

**பொழிப்புரை** : அரியாசனத்தில் வீற்றிருந்து ஆயிரத்துஎட்டாகச் சொல்லப்பெறும் அனைத்து அண்டங்களில் செங்கோல்செலுத்தி மங்காத புகழ்பெற்றவீரன் இம்முருகன். இவன் சொற்படி நீ இவனுடன் விளையாடவராததால்; சூரபன்மனுடைய வீரம்பொருந்திய நால்வகைச்சேனை,ஒப்பற்ற வீரமுடைய சிங்கமுகன் முதலிய தம்பியர்கள், வீரம்தங்கிய மகன்கள் முதலியோரைக் கொன்று, சூரனின் உடலைப் பிளந்து அதில்பொருந்திய உயிரை மயிலாக்கி அதன்மேல் இவன்ஏறியுள்ளது நீஅறிந்ததே. அதனால் பண்டைமறைகளால் துதிக்கப்பெற்ற கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள இக்குகனுடன் அம்புலியே! விளையாடவா. நான்முகன்கள் வணங்கிய சிவபிரான் மகனுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : மயில் ஆக்கி அதன்மீது ஏறுதல் என்றதால், குறிப்பால் சேவலைக்கொடி ஆக்கியதும் குறித்தார். இச்செய்யுளில் கொடிய சூரன்பெற்ற உயர்வுகூறியதால் இதுதானம் குறித்தது.

66. உலகின்முன் தக்கன்இடு சாபத்தி னால்உனக்(கு)
ஒருகலையும் இன்றிவெள்கி
ஓய்தல்கண்(டு) எம்பிரான் அருளினொடு சடையின்வைத்(து)
ஓங்குகலை தந்(து)அளித்தான்
இலகுமும் மதயானை முகனைநீ நகைசெய்ய
இன்னருள் புரிந்துகாத்தான்
இரையாக உனைஅரவம் உண்ணாது தினம்அரவை
இவன்மயிற்(கு) இரைஅளித்தான்
பலவிதம் உனக்(கு)உதவி வழிவழிசெய் பான்மையைப்
பாராதி ருத்தல்முறையோ
பழுதில்செய் நன்றிகொன் றார்க்(கு)என்றும் எங்ஙனும்
பரிகாரம் இல்லைகண்டாய்
அலகில்நெற் கழனிசூழ் பதரிகா னன்குகனோ(டு)
அம்புலீ ஆடவாவே
அம்புயா சனர்பரவு நம்பனார் புதல்வனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : சாபம்= ஒவ்வொரு கலையாகத்தேய்ந்து இறப்பாயாக என்று தக்கன்இட்டது. ஓய்தல்= அழிதல். ஓங்குகலை= வளரும்கலைகள். யானைமுகன்= விநாயகர். இரை= உணவு. வழிவழி= தொடர்ந்து. பரிகாரம்= தீர்வு.

**பொழிப்புரை** : முற்காலத்தில் தக்கன் இட்டசாபத்தினால் இவ்வுலகில்உனக்கு நாடோறும் ஒருகலை இல்லாமல் குறைந்ததால் நீ வெட்கப்பட்டது கண்டு, எம்தலைவனாகிய சிவபிரான் உன்மேல் கருணையுடன் தன்சடையில் வைத்து உன்கலைகள் வளரஅருளினான். மதயானைமுகத்துடன் விளங்கும் விநாயகனை நீஏளனம் செய்ததை மன்னித்து விநாயகனின் சினத்திலிருந்து உன்னைக்காத்தான். உன்னைப் பாம்புதனக்கு இரையாக உண்ணாதபடி இம்முருகன் தினந்தோறும் அப்பாம்பினைத் தனதுமயிலுக்கு இரையாக்கினான். இப்படிப்பலவித உதவிகளை வழிவழி செய்ததன்மையை நீ எண்ணிப்பார்க்காதிருத்தல் முறையாகுமா? ஒருவர் குற்றமின்றிச்செய்த உதவியை மறந்தவர்க்கு எந்நாளும், எவ்விடத்தும் தீர்வு இல்லை. அளவற்றநெல்வயல் சூழ்ந்த கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள குகனாகிய அருள்தரு முருகப் பெருமானுடன் அம்புலியே! விளையாடவா. நான்முகன்கள் வணங்கும் சிவபிரான் மகனுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : இச்செய்யுளில் ஆசிரியர், " எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுஉண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு " என்ற திருக்குறள் கருத்தை ஆண்டுள்ளமை காண்க. இதுவும் தனம் குறித்த செய்யுள்.

**இலக்கணக்குறிப்பு** : கண்டாய் - முன்னிலை அசைச்சொல்.

67. மதிஎன்று பேர்பெற்று நிறைகலையும் உடையநீ
வருகருமம் ஒன்றும்உணராய்
வாஎன்று பன்முறை அழைத்திடவும் வாராது
வலியுடையர் போல்இருந்தாய்
துதிசெய்நவ வீரும் மிக்கவீ ரரும்மறம்
துன்னுகண நாதர்குழுவும்
துணிவினொடு வெகுளஒரு பொருளன்று நீஇவண்
தொக்ககண நிரையுள்ஒருவர்
கதிஇல்உனை முனிவுசெய்து ஒருகையை நீட்டில்அக்
கைக்குநீ பற்றமாட்டாய்
காலம் கழித்(து) இனிஇருப்பது சிறப்பன்று
காசினியில் ஓகையுடனே
அதிகசுந் ரம்இலகு பதரிகா னன்குகனோடு
அம்புலீ ஆடவாவே
அம்புயா சனர்பரவு நம்பனர் புதல்வனுடன்
அம்புலீ ஆடவாவே.

**குறிப்புரை** : மதி= அறிவு உடையவன் / சந்திரன். நிறைகலை= நிறைந்த கல்வி / நிறைந்தஒளி வருகருமம்= எதிர்கால விளைவு. வலியுடையர்= ஆற்றல் மிக்கவர். மிக்க= எஞ்சிய. மறம் துன்னு= வீரம்செறிந்த. கதி இல்= ஆதரவில்லாத. கைநீட்டில்= அடிக்கக் கைஓங்கினால். பற்றமாட்டாய்= போதுமானவனாகாய். காசினி= உலகம். ஓகை= மிக்கமகிழ்ச்சி. அதிசுந்தரம்= பேரழகு.

**பொழிப்புரை :** அறிவு உடையவன் என்றபெயருடன் நிறைந்த கலையும் உடையநீ எதிர்காலவிளைவைச் சிறிதும் உணராதவனாயுள்ளாய். உன்னை இவனுடன் விளையாட வாஎன்று பலமுறை அழைத்தும்மிகுவலிமை உடையவன்போல் வராதுள்ளாய்! அதனால் இவனைப்போற்றும் வீரவாகு முதலிய ஒன்பான்வீரர்களும், எஞ்சிய வீரர்களும், வீரம்பொருந்திய கணநாதர் கூட்டமும் துணிந்துசினங்கொள்ள நீ ஒருபொருளல்லை. ஆதரவில்லாத உன்மேல் சினங்கொண்டு, இங்குக்கூடியுள்ளவருள் யாரேனும் ஒருவர் உன்னைஅடிக்கத் தனது ஒருகையை ஓங்கினால் அடியைத்தாங்க வலிமையிலாதவன் நீ. இனியும் இவனுடன் விளையாடவராமல் காலம்கழிப்பது சிறந்தசெயலன்று. உலகில்பேரழகுடன் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலசுப்பிரமணியப் பெருமானுடன் அம்புலியே! விளையாடவா. நான்முகர்கள் வணங்கும் சிவபிரான் மகனாகிய இவனுடன் அம்புலியே! விளையாடவா.

**விளக்கம்** : இச்செய்யுள் தண்டம் குறித்தது. அம்புலிப்பருவத்துச் செய்யுள்கள் சில அச்சிட்ட நூலில் இல்லை.

### 8. சிற்றில்பருவம்

68. அஞ்சு முகத்தான் மகன்ஒருவற்(கு)
ஆறு முகம்உண்டு எனநவின்றார்
ஐயுற்(று) இருந்தேம் அதைத்துணிதற்(கு)
அளியேம் எண்ணிப் பார்த்த(து)அல்லால்
விஞ்சு முகத்துப் பேரெழிலின்
வெள்ளத்(து) எமது விழிக்கயலை
விளையாட்(டு) அயர விடுத்தும்என
மிகைநீ பிடித்த(து) எம்விதிகாண்
வஞ்சிக் கொடியார் மறுகினிடை
மறுக உறுகண் அறி(வு)உடையார்
வாது புரியார் என்(று)உரைத்த
மறையின் முறையும் மறந்தனையோ
செஞ்சொற் புலவா உமைபுதல்வா
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 1 )

**குறிப்புரை** : அஞ்சு முகத்தான்= ஐந்து முகமுடைய சதாசிவமூர்த்தி. துணிதற்கு= உறுதிசெய்து கொள்ள. அளியேம்= எளியநாங்கள். எண்ணிப்பார்த்தது அல்லால்= நினைத்தது தவிர. விஞ்சு முகம்= கூடுதலான முகம். விடுத்தும்= செலுத்துவோம். மிகை= குற்றம். பிடித்தது= நினைத்தது. விதி= தலைவிதி. வஞ்சிகொடியார்= வஞ்சிக்கொடி போன்ற இடையுடைய சிறுமியர். மறுகு= தெரு. மறுக= சுற்ற. உறுகண்= மிகச்சிறிய. வாது புரியார்= விவாதம் செய்யார். முறை= நீதி. சேண்ஆர்= மிகஉயரமான.

**பொழிப்புரை** : ஐம்முகச்சிவனாகிய சதாசிவனின் மகனுக்கு ஆறுமுகங்கள் உண்டு என்றவர் சொல்லில் சந்தேகப்பட்டு, அச்செய்திபற்றி உறுதிசெய்துகொள்ள எளியநாங்கள் நினைத்தோமேதவிர, கூடுதலான ஒருமுகத்தின் மிக்கஅழகாகிய வெள்ளத்தில் எமது கண்களாகிய கெண்டைமீனைச் செலுத்திக் காண்பதைக் கைவிட்டுவிட்டு, மனத்தை விளையாட்டில் செலுத்திய குற்றம் நீஎமக்கு விதித்ததாகும். வஞ்சிக்கொடிஒத்த இடையுடைய மகளிர் விளையாடும் தெருவில் சுற்றிவரவேண்டும் என்று மிகமிகச் சிற்றறிவினரும் விவாதிக்கார் என்று மறைகள்கூறிய நீதியை நீ மறந்தாயோ? நேர்மையாகச் சொல்வதில் புலமையனே! உமையம்மைக்கு மகனே! எளியஎமதுசிற்றிலைச் சிதைக்காதே! மிகமிகஉயரமாக வளர்ந்த இலந்தைகானத்து அரசே! எளிய எமது சிற்றிலைச் சிதைக்காதே.

**விளக்கம்** : சிற்றில்= மணலில் மணலால்கட்டியவீடு. மகளிர் விளையாடுமிடத்தில் ஆண்களுக்கு வேலையில்லை என்ற நீதியை நீமறந்துவந்ததே பிழை. இந்நிலையில் எம்சிற்றிலைச் சிதைத்து மற்றொரு பிழைசெய்யாதே என்றாள்.

69. ஐயர் தமக்கும் பயந்தவட்கும்
அடிகேள் நினக்கும் குடிஇருப்ப(து)
அசலம் எனில்எம் சிறுவீட்டை
அழிப்ப(து) அழகோ அதுகிடக்கத்
துய்ய கமலப் பொற்பொகுட்டில்
தோன்றும் அயனைச் சிறைப்படுத்தே
தொல்லைப் பகலில் விதிமுறையே

தொலையா உயிர்கள் இதம்மருவ
வையம் முழுதும் படைத்(து) அளித்த
வார்த்தை வினவி மனம்கிழ்ந்து
வழுத்தி இருந்த எமக்(கு)இதுதான்
வழங்கும் பரிசோ பழம்பொருளே
செய்ய அழகா அருள்குழகா
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : ஐயர்= சிவபெருமான். பயந்தவள்= உமையம்மை. அடிகேள்= குருவே. அசலம்= மலை. தோன்றும்= உள்ள. தொல்லைப்பகல்= முன்நாளில். விதிமுறை= ஊழ்வினைப்படி. தொலையா உயிர்கள்= அழிவில்லாத உயிர்கள். இதம் மருவ= நன்மையடைய. வினைவி= கேட்டு. செய்ய= செந்நிற.

**பொழிப்புரை** : சிவபிரானும், உன்னைத்தந்த உமையன்னையும், குருவாகிய தாங்களும் குடியிருப்பது மலைஎன்றுசொன்னால், மணலால் மணலில் இழைக்கப்பெற்ற எமது அற்பவீட்டினை அழிப்பது உனக்கு அழகன்று. அதுஒருபக்கம் இருக்க; முன்னாளில், சிறந்ததாமரையின் அழகிய பொகுட்டில் உள்ள நான்முகனைக் குட்டியதுடன் சிறையிலும் அடைத்து, அழிவில்லாத உயிர்கள் தம்ஊழ்வினைப்படி நன்மைஅடையுமாறு உலகம் முழுவதும் ஆக்கிக்காத்த உன் புகழைக்கேட்டு மகிழ்ந்து, உன்னைவணங்கும் எமக்கு நீவழங்கும் பரிசு எம்சிற்றிலை அழிப்பதுதானா? அநாதியானவனே! செந்நிறஅழகனே! அருள்புரியும் இளையவனே! எமது மணல்வீட்டைச்சிதைக்காதே. மிகமிக உயரமாக வளர்ந்த இலந்தைக்கானத்து அரசே! சிறுமியராகிய நாங்கள்கட்டிய எம்சிற்றிலைச் சிதைக்காதே.

**விளக்கம்** : உயிர்கள் அழிவற்றன : " மன்னுயிர் " ( திருக்குறள் 244, 1168 )
" பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப்போல் பசு,பாசம் அநாதி" ( திருமந்திரம் )
முருகனைத் தொல்காப்பியர் " சேயோன் " என்று குறிப்பார்

நான்முகனைக் குட்டிச்சிறையிட்ட உன்செயலை எண்ணிப்புகழ்ந்து மகிழ்ந்து, உன்னை வணங்கும் எமக்கு நீ தரும்பரிசு இதுதானா என்றார்.

70. மறையின் சிரமும் மறைநவின்ற
வரதன் புயமும் இமயமலை
மன்னர் அரிதில் பெற்றெடுத்த
வல்லி உமையாள் மணிவயிறும்
அறையும் கலவ மயில்முதுகும்
அணுகும் அதனுக்(கு) அமைந்தஉன(து)
அருமைப் பதம்இவ் ஆவணத்தின்
அடியேம் வகுத்த சிறுவண்டல்
உறையும் சிறிய புழுதிபடில்
உயர்ச்சிக்(கு) அமைந்த செயலன்றால்
உந்திக் கமலத்(து) அயன்சிறையும்
உம்பர் உறைபட் டார்காதம்
சிறையும் தவிர்த்த சேவகனே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே.

**குறிப்புரை** : மறையின் சிரம்= உபநிடதம். வரதன்= மேலான சிவபிரான். மன்னர்= அரசன் - இமவான். மணி= அழகு. அறையும்= புகழப்பெறும். கலவம்= தோகை. அணுகும் அதனுக்கு= பொருந்தும் பொருட்டு. பதம்= திருவடி. ஆவணம்= தெரு. வண்டல் உறையும்= வண்டல்மண் படிந்த. உயர்ச்சிக்கு அமைந்த= உன்உயர்வுக்குப் பொருத்தமான. உந்திக்கமலத்து= திருமாலின் உந்தியாகியதாமரையில், சிறை= சூரபத்மன் இட்ட சிறை. உறைப்பட்டார்= வாழ்ந்தவர். காதம்= துன்பம்.

**பொழிப்புரை** : உபநிடதமும், மறைகளும்புகழும் மேலான சிவபிரானின் தோள்கள், இமயமலை அரசனாகிய இமவான் தவத்தால் பெற்ற உமையவளின் அழகியவயிறு, அனைவரும் போற்றும் மயிலின் முதுகு ஆகியவற்றில் பொருந்துதற்கு அமைந்தஉனது அரியதிருவடியில்; இத்தெருவில் உன்அடிமைகளாம் நாங்கள் இழைத்த சிற்றிலின் நுட்பமான வண்டல் மண்படிந்த நுண்புழுதிபடுமானால் அது உன்உயர்வுக்குத் தகுந்தசெயலாகாது. திருமாலின் கொப்பூழாகிய தாமரையில்தோன்றிய நான்முகன்அடைபட்ட சூரபன்மனின் சிறை, வானுலகில் வாழ்ந்த தேவர்கள் பட்டதுன்பச்சிறை ஆகியவற்றை நீக்கிய வீரனே! சிறுமியராகிய நாங்கள் மணலில்கட்டிய மணல்வீட்டைச் சிதைக்காதே. மிகமிக உயரமாக வளர்ந்த இலந்தைவனத்து அரசே! சிறுமியராகிய நாங்கள் கட்டிய மணல்வீட்டைச் சிதைக்காதே.

**விளக்கம்** : எத்துணை உயர்ந்த உனக்கு இத்துணைச் சிறுசெயல் ஆகாது என்றனர்.

71. கன்னம் கதக்க யல்கண்இணைக்
காதல் பேதை யேம்தொடலை
கருத்தால் விளக்கும் நவமணியின்
கவின இழைத்த சிறுமனையை
என்என்(று) உளத்தில் எம்பெருமான்
எண்ணிச் சிதைத்த(து) எமக்கன்றி
இருதா ளால்உன் சிறுதாயர்க்(கு)
இன்னல் புரிதல் இயல்பன்றால்
பொன்னம் சயிலச் சிலைபிடித்த
போர்ஏ(று) அளித்த போதகமே
பொங்கல் பசுங்கற் பகநிழலில்
பொலிவான் பிடியின் மணவாளா
தென்னன் குலத்துக்(கு) அதிபதியே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 4 )

**குறிப்புரை** : கதக்கயல் இணைகண் கன்னம் காதல்பேதை என்று கூட்டுக. கதக்கயலிணை வலிமையான இருகெண்டைமீன்கள். கன்னம்காதல்= காதுகளின்மேல் காதல். பேதையேம்= சிறுமியராம் நாங்கள். தொடலை= ( மகளிர் ) விளையாட்டு. கவின= அழகுற. எம்பெருமான் உள்ளத்தில் என்என்று எண்ணிச்சிதைத்தது (என்று கூட்டுக.)= எம்தலைவனே உன்மனத்தில் என்னஎண்ணிச் சிதைத்தாய். சிறுதாயர்= தாய்போன்ற சிறுமியர். இன்னல்= துன்பம்.பொன்னம்சயிலச் சிலை= மேருமலையாகிய வில். போர் ஏறு= போர்வல்ல ஆண்சிங்கம் - சிவபிரான். போதகம்= குரு. பசும்பொங்கல் = பசுமையான பெருமை. வான்பிடி= தெய்வயானையம்மை. தென்னன் குலம்= பாண்டியர் குலம்.

**பொழிப்புரை** : எம்தலைவனே! வலிமையான இருகெண்டைமீன்கள் ஒத்தகண்கள், காதுகளின்மேல் காதல்கொள்ள உள்ள சிறுமியராகிய எங்களின் கருத்தை, விளையாட்டால் உணர்த்த ஒன்பான்மணிகள் இழைத்துக்கட்டிய சிற்றிலை, உம்மனத்தில் என்ன எண்ணிச்சிதைத்தாய்? மேருமலையை வில்லாக ஏந்திய சிவபிரான் அளித்த குருவே! பசியபெருமை பொருந்திய கற்பமரநிழலில் சிறந்துவாழ்ந்த தெய்வயானை அம்மையின் கணவனே! பாண்டியர் குலத்தலைவனே! சிறுமியராகியஎமது சிற்றிலைச் சிதைக்காதே. மிகஉயரமாக வளர்ந்த இலந்தைவனத்து அரசனே! சிறுமியராகிய நாங்கள் கட்டிய மணல்வீட்டைச் சிதைக்காதே.

**விளக்கம்** : சிறுமியரைத் தாயே! என்றுஅழைக்கும் வழக்கம் நோக்கியது "சிறுதாயர்" என்ற சொல்லாட்சி. சிவபிரான், அகத்தியர் முதலியோர்க்கு உபதேசித்ததால் முருகனைப் போதகமே! என்றனர், முருகப்பிரான், உக்கிரகுமார பாண்டியனாகத் தோன்றியதால் பாண்டியகுலத்தலைவனே என்றனர். இதனை, திருவிளையாடற் புராணத்தால் அறியலாம். இதனை, ஸ்ரீ குமரகுருபர அடிகள்;

" தமரநீர்ப் புவனம் முழுதுஒருங்கு ஈன்றாள்
தடாதகை என்றுஒருபேர் கொண்டதூஉம்,
குமரவேள் வழுதிஉக்கிரன் எனப்பேர் கொண்டதூஉம்

தண்டமிழ் அமுதம் கூட்டுண எழுந்த வேட்கையால் எனில்இக்
கொழிதமிழ்ப் பெருமையார் அறிவார் " என்று அழகுறக் கூறுவார்.

சிறுமியரின் அழகுணர்ச்சியை " தொடலை கருத்தால் விளக்கும் நவமணியில் கவினஇழைத்த சிறுமனை " என்பது புலப்படுத்துகிறது.

72. இட்டி இடைப்பெண் குழுவினுக்கும்
இரங்கும் அருவி மலைக்குறவன்
என்னும் உனக்கும் மிடவழக்கிங்
இலையே அலதும் இருநிலத்துக்
கட்டும் அயலார் மனைகண்டோர்
கருமத் தாழ்வு புகல்வ(து)அல்லால்
காலால் சிதைத்துக் குறும்புசெயக்
கண்டும் அறியோம் கேட்டறியோம்
மட்டில் அருளால் எண்ணான்கு
வளமை சான்ற அறம்வளர்த்த
மலையின் மகள்பெற் றெடுத்துவிழி
மணிபோல் வளர்த்துச் சீராட்டும்
சிட்டர் அகத்துச் செழுஞ்சுடரே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 5 )

**குறிப்புரை** : இட்டி இடை= சிறுத்த இடுப்பு. இரங்கும் அருவி= கீழ்வீழும் அருவி. குறவன்= குறிஞ்சிக்குரியவன். மிட வழக்கு= கடுமையான வழக்கு - வியாச்சியம். இருநிலம்= பெரியபூமி. அயலார் கட்டும்மனை என்க. கருமத்தாழ்வு புகல்= செயலில் குறைகூறுதல். மட்டில்= அளவற்ற. எண்ணான்கு= முப்பத்திரண்டு. விழிமணி= கண்பாவை. சிட்டர்= அடியார்.

**பொழிப்புரை** : அளவற்ற கருணைகாரணமாக முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த மலைமகளாகிய பார்வதிதேவி பெற்றுத்தன் கண்பாவைபோல் வளர்த்துச் சீராட்டப்பெற்றவனாய், அடியவர் உள்ளத்தில் வாழ்கின்ற செழுஞ்சுடராய் விளங்குகிறவனே! சிறுத்த இடையுடைய பெண்களின் கூட்டத்திற்கும், அருவிகள் கீழ்வீழும் குறிஞ்சிக்குரியவனாகிய உனக்கும் கடுமையான வழக்கு-வியாச்சியம் எதுவும் இல்லை. இதுதவிர பெரியநிலத்தில் மற்றவர்கட்டும் வீட்டினைக்கண்டவர் கட்டுகிறவர் செயலில் குறைகூறுவரேதவிர, அவ்வீட்டைத் தன்காலால் சிதைத்துக்குறும்புத்தனம் செய்ததாகக் கண்டதோ கேட்டதோஇல்லை. அடியவர் மனத்தில்வாழும் செழுஞ்சுடரே! சிறுமியராகிய எங்கள் வீட்டினைச்சிதைக்காதே. மிக உயரமாக வளர்ந்த இலந்தைவனத்தின் அரசே! சிறுமியராகிய எங்கள் வீட்டினைச் சிதைக்காதே.

**விளக்கம்** : கட்டும் வீட்டுக்குக் குறைகூவார் உண்டேதவிர அதனை அழிப்பவர் இல்லை. மேலும் சிறுமியராகிய எமக்கும், குறிஞ்சிக்குரிய உனக்கும் எவ்வகைப் பிணக்கும் இல்லை. எனவே எம்சிற்றிலைச் சிதைக்காதே என்றனர்.

76. காலா யுதமாம் கொடியவனே
கணக்கில் மலைவாய் இருந்தவனே
கள்ஆர் கடம்பா குரவைஅமர்
கருத்தா கூத்தன் கான்முளையே
மாலார் விரும்ப வரும்மருகா
மணமால் யானைக்(கு) ஒருபாகா
வானோர் நடுங்கப் புவிநடுங்க
வரும்ஓர் ஆட்டை மகிழ்ந்தவனே
மேலார் கடன்மா அடுவேலை

மேவும் ஒருவா எனஅடியேம்
விளம்பு துதியை முழு(து)உணர்நீ
வேறொன் றாக மதித்தனையோ
சீலா கோலா கலாமயிலா
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 6 )

**குறிப்புரை** : காலாயுதம்= கால்களையே ஆயுதமாகக் கொண்ட சேவல். மலைவாய்= மலையில். குரவை அமர்= குரவைக்கூத்தை விரும்பும். கூத்தன்= அம்பலக் கூத்தன். கான்முளை= மகன். மாலார்= திருமால். மணம் மால் யானை= நன்னிலையும் பெருமையும் கொண்ட தெய்வயானையம்மை. ஆட்டை= ஆட்டினை. மகிழ்ந்தவனே= ஊர்ந்து மகிழ்ந்தவனே. கடல் மேல் ஆர்= கடலின் மேற்பரப்பில் ஆரவாரித்த. மா= மாமரமான சூரபன்மன். அடுவேலை= வென்ற வேலினை. வேறொன்றாக= தவறாக. சீலா= நற்குணத்தனே கோலா= அழகனே. கலாமயிலா= அழகிய ஆண்மயிலுடையவனே.

**பொழிப்புரை** : கால்களையே ஆயுதமாகக்கொண்ட சேவலைக்கொடியாக உயர்த்தியவனே! எண்ணற்ற மலைகளில் இருக்கின்றவனே! தேன்சுரக்கும் கடம்பமலர் மாலையனே! குரவைக்கூத்தினை விரும்பும் கருத்துடையனே! கூத்தப்பெருமானாம் பொன்னம்பலவாணர் திருமகனே! திருமால் விரும்பும் மருமகனே! நன்னிலையும் பெருமையும் கொண்ட பிடியாகிய தெய்வயானையம்மையைச் செலுத்தும் பாகனே - கணவனே! தேவர்கள் மனம்நடுங்கவும், உலகம்மனம்நடுங்கவும் வந்த ஆற்றல்வாய்ந்த ஆட்டினை அதன்மேல் ஏறிச்செலுத்தி மகிழ்ந்தவனே! கடலின்மேல் எழுந்த மாமரமாகிய சூரபன்மனை வென்ற வேலினை ஏந்திய ஒப்பற்றவனே என்று நாங்கள் சொல்லிப்போற்றுவதை நன்குஉணர்ந்த நீ, எம்மைத்தவறாக நினைத்தாயோ ? நற்குணத்தனே! பேரழகனே! அழகிய ஆண்மயிலில் ஏறுகிறவனே! சிறுமியராகிய எமதுசிற்றிலைச் சிதைக்காதே, மிகமிக உயரமாக வளர்ந்த இலந்தைக்காடாய கீழ்வேளூர் அரசனே! சிறுமியராகிய எமது சிற்றிலைச் சிதைக்காதே. .

**விளக்கம்** : நாரதர் செய்தவேள்வியில் எழுந்த அசுரத்தன்மை வாய்ந்த ஆட்டினை வீரவாகுத்தேவர் கொண்டுவந்து நிறுத்த அதன்மேல் ஏறி எண்திக்கும்வலம்வந்து அதனை அடக்கியது குறிப்பது, “வானோர்நடுங்கப் புவிநடுங்கவரும் ஓராட்டை மகிழ்ந்தவனே” என்றதொடர் கந்தபுராணச் செய்தி. விரிவான இச்செய்தியை;

“ மருப்பாயும் தார்வீர வாகு, - நெருப்பில்உதித்(து)
அங்கண் புவனம் அனைத்தும் அழித்(து)உலவும்
செங்கண் கிடாய்அதனைச் சென்றுகொணர்ந்(து) - எங்கோன்
விடுக்குதிஎன் றுய்ப்ப அதன்மீ(து) இவர்ந்(து) எண்திக்கும்
நடத்தி விளையாடும் நாதா “ ( கந்தர் கலிவெண்பா )

என்பார் ஸ்ரீ குமரகுருபர அடிகள்.

தெய்வயானையம்மையை, “யானை” என்றதற்கேற்ப முருகனை, நயமுறப் “பாகன்”என்றார்.

74. உருவில் சிறந்த மணிநெடுங்கண்
ஓரா யிரத்தோன் அரசிருக்கும்
உயர்பொன் உலக வீட்டினுக்கும்
ஓங்கு குறிஞ்சி மலையினுக்கும்
பொருவத் தொடங்கி சமைத்ததுவோ
பொலன்மா மருகில் விளையாடப்
புனைசெஞ் சதங்கைச் சீரடிகள்
பொருந்த நடக்கும் வழிஇதுவோ
கருவிக் கனமூ அடுப்பின்மிசைக்
காணும் ஆரல் பால்பெறுநீ
கருதி எளியேம் புரிமனையைக்
கலைக்கத் தகுமோ கதிவழங்கும்
திருவில் சிறந்த குருபரனே

சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 7 )

**குறிப்புரை** : கண் ஓராயிரத்தோன்= ஆயிரம் கண்ணனாகிய இந்திரன். பொன்உலகவீடு= தேவருலக அரண்மனை. குறிஞ்சிமனை= மலையாகிய வீடு. பொருவ= ஒப்ப. சமைத்ததுவோ=கட்டப்பட்டதா. பொலன் மாமருகு= அழகிய பெருந்தெரு. செஞ்சதங்கைபுனை சீறடிகள்= சிறந்த சதங்கை கட்டியசிற்றடிகள். கருவிக்கனம்= கூட்டமாகச் செறிந்த. மூவடுப்பின்மிசை= பரணிவிண்மீன்களுக்குமேல். காணும் ஆரல் பால்= தோன்றும் கார்த்திகை மாதரின்முலைப்பால். பெறுநீ= குடித்தநீ. கருதி= வேண்டுமென்றே நினைத்து. புரிமனை= விரும்பும் வீடு. கதி= நற்கதி. திரு= தெய்வம்.

**பொழிப்புரை** : ஆயிரங்கண்ணனாகிய தேவேந்திரனது தேவருலக அரண்மனையையும், உயர்ந்தமலையாகிய வீட்டையும்ஒப்பக் கட்டப்பட்டதா இச்சிற்றில்? அழகியதும் பெரியதும்ஆகிய இந்தத் தெருவில், சதங்கை கட்டப்பெற்று விளையாடும் உன்சின்னஞ்சிறுகால்கள், பொருத்தமாக நடக்கும் வழி இதுவன்று; கூட்டமாகச்செறிந்த பரணி விண்மீனுக்கு மேலே தோன்றும் விண்மீன்களாகிய கார்த்திகை விண்மீன்களாம் மாதரின் முலைப்பால் குடித்த நீ, நாங்கள்விரும்பிக்கட்டிய மணல்வீட்டினை வேண்டுமென்றேகலைத்தல் தகாது. நற்கதி வழங்கும் தெய்வங்களுள் சிறந்த குருவாகிய மேலானவனே! சிறுமியராகிய எங்கள் மணல் வீட்டினைச் சிதைக்காதே. மிகமிக உயரமாகவளர்ந்த இலந்தைவனத்து அரசனே சிறுமியராகிய எங்கள்மணல் வீட்டைச் சிதைக்காதே.

**விளக்கம்** : கார்த்திகைமாதர் அறுவர் முலைப்பால் உண்டது :

" முன்னர் அறுமீன் முலையுண்டு அழுது விளையாடி " ( கந்தர்கலிவெண்பா )

உன்மாமனார் இந்திரன் அரண்மனைக்கோ, உன்வீடாகிய குறஞ்சிக்கோ போட்டியாகக் கட்டப்பெற்றது என்று தவறாகஎண்ணியோ; நீ உன்சின்னஞ்சிறுகால்களால் நடக்கஇடையூறாகக் கட்டப்பட்டதுஎன்று எண்ணியோ இச்சிற்றிலை அழிக்காதே என்றார்.

75. ஆறு பலவும் ஏழ்கடலும்
அடுத்த திசைகள் ஓரெட்டும்
அணிஆர் கண்டம் ஒன்பதும்சீர்
அண்டர் உல(கு)ஆ தியபிறவும்
கூறு வனிதைக்(கு) அளித்தபிரான்
குறைவின்(று) அமைத்தான் அம்முறையே
கோக னகத்தோன் சமைத்தனால்
குற்றம் குறித்த(து) இலைஅவனும்
வேறு தபதி புரிசெயலை
வெகுண்ட(து) இலையே யாம்இழைத்த
விளையாட் டினைநீ முனிகுவது
மேன்மைக்(கு) அழகோ வேதம்எலாம்
தேறும் கமல மலர்ப்பதனே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 8 )

**குறிப்புரை** : அண்டர்= தேவர். கூறு வனிதை= இடப்பாகம் கொண்ட மனைவி. அம்முறையே= அதுபோலவே. கோகனகத்தான்= தாமரையில் இருக்கும் நான்முகன். இலை= இல்லை. தபதி= சிற்பி. தேறும்= தெளிந்து வணங்கும்.

**பொழிப்புரை** : எல்லாஆறுகளையும், ஏழ்கடலினையும், பொருந்திய எண்திசைகளையும், அழகிய கண்டங்கள் ஒன்பதினையும் சிறந்ததேவருலகம் முதலியவற்றையும் தனது இடபாகம்கொண்ட மனைவியின் பொறுப்பில் வழங்கிய சிவபிரான் அவற்றைக் குறைவுஏதுமின்றி அமைத்தான். அதுபோலவே நான்முகனும் அவற்றைப்படைத்ததனால் அவற்றில் சிவபிரான் குற்றம்கூறியது இல்லை. வேறுஒரு சிற்பிசெய்த அச்செயலை நான்முகன்சினந்ததும் இல்லை. எனவே நாங்கள் விளையாடும்பொருட்டுக் கட்டிய வீட்டினைசினந்து அழிப்பது உன்மேன்மைக்கு அழகன்று. நால்வேதங்களும் தெளிந்து வணங்கும்

தாமரைத் திருவடியனே! சிறுமியராகிய நாங்கள் இழத்த சிற்றிலைச் சிதைக்காதே. மிகமிக உயரமாக வளர்ந்த இலந்தைவனத்து அரசனே! சிறுமியராகிய நாங்கள் இழைத்த் சிற்றிலைச் சிதைக்காதே.

**விளக்கம்** : சிவபிரான் அண்டத்தில் ஐந்தொழில் புரியும் செயலைத் தான்செய்யான், அதை அம்மைக்குரியதாக்கி அமைவான் என்பதால் அவனை " ஆறுபலவும் ..............பிறவும் கூறு வனிதைக்கு அளித்தபிரான் " என்றார். இச்செய்தியைத் திருக்களிற்றுப்படியார் உவமைகாட்டி;

" நம்கையினால் நாம்அனைத்தும் செய்தாற்போல் நா(டு)அனைத்தும்
நங்கையினால் செய்து அளிக்கும் நாயகனும் " ( 78 )

நம்மூளை நினைப்பதைக் கைசெய்வதுபோல் சிவபிரான் நினைப்பளவில்நிற்க அந்நினைப்புகளை அம்மை நிறைவேற்றுவாள் என்பதுகருத்து,

76. மூவர் பெரிய கடவுளரின்
முதன்மை உடைய கடவுள்திரு
முழுநீ(று) இலங்கு நெற்றிவிழி
முளைத்த அருமை ஒருமகன்நீ
ஆவை அதனால் யாம்இழைத்த
ஆரல் நிகர்க்கும் மணல்கூரை
அழிவு செயினும் அதற்(கு)இரங்கேம்
அருமா தவங்கள் பலகோடி
மேவ இயற்று முனிவரர்க்கும்
விண்ணா திபர்க்கும் கிடையாத
விரைத்தாள் புழுதி படிவதற்கே
மிகவும் இரங்கி மெலிகுவமால்
தேவர் குலசே னாபதியே
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 9 )

**குறிப்புரை** : மூவர் பெரிய கடவுளர்= உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய முப்பெரும் கடவுளர். ஆவை= ஆவாய். ஆரல் மணல் நிகர்க்கும்= கார்த்திகை மீன்போல் ஒளிவீசும் மணலால்ஆன. கூரை= சிற்றில்.விண்ணாதிபர்= வானுலக அதிபர்கள். விரைத்தாள்= மணம்மிக்க திருவடி. மெலிகுவம்= வருந்துகிறோம்.

**பொழிப்புரை** : உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய மூன்றுபெரிய கடவுளர்க்கெல்லாம் முதன்மையுடைய கடவுளின் - சிவபிரானின், முழுமையாகத் திருநீறுவிளங்கும் நெற்றியில் உள்ள விழியிலிருந்து தோன்றிய அருமையான ஒப்பற்றமகன் நீஆவாய். எனவே நாங்கள் இழைத்ததும், கார்த்திகை விண்மீன்போல் ஒளிர்வதும் மணலால்ஆனதும் ஆகிய சிற்றிலை நீ அழித்தாலும் அதன்பொருட்டு நாங்கள் வருந்தமாட்டோம். ஆனால், பலகோடிஅரியமாதவங்களைப் பொருத்தமாகச் செய்த முனிவர்களுக்கும், வானுலக அதிபர்களுக்கும் கிடைக்காத உனது மணக்கும்திருவடியில் புழுதிபடிவதற்கே மனம்மிகவும் நொந்து வருந்துகிறோம். தேவர்குலத்தின் சேனபதியே! சிறுமியராகிய நாங்கள்இழைத்த சிற்றிலைச் சிதைக்காதே, மிகமிக உயரமாக வளர்ந்த இலந்தைவனத்து அரசனே! சிறுமியராகிய நாங்கள் இழைத்த சிற்றிலைச் சிதைக்காதே.

**விளக்கம்** : யாவரினும் உயர்ந்தவர் மகன்செய்யும் பிழையை, உலகு பொருட்படுத்துவதில்லை என்ற உலகியலைக் காட்டுவது இச்செய்யுளின் முற்பகுதி. அழிக்கும்போது உன்திருவடியில் புழுதிபடியும். அதனால் நாங்கள்வருந்துவோம். நாங்கள் வருந்தாது இருக்கவாவது அழிக்காதே என்றார்.

77. பாம்பாம் அரங்கம் துயில்கூரும்
பாயல் எனக்கொண்(டு) அகம்மகிழும்
பரந்தா மனும்வா ரிசப்பொகுட்டில்
பரமேட் டியும்பற் பலமுறையால்
ஆம்பால் அமரர் பணிந்(து)ஏத்தும்

அமரர் பதியின் மகவானும்
அறிதற்(கு) அரியசெஞ் சீறடியின்
அலர்கற் பகப்பூந் துகள்உறினும்
ஓம்பா வருந்தும் இம்மணிகள்
உறுத்தில் பொறுக்கும் தகைத்தன்றால்
உமையாள் களபப் புளகமுலை
உபயக் கனகக் கடம்பொழிந்த
தீம்பால் மணக்கும் கனிவாயாய்
சிறியேம் சிற்றில் சிதையேலே
சேண்ஆர் இலந்தை வனத்(து)அரசே
சிறியேம் சிற்றில் சிதையேலே. ( 10 )

**குறிப்புரை** : அரங்கம்= இடம். பாயல்= பாய். பரந்தாமன்= திருமால். பரமேட்டி= நான்முகன். ஆம்பால்= ஆனதகுதி. பதி= உலகு. மகவான்= இந்திரன். கற்பகஅலர் பூந்துகள்= கற்பமலரின் மென்மகரந்தம்.. உறினும்= பட்டாலும். ஓம்பா= பொறுத்துக்கொள்ளாமல். மணிகள்= முத்துப்பரல்களையுடைய சிலம்பு. தகைத்தன்று= தன்மையுடையதல்ல. களபப் புளகம்= கலவைச்சாந்துபூசியதும் பூரித்ததும். முலை உபயக் கனகக் கடம்= முலைகளாம் இருபொற்குடங்கள்.

**பொழிப்புரை** : பாம்புஆகிய இடத்தை, உறங்குதற்குரிய பாயாகக்கொண்டு மனம்மகிழ்ந்து அறிதுயில்கொள்ளும் திருமாலும், தாமரைப்பொகுட்டில் இருக்கும் நான்முகனும், இந்திரனும், தேவர்களும் தத்தமக்கு உரியதானதகுதிப்படி பற்பலவகையில் வணங்கிப்போற்றினாலும் அவர்களால் அறிதற்கு இயலாத அரிய சிவந்த உன்சிறியதிருவடிகள், கற்பகமலரின் மென்மகரந்தம்பட்டாலும் அதனைத்தாங்காது வருந்தும். அவ்வாறு வருந்தும் மென்மையான திருவடிகளை, முத்துகளைப் பரல்களாகக்கொண்டசிலம்பு உறுத்தின் பொறுத்துக்கொள்ளும் தகுதி அத்திருவடிகளுக்கு இல்லை. உமையம்மையின் கலவைச்சாந்து பூசியதும், பூரித்ததும் ஆகிய இருபொற்குடங்களாக உள்ள முலைப்பால் மணக்கின்ற கொவ்வைக்கனிபோன்ற இதழ்களுடையவனே! சிறுமியராகிய எமதுசிற்றிலைச் சிதைகாதே. மிகமிகஉயரமாகவளர்ந்த இலந்தை வனத்து அரசனே! சிறுமியாராகிய எமதுசிற்றிலைச் சிதைக்காதே.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உயர்வுநவிற்சியணி.

### 9. சிறுபறைப்பருவம்

மாசற்ற இந்துசிலை உப்பரிகை மணிமுன்றில்
மலர்அமளி மீதுகொழுநர்
மங்கய ருடன்துயிலும் வேலைமதி வரஅந்த
வார்சிலைப் புனல்பெருகவே
ஆசற்ற பஞ்சணைகள் புணையாக நீந்திவிளை
யாடிமன(து) ஆர்வம்ஓங்க
அயல்நின்ற செம்மணி செய்குன்றின் ஏறவே(று)
ஆடைஆ பரணம்விரைகள்
பேசுற்ற பலவிதம் அணிந்(து)அகில் நறும்புகை
பிறங்குபரி அங்கஅணைமேல்
பிணைஅனையர் தரும்இன்ப வெள்ளம்அவர் கொங்கைப்
பெருங்குடம் கொண்டுநீந்தும்
தேசுற்ற வளம்மேவு பதரிவனம் வருமுருக
சிறுபறை முழக்கியருளே
சிறுபிறை நுதல்கவுரி பெறுசரவ ணக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே. ( 1 )

**குறிப்புரை** : இந்துசிலை= சந்திரகாந்தக்கல். வேலை= காலம். வார்சிலை= பெரியஅந்தச் சந்திரகாந்தக்கல். பஞ்சுஅணை= மென்மையான தலையணை. புணை= தெப்பம். செம்மணி செய்குன்று= மாணிக்கமணிகள்பதித்த செயற்கைக்குன்று. விரைகள்= நறுமணப்பொருள்கள். விரைகள் அகில்நறும்புகை என்க. பரியங்க அணை= படுக்கைமெத்தை. பிணை= பெண்மான். தேசு= ஒளி.

**பொழிப்புரை** : குற்றமில்லாத இந்திரகாந்தக் கல்லாலான மேல்மாடியின் அழகியமுற்றத்தில் அமைந்த மலர்ப்படுக்கைமேல் கணவன்மார் தம்மனைவியருடன் உறங்கும்போது, முழுநிலவுவர அதன் ஒளியால் அந்தப்பெரிய சந்திரகாந்தக்கல்லில் தண்ணீர் மிகப்பெருகியதால் குற்றமற்ற மென்மையான தலையணையைத் தெப்பமாகக்கொண்டு நீந்தி விளையாடியதால் மனத்தில் ஆர்வம்மிக, பக்கத்தில் நின்ற மாணிக்கமணிகள் பதித்த செய்குன்றில் ஏறி, வேறுஆடைகள், புகழ்வாய்ந்த பலவித அணிகலன்கள் பூண்டு, அகில்நறும்புகை விளங்கும் படுக்கைமெத்தைமேல் பெண்மான் ஒத்த பெண்கள்தரும் இன்பவெள்ளத்தை அவர்களின் கொங்கைகளாகிய பெரியகுடத்தைப் பற்றிக்கொண்டு நீந்துகின்ற ஒளியுடைய வளம்பொருந்திய இலந்தைவனத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலமுருகப்பெருமானே! சிறியபறையை முழக்கியருள்க. சிறியபிறைபோன்ற நெற்றியுடைய கௌரியம்மைதந்த சரவணக்கடவுளே! சிறுபறையினை முழக்கியருள்க.

**விளக்கம்** : இருவகைப் பொருள்களைப் பற்றிக்கொண்டு இருவகை வெள்ளத்தில் நீந்தினர் என்றார். முன்னர்க்கூறிய அணை, தலையண; பின்கூறிய அணை படுக்கைமெத்தை.

**இலக்கணக்குறிப்பு** : கடவுள் - அண்மைவிளி.

79. ஆதவன்உ திக்கவிரி சண்டகிர ணங்களால்
அந்தரம் வெதுப்புறாமல்
ஆகாய கங்கைவெந் நீர்ஆகி ஓடாமல்
ஆய்அறல் வெப்பிடாமல்
மாதரையின் நானிலமும் வன்பாலை ஆகாமல்
மக்கள்உடல் வெய்(து)உறாமல்
மாமதியம் வாள்அரவு தீண்டுவிட வெம்மையால்
வாடிஉடல் மங்காமலே
பேதம்உறு முகில்அகடு தடவிவெளி முக(டு)உறு
பெரும்பணை தழைத்(து)ஒலிக்கும்
பிரமரம் நிரந்தமலர் மழைநறிய தாதுமழை
பெய்(து)எங்க ணும்சிறந்த
சீதளம்நி றைந்தபொழில் சூழ்பதரி வனமுருக
சிறுபறை முழக்கியருளே
சிறுபிறை நுதல்கவுரி பெறுசர வணக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே. ( 2 )

**குறிப்புரை** : ஆதவன்= சூரியன். விரி சண்ட கிரணம்= பரவிய கொடிய கிரணம். ஆய்= நுட்பமான. மாதரை= அகன்றபூமி. நானிலம்=குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்ற நான்கு நிலங்கள். வன்பாலை= கொடியபாலை. வெய்து உறாமல்= சூடாகாமல். வாள்= கொடிய. தீண்டு= தொட்ட. பேதம்உறு= வெவ்வேறான. முகில் அகடு= மேகங்களின் நடுவிடம் - வயிறு. வெளிமுகடு= அண்டவெளியின் உச்சி. பெரும்பணை= வளமான மரக்கிளை. - கிளைகளில் பூத்த மலர். தழைத்து= மிகுதியாக. பிரமரம்= வண்டு. நிரந்த= மிகுந்த. மலர்மழை= மலர்களாலானமழை. பூந்தாது மழை= மகரந்த மழை

**பொழிப்புரை** : சூரியன் தோன்றியதும், அதனால் பரவிய கொடியகதிர்களின் வெப்பத்தால்; வானுலகு வெப்பம்அடையாமல், ஆகாயகங்கைநீர் கொதித்து வெந்நீராக ஓடாமல்; நுட்பமான அறல்மணல் சூடாகாமல், அகன்ற பூமியின் நால்வகைநிலங்களும் கொடியவெப்பமுடைய பாலைநிலமாகாமல், அழகிய நிலவு கொடியபாம்பு ( இராகு கேது ) தீண்டிய விடத்தின்கொடுமையால்வாடி உடல்ஒளி குன்றாமல் இருக்கும் வகையில்; வெவ்வேறுவகைப்பட்ட மேகங்களின் நடுவிடத்தைக்கிழித்துக்கொண்டு அண்டவெளியின் உச்சியையடைந்த வளமான மரக்கிளைகளில் பூத்தமலர்களில் மிக்கஒலியெழுப்பி மொய்த்த மிகுந்தவண்டுகளால் உதிர்ந்த மிக்கமலர்மழையாலும் அம்மலர்களின் மகரந்தமழையாலும் எவ்விடமும் சிறந்துவிளங்கச்செய்யும் குளிர்ச்சிநிறைந்த சோலைகள் சூழ்ந்த பதரிவனமாகிய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானே! சிறுபறைமுழக்கியருள்க. சிறியபிறைபோன்ற நெற்றியுடைய கௌரியம்மை தந்த சரவணனாகியகடவுளே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : “ முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து பாள் என்பதோர் படிவம் கொள்ளும் “ என்பது மரபு. ஆனால் இங்கு ஞாயிற்றின் கொடியவெப்பத்தால் நானிலமும் பாலையாயிற்று என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உயர்வு நவிற்சியணி.

80. விரிக்கும் கதிர்ப்பசிய மரகதத் தால்பொலி
விடங்கத் தடங்கள்மேய்ந்த
வெண்பளிங்(கு) ஒளிவயிரம் வெயில்உமிழ் நிலாக்கற்றை
மிகுகனக மனையின்நாப்பண்
வரிக்குங் குமக்கொங்கை யர்களது செங்கைஉறை
மாடகத் திவவுயாழின்
மழலைஅம் தீஞ்சொல்சில பேசுதலும் அயல்நின்று
வரிசிலை பிடித்தகுமரா
பரிக்கும் பசுங்கிள்ளை இனமென்று மதியம்ஒப்
பாம்வெள்ளி வள்ளம்நிறையப்
பால்அட்டி ஊட்டுதற்(கு) ஏகுதலும் அந்நலார்
பவளவாய் கிள்ளைஅன்னம்
தெரிக்கும் பெரும்சிறப்(பு) ஆர்பதரி வனமுருக
சிறுபறை முழக்கியருளே
சிறுபிறை நுதல்கவுரி பெறுசர வணக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே. ( 3 )

**குறிப்புரை** : பசியகதிர் விரிக்கும் மரகதம்= பசுமையான ஒளிபரப்பும் மரகதமணி. விடங்கத் தடம்= அழகிய இடம். மேய்தல்= மூடப்படல். வெயில்= ஒளி. நிலாக்கற்றை= நிலவின் கதிர்கள். கனகமனை = செல்வம்நிறைந்த வீடு. நாப்பண்= நடுவில். வரிக்குங்குமக் கொங்கையர்= குங்குமச்சாந்து எழுதிய கொங்கைகளுடைய மகளிர். மாடகம்= வீணையின் முறுக்காணி. திவவு= வார்க்கட்டு. வரி சிலை பிடித்த= இசைப்பாட்டின் ஒலியை - இசையை- கேட்ட. பரிக்கும்= காத்துவரும். கிள்ளை= கிளி. மதியம் ஒப்பாம் வெள்ளி வள்ளம்= நிலவுபோல் வெண்மையான வெள்ளிக்கிண்ணம். பால் அட்டி= பால் ஊற்றி. அன்னம் தெரிக்கும்= அன்னப்பறவைபோல் விளங்கும்.

**பொழிப்புரை** : பசுமையான ஒளிபரப்பும் மரகதமணியால் ஒளிரும் அழகியஇடத்தை, வெண்பளிங்கின் ஒளியாம் வைரஒளி உமிழும் ஒளிக்கற்றை மிக்குமூடிவிளங்கும் செல்வம்மிக்கவீட்டின் நடுவே; குங்குமச்சாந்து எழுதப்பெற்ற கொங்கைகளுடைய மகளிர், தம்சிவந்தகைகளில் ஏந்தியுள்ளதும், முறுக்காணியால் இழுத்துக்கட்டப்பெற்றதுமான வார்க்கட்டுடையயாழின் இசைப்பாட்டினைக்கேட்டகுமரனே! அழகிய மகளிர், தாம்காத்துவரும் பவளம்போன்ற அலகினையுடைய கிளிக்கு, முழுநிலவு போல் வெண்மையான வெள்ளிக்கிண்ணத்தில் பாலூற்றி ஊட்டும் அன்னப்பறவைபோல் விளங்கும் பெருஞ்சிறப்புடைய இலந்தை வனமாம் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானே! சிறுபறை முழக்கியருள்க. சிறியபிறைபோல் விளங்கும் நெற்றியுடைய கௌரியம்மை தந்த சரவணன்ஆகிய கடவுளே! சிறுபறை முழக்கியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : மதியமொப்பாம் வெள்ளி வள்ளம் - உவமையணி.

81. வார்தரு பெருங்ககனம் ஊடுசெல் சுடர்ப்பரிதி
வானவன் நடத்தும்ஒற்றை
மணிஆழி ஐங்கதியின் ஆறுசெலு மாறுஏழ்
மரகதப் புரவிபூண்ட
தேர்மிசை வளர்ந்துவிளை செந்நெல்அம் கதிர்நிரைத்
திரள்சூழ்ந்து மொய்த்தமுறைமை
தினந்தோறும் விண்தலம் தொடுதல்அ டா(து)எனச்
சீகரப் பெருவாரிசூழ்
பார்மகள் நிவந்ததன கைகள்பற் பலகொண்டு
பற்றிஇவண் வருகஎன்று
பரிவுடன் அழைப்பது நிகர்ப்பக் கருங்களமர்
பாதுகாத் திட்டபயிரின்
சீர்பெறு செழுங்கழனி சூழ்பதரி வனமுருக

சிறுபறை முழக்கியருளே
சிறுபிறை நுதல்கவுரி பெறுசர வணக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே. ( 4 )

**குறிப்புரை :** வார்தரு= மிகநீண்ட. ககனம்= வானம். பரிதி வானவன்= சூரியதேவன். நடத்தும்= செலுத்தும். மணிஒற்றை ஆழி= அழகிய ஒற்றைச்சக்கரம். ஐங்கதி= ஐவகையிலான வேகம். ஆறுசெலுமாறு= வழியில்செல்லுமாறு. மரகதப்புரவி= வளமான குதிரை. தேர்மிசை= தேருக்கும்மேல். மொய்த்த முறை= மூடி இருப்பது. விண்தலம்= வானுலகம். அடாது= தகாதது. சீகரம்= செல்வச்செழிப்பு. வாரி= கடல். நிவந்த தனகை= நீண்டுயர்ந்த தன் கைகள். கருங்களமர்= வலிய உழவர்கள்.

**பொழிப்புரை :** மிகநீண்ட பெரியவானவழியே செல்லும் ஒளிவடிவானசூரியன் செலுத்தும் ஒற்றைச் சக்கரமுடைய அழகியதேரினை, ஐவகையிலான வேகத்தில் வழியில்செல்ல, ஏழுவளமான குதிரைகள் கட்டிய தேருக்கும்மேல் வளர்ந்து நெற்பயிர் அதைமூடி இருப்பதால் இச்செயல் உனக்குத்தக்கதன்று என்று, நிலமகள் நீட்டிஉயர்த்திய தன்மிகப்பல கைகளால் பற்றிக்கொண்டு இங்கேவா என்று அன்புடன் அவற்றை அழைப்பதுபோல், வலிமைவாய்ந்த உழவர்கள் பாதுகாத்து அறுக்கும் நெற்பயிருடைய நன்செய்நிலம் சூழ்ந்த இலந்தைவனத்தில் எழுந்தருளியுள்ள முருகனே! சிறுபறை முழக்கியருள்க. சிறியபிறைபோன்ற நெற்றியுடைய கௌரியம்மைதந்த சரவணன் ஆகியகடவுளே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்:** குதிரையின் ஐவகை நடைகள் - இயக்கங்கள் : மெல்லியநடை, விரைவுநடை, இருகால் தூக்கிஓடுநடை, சுற்றிஓடல், முழுஓட்டம் என்பன. சூரியனின் ஏழு குதிரைகள் சூரியக்கதிரில் உள்ள ஏழுவண்ணங்கள் என்பர்.

. **இலக்கணக்குறிப்பு:** " தினந்தொறும் விண்தலம் தொடுதல் அடாது ...... பயிரின் " - தற்குறிப்பேற்றவணி. ஐங்கதியின் ............. ஏழ்மரகதப்புரவி - எண்ணலங்காரம்.

82. பொன்துணர் கலித்தமென் பல்லவத் தொகைபொதுளு
பூங்கொம்ப ரில்கோகிலம்
பூங்கிளிகள் தமரிக்கும் அளிகுலவு சோலையில்
பொலிநீண் மணிச்செய்குன்றைக்
கல்திரள் எடுத்துநிரை காத்தவேய்ங் குழல்இசைக்
கண்ணன்என எண்ணிஉண்ணும்
கன்றுதொட ரப்பசுக் குலம்வால் எடுத்துக்
கனத்துஓட ஒழுகுதீம்பால்
எற்றுறு திரைத்துறைகள் எங்கும்நிறை யக்கங்கை
இங்குவந்(து) உற்ற(து)எனா
ஏந்திழை மடந்தையர் குடைந்(து)ஆடி வார்அளக
ஈரம்பு லர்த்திநிற்கும்
தெற்றிகள் செழித்(து)இலகு பதரிவனம் வருமுருக
சிறுபறை முழக்கியருளே
சிறுபிறை நுதல்கவுரி பெறுசரவ ணக்கடவுள்
சிறுபறை முழக்கியருளே. ( 5 )

**குறிப்புரை :** பொன்துணர்= அழகிய பூங்கொத்து. கலித்த= செழித்த. மென்பல்லவத் தொகை= மென்மையான தளிர்க்கூட்டம். பூங்கொம்பர்= அழகியகிளை. கோகிலம்= குயில். தமரிக்கும் அளி= ஆரவாரிக்கும் வண்டுகள். நீள்மணி= உயரமான அழகிய. கல்திரள்= கோவர்த்தன்மலை. உண்ணும் கன்று= பாலூட்டும் கன்றுகள். எற்றுறு= அலைஎறியும். குடைந்துஆடி= மூழ்கிநீராடி. வார் அளகம்= நீண்ட கூந்தல். தெற்றிகள்= திண்ணைகள்.

**பொழிப்புரை :** அழகியபூங்கொத்துகள் செழித்ததும், மென்மையான தளிர்கள் கூட்டமாகத் தழைத்ததும் ஆகிய அழகியகிளைகளில் குயில், அழகிய கிளிகள், ஆரவாரிக்கும் வண்டுகளின்கூட்டம் முதலியன விளங்கும் சோலையில் பொலியும் அழகியநீண்ட பசியசெய்குன்றை - கோவர்த்தனம் என்ற மலையினை; எடுத்துப்பிடித்துப் பசுக்கூட்டத்தைகாத்தவனும், புல்லாங்குழல் இசைப்பவனும் ஆகிய கண்ணபிரான் என்றுநினைக்கும் கன்றுக்குட்டிகள் செல்ல, அதுகண்ட பசுக்கூட்டம் வால்களைச்

சற்றேஉயர்த்திக்கனைத்து இனியபால்ஒழுகப் பின்தொடர, அப்பசும்பால் அலைகள் எற்றும்துறைகள் எங்கும் நிறைய, அதனைக்கங்கை இங்குவந்து சேர்ந்ததுஎன்று அணிகலன்அணிந்த மகளிர்அதில்மூழ்கிநீராடி, தமது நீண்டகூந்தலின் ஈரத்தைத் தம்வீட்டுத்திண்ணைகளில் புலர்த்திக்கொண்டுநிற்கும் செழிப்புவிளங்கும் இலந்தைவனமாகிய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலமுருகப்பிரானே! சிறுபறை முழக்கி யருள்க. சிறுபிறைஒத்த நெற்றியுடைய கவுரியம்மை தந்த சரவணக்கடவுளே! சிறுபறை முழக்கியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுளில், கன்றுகளின் மயக்கம், மடந்தையர் மயக்கம் என்ற இருமயக்கவணிகள் உள.

83. நீதிசொல் வேதமும் ஆகம மும்புகழ்

நிகழ்அங் கமும்விதியால் நியதியொ(டு)
ஓதி உணர்ந்திடு வேள்வியும் நெறிதரு
பிதிர்தேவர்க்கு ஏதம்இல் திலதர்ப்
பணம்முத லியசெயும்

இயல்வேள் வியும்எழுநா

எரியிடை ஓமம் இயற்றுறு வேள்வியும்

இடுபலி வேள்வியும்நூல்

ஓதிய நன்மனை மேவும்வி ருந்தினர்

உள்ளம்உ வந்(து)உண்ண

உதவிசெய் வேள்வியும் ஆகிய வேள்விகள்

ஓரைந் தும்புரியும்

மூதறி வோர்உறை கீழ்வே ளூரன்

முழக்குக சிறுபறையே

முத்தி அருள்சிவன் உத்தமி புதல்வன்
முழக்குக சிறுபறையே. ( 6 )

**குறிப்புரை** : அங்கம்= வேதாங்கம். நியதி= முறை. ஏதம்இல்= குற்றம் இல்லாத. இயல்= இயல்பான. எழுநா= ஏழுவகைச்சுவாலை. ஓமம்= யாகத்தீ. பலியிடு= பிச்சையிடும். மேவும்= வரும். மூதறிவோர்= முதிர்ந்த அறிவுஉடையவர்

**பொழிப்புரை** : நீதிகூறும் வேதம், ஆகமம், புகழ்வாய்ந்த வேதாங்கம் ஆகியவற்றை விதிப்படியும் முறைப்படியும் ஓதிஉணரும் வேள்வி; பிதிர் தேவர் ஆகியோர்க்கு முறைப்படி நீர், எள்இறைத்துச் செய்யும் தர்ப்பணம் ஆகிய உலகியல் வேள்வி; தீயின் ஏழுவகைச்சுவாலையுடன் செய்யும் வேள்வி; பிச்சையிடுதலாகிய வேள்வி; நல்லநூல்களைக் கற்றவராய் வீட்டுக்குவரும் நல்லவிருந்தினர்க்கு மனமுவந்து உண்ணஉதவுதல் ஆகிய ஐவகைவேள்விகளையும் விருப்புடன் செய்யும் முதிர்ந்தஅறிவு உடையவர்கள் வாழும் கீழ்வேளூர் அருள்தரு வாலமுருகனே! சிறுபறை முழக்குக. முத்திப்பேறு அருளும் சிவபிரானுக்கும் உத்தமியாகியஅவன்மனைவிக்கும் மகனே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : வேள்வித்தீயின் ஏழுநாக்குகள் : இரணியை, கனகை, இரத்தை, கிருட்டிணை, சுப் பிரபை, அதிரத்தை, வெகுரூபை என்பார் தத்துவப்பிரகாச உரையாசிரியர்.

84. வெல்லும் அருந்திறல் மொய்ம்(பு)உள தானவர்
வெய்ய நிசாசரராம்
மேவிய வாள்அர(வு)அஞ்சிட அதிர்இடி
மிக்கமு ழக்(கு)எனவும்
சொல்லும் அருந்தவ முனிவரர் யோகிகள்
சுரர்இனம் அன்பர்எனும்
தோகைஇனம் பெரி(து)ஓ கையுறும்புயல்
தொக்கமு ழக்(கு)எனவும்
மல்அடு திண்புய மாயவன் வேதன்
வலாரி பெறும்பெரிய
வாழ்வுத ரும்திரு மங்கல பேரிகை
மன்னுமு ழக்கெனவும்
முல்லைம ணம்கமழ் கீழ்வேளூரன்
முழக்குக சிறுபறையே
முத்தி அருள்சிவன் உத்தமி புதல்வன்
முழக்குக சிறுபறையே. ( 7

**குறிப்புரை** : மொய்ம்பு= வலிமை. தானவர்= அசுரர். நிசாசரர்= இரவில் சஞ்சரிப்பவர் வாள் அரவு= கொடிய பாம்பு. அதிர்= பெருமுழக்கம் செய்யும். சுரர்= தேவர். தொகை இனம்= கூட்டத்தவர். பெரிய தோகை இனம்= நீண்ட தோகையுடைய மயிலினம். உறு= காணஅடைந்த. தொக்க= ஒன்றுசேர்ந்த. மல்அடு தண்புய மாயவன்= மற்போர் வல்லவலிய தோள்கள் பெற்ற திருமால்

**பொழிப்புரை** : முல்லைமலர்களின் மணம்கமழும் கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானே! பேராற்றலுடன் வெல்லும்வலிமையோடு இரவில்சஞ்ரிக்கும் அசுரராகிய கொடிய பாம்புகள் அஞ்சுமாறு பெருமுழக்கம் செய்யும் இடியின்முழக்கம்போன்றும்; தவத்தில் புகழ்பெற்ற முனிவர்கள், யோகிகள், நிலவுலகவர், அன்பர்கூட்டத்தினர், பெரியதோகையுடைய மயில்கள் ஆகியோர் கண்ட ஒன்றுகூடிய மேகத்தின் முழக்கம்போலவும்; மற்போர் வல்லவலிய தோள்களுடைய திருமால், நான்முகன், இந்திரன் ஆகியோர்பெறும் பெரியவாழ்வினை நிலையாகத் தரும் மங்கலபேரிகையின் முழக்கம் போல்வும் சிறுபறைமுழக்குக. முத்திப்பேறுஅருளும் சிவபிரான், அவன்மனைவியாகிய உத்தமி ஆகிய இருவர்க்கும் மகனே! சிறுபறை முழக்கியருள்க.

85. நிச்சயம் உஞற்றிய பதவியும் வீடு
நிகழ்த்(து)அரு நூல்பலவும்
நித்தம்மு ழங்கவும் அன்பர்கள் தோத்திரம்

நின்றுமு ழங்கிடவும்
அச்சமில் மாதவ நீதி முழக்கவும்
அம்பர உம்பர்மகிழ்
ஆகுதி வேள்விள லாமும் முழங்கவும்
அசபை முழங்கிடவும்
எச்சம்இல் சோடச தானம் ..............................................
............................முழங்கவும்
எங்கணும் மல்கிய தருமம் முழங்கவும்
இசைகள் முழங்கவுமே
முச்சகம் மெச்சிய கீழ்வே ளூரன்
முழக்குக சிறுபறையே
முத்தி அருள்சிவன் உத்தமி புதல்வன்
முழக்குக சிறுபறையே. ( 8 )

**குறிப்புரை** : நிச்சயம் உஞற்றிய= உறுதியாகச்செய்த. பதவி= இந்திரன், நான்முகன்,திருமால் முதலிய இறையவர்பதங்கள். வீடு நிகழ்த்து= வீடுபேறுதரும். தோத்திரம்= துதி. அம்பர உம்பர்=

வானுலகத்தேவர். ஆகுதி= ஓமப்பலி. அசபை= அசபா மந்திரம். எச்சம்= குறைவு. சோடச தானம்= பதினாறுவகைத் தானங்கள். மல்கிய= பெருகிய. முச்சகம்= சுவர்க்கம், பூமி, நரகம் ஆகிய மூவுலகு. மெச்சிய= புகழ்ந்த.

**பொழிப்புரை** : இந்திரன் முதலிய பதவிகளையும் வீடுபேற்றையும் அடைய உறுதியாகச் செய்தடைய வழிகூறும் நூல்கள்பலவற்றையும் நாள்தோறும் முழங்கவும், அடியவர் துதிகளை நின்றபடி முழங்கவும், யார்க்கும் அஞ்சாது மாதவத்தோரின் நீதிமுழங்கவும், வானுலகத் தேவர்கள் மகிழும் ஓமப்பலியுடன் கூடிய வேள்விகள் முழங்கவும், அசபாமந்திரம் முழங்கவும் குறைவின்றிப் பதினாறுவகைத் தானங்கள் முழங்கவும், ............................ பெருகியதருமங்கள் எவ்விடத்தும் முழங்கவும், இசைப்பாடல் முழங்கவும் உள்ளதும், இம்முழக்களால் மூவுலகும் பாராட்ட உள்ளதும் ஆகிய கீழ்வேளூரில் எழுந்தருளியுள்ள அருள்தரு வாலமுருகப்பெருமானே! சிறுபறை முழக்குக. முத்திப்பேறு அருளும் சிவபிரானுக்கும், உத்தமியாகிய அவன்மனைவிக்கும் தோன்றிய மகனே! சிறுபறை முழக்குக.

**விளக்கம்** : ஓமம்= வேள்வித்தீ. பலி= இடும்நெய்முதலியன. அசபை : " குண்டலி அதனில் கூடிய அசபை, விண்டெழு மந்திரம் "( விநாயகர் அகவல் ). பதினாறுவகைத் தானங்கள் : பசு, யானை, குதிரை, சாலக்கிராமம், எருமை, தேர், வீடு, படுக்கை, நிலம், வித்தை (கலை), பெண், இரத்தினம், வேலைகாரி, பொன், எள், அக்ராகாரம்என்பன. இவற்றை வேறுவகையாகக் கூறுவாரும் உளர்.

86. **சந்தவிருத்தம்**

வாரைஅலைத்த பயோதரம்மல்செயும் மதகளிறே
மாசறு பொற்கலை மேவுநுசுப்பு மிருகபதியே
தாரணிமெச்சிய சாயல்களிப்புறழ் வனமயிலே
சாரநிரப்புவ தாகும்அல்கல்திகழ் வரிஅரனே
நேர்இவையின்பகை தீரஉமக்(கு)இயல் அவுடதம்யான்
நேர்வன்எனக்குற மாதுவசப்பட மொழிவிரகால்
சேரும்எழில்கும ரேசன்முழக்குக சிறுபறையே.
சீதளசித்திர கூடன்முழக்குக சிறுபறையே.

**குறிப்புரை** : வாரை= நீரை, அலைத்த= அலையச்செய்த. பயோதரம்= கடல். மல்செயும்= போர்செய்யும். பொற்கலை= பொன்னாடை. நுசுப்பு= இடுப்பு. மிருகபதி= ஆண்சிங்கம். சாயல் களிப்பு= அழகும் மகிழ்ச்சியும். உறழ்= பெருகிய. வனமயில்= அழகிய மயில்.சாரம்= பயன். நிரப்புவதாகும்= முழுமையாகத்தர. அல்கல்திகழ்= தங்கிவிளங்கும். வரி= உயர்ந்த. அரனே= சிவமே. நேரிவையில்= மலை போன்ற. பகை= வினைப்பகை. இயல்= தகுதி. அவுடதம் யான்ஆவேன்= மருந்து நானாவேன். விரகால்= உணர்வால். சேரும்= வள்ளிநாயகியை அடையும். சீதள சித்திர கூடன்= குளிர்ச்சிதரும்பொன்னம்பலசிவனே

**பொழிப்புரை** : நீரைஅலைக்கும் கடலில் சூரனுடன் போர்செய்யும் மதமுடையஆண்யானையே ! குற்றமில்லாத பொன்னாடையை இடுப்பில்உடுத்த ஆண்சிங்கமே! உலகம் புகழும் அழகுடன் மகிழ்ச்சி வடிவான அழர்கியமயிலாக விளங்குகிறவனே! வாழ்வின்பயனை முழுதும்தர, இங்குத்தங்கி விளங்குகிற உயர்ந்த சிவபிரானே! மலைபோன்ற உனதுபகையாகிய வினை- பிறப்புத் தீர - தக்கமருந்துநான் என்றுவள்ளி தன்வசப்படக்கூறிய உணர்வால் அவளை அடையும் அழகிய குமரேசனே! சிறுபறை முழக்கியருள்க. நினைவார்க்குக் குளிர்ச்சிதரும் தில்லைப் பொன்னம்பல சிவமே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : கடற்கண் போர்செய்ததைச் சூரபன்மனுடன் கடலில் போரிட்டதைக் கந்தபுராணத்தாலும், " கடல்சுவற வேல்எறிந்ததை "திருவிளையாடற்புராணத்தாலும் அறியலாம். முருகனும்தானும் வேறில்லை என்றுசிவபிரான் "அவனும் யாமும் வேறல்லம் " என்று கந்தபுராணத்தில் கூறுவதால் முருகனைச் " சீதள சித்ரகூடன் " என்றார்.

87. வான்உறும்ஒப்பில் அநேகஉடுக்கணம் மகிழ்பெறவே
வாழ்வுமிகுத்திடும் ஆரல்மலர்க்குழல் மணிநகையார்
பீனதனத்(து)ஒழு(கு) ஆரமுதச்சுவை பெருகியபால்
பேதம்இல்பெட்(பு)இனி தாகஅருத்திய ருசியினுமே

மான்உதரத்திடை மேவுசிறப்(பு)உள மடமகளார்
வாசனைமொய்த்(து)அலர் பூநிகர்கைத்தலம் இடுதினைமா
தேன்நுகர் துப்(பு)உறழ் வாயன்முழக்குக சிறுபறையே
சீதளசித்திர கூடன்முழக்குக சிறுபறையே. ( 10 )

**குறிப்புரை** : அநேக உடுக்கனம்= மிகப்பல விண்மீன்கூட்டம். ஆரல்= கார்த்திகைப்பெண்டிர்.பீனம்= பருத்த. பேதம்இல் பெட்பு= வேறுபாடில்லாத அன்பு. உதரம்= வயிறு. மடமகளார்= இளைய வள்ளிநாயகி. மொய்த்து= மிக்கு. பூநிகர் கை= மலர்ஒத்த கை. துப்பு உறழ்= பவளம் போன்ற.

**பொழிப்புரை** : வானில் பொருந்திய ஒப்பற்ற அநேகவிண்மீன் கூட்டம் மகிழ, அவற்றின் வாழ்வை மிகுவிக்கும் கார்த்திகைப்பெண்டிராகிய மலர்சூடிய கூந்தலும் அழகியபுன்முறுவலும் கொண்டவர்கள், தமதுபருத்தமுலைகளில் ஒழுகிய மிக்கஅமுதச்சுவை பெருகிய பாலினை வேறுபாடில்லாத அன்புடன் ஊட்டப்பருகிய சுவையைக்காட்டிலும், மானின் வயிற்றில்பிறந்த இளைய வள்ளிநாயகி தனது நறுமணம்மிக மலர்ந்த பூப்போலும்கையால்தந்த சிறப்புடையஇனிய தினைமாவும் தேனும் உண்ட பவளவாயனே! சிறுபறை முழக்குக. நினைவார்க்குக் குளிர்ச்சிதரும் தில்லைப்பொன்னம்பல சிவனே! சிறுபறை முழக்கியருள்க.

**விளக்கம்** : கார்த்திகைப் பெண்டிர், தம்மனம் விரும்பித்தந்தது முலைப்பால். ஆனால் முருகன் தானேவிரும்பிச் சென்று உண்டது வள்ளிதந்த தேனும் தினைமாவும். விரும்பிவந்து தந்ததைக் காட்டிலும், விரும்பிச்சென்று உண்டதால் முன்னதினும் பின்னது சிறந்தது என்க.

### 10. சிறுதேர்ப் பருவம்

88. தலைநிமிர வேய்ந்ததண் பாசிலைத் தும்பைஅம்
தார்ச்சூர பன்மன்வன்மத்
தகுஅக் கடல்தானை உடன்உடல் தானைவிண்
தாவும் துரங்கவெள்ளம்
மலைநிக ரும்ஆழிஅம் தேர்வெள்ளம் அறைகூவி
மலைகின்ற போர்க்களத்தின்
மத்தகச முடித்துரக முடியாகவும் கலினவா
மாவின்நெடிய முடியாகவும்
.....................................................................................................................
.....................................................................................
கொடிகொள்தேர் முடிகொடிய யானைமுடி ஆகவும்
குருதிஎழு கடலாகவும்
சிலைமருவும் ஒருபகழி தொடுபதரி வனவீர
சிறுதேர் உருட்டியருளே
திருமால் மகட்(கு)இனிய முருகா புகழ்க்குமர
சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : தலை நிமிர= பெருமை உயர. வேய்ந்த= சூடிய. பாசிலைத் தும்பை= பசியதும்பை இலை. அம்தார்= அழகியமாலை. வன்மம்தகு= பகைக்குப் பொருத்தமான. தானை உடன்உடல்= படையுடன் சினந்த. துரங்கம்= குதிரை. வெள்ளம்= பேரெண்ணிக்கை. அம்ஆழி தேர்= அழகிய சக்கரமுடைய தேர். அறைகூவி= போரிட அழைத்து. மலைகின்ற= போரிடும். மத்தகெச முடி= மதமுடைய யானையின் தலை. துரகமுடி= குதிரையின் தலை. கலினம்= கடிவாளம். வாமா= தாவிச்செல்லும் குதிரை. முடி= பிடரிமுடி. தேர்முடி= உச்சி. குருதி எழுகடல்= இரத்தப்பெருக்குஆகிய ஏழுகடல். சிலைமருவும் ஒருபகழி= வில்லில் பூட்டிய ஒருஅம்பு. தொடு= ஏவிய. திருமால் மகள்= வள்ளிநாயகி.

**பொழிப்புரை** ; தனது பெருமை உயரும்வகையில் பசியதும்பை இலையாலான மாலையணிந்த சூரபன்மனுடன் சேர்ந்த பகைவர்க்குப்பொருத்தமான கடல்போன்ற படையில் உள்ள சினமுடைய மிகஉயரத்தாவும் பேரெண்ணிக்கையுடைய குதிரைப்படை, பெரியசக்கரங்கள் பெற்றதும் மலையைஒத்ததும் ஆகிய தேர்ப்படை முதலியன அறைகூவி அழைக்கின்ற அந்தப் போர்க்களத்தில், மதமுடைய

யானையின்தலை குதிரையின் தலையாகவும், கடிவாளமுடன் தாவிச்செல்லும் குதிரைகளின் நீண்டபிடரிமுடியாகவும்..........................................கொடிகள்கட்டிய தேர்களின் உச்சி யானையின் தலையாகவும், பெருகிய குருதி ஏழுகடலாகவும் ஆகுமாறு தன்வில்லில் ஒற்றை அம்பினைப் பூட்டியஎய்த இலந்தைவன வீரனே! சிறுதேர் உருட்டியருள்க. திருமாலின் மகளாகிய வள்ளிக்கு இனியமுருகனே! புகழ்வாய்ந்த குமரனே! சிறுதேர் உருட்டியருள்க.

**விளக்கம்** : குதிரைப்படை, யானைப்படை, தேர்ப்படை கூறியதன்மூலம் இனமான காலாட்படையைப் பெறவைத்தார். தும்பைசூடிப் பெரும்போர் செய்வதை தும்பைத்திணை என்பர்.

" அதிரப்பொருவது தும்பை " ( புறப்பொருள் வெண்பாமாலை )

" மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்று தலையழிக்கும் சிறப்பிற்று என்ப " ( தொல்.1016 )

89. மங்காத பெருவிறல் கடல்அவுணர் வரிசிலையின்
வாங்குநெடு நாணிஅறவும்
வடமாக அச்சிலைகள் பாய்பரித் திரள்பூண்ட
வலியமணி நுகம்அதாக
பொங்(கு)ஆழி கேடகம் பெயரும்உருள் ஆகவிடு
பொருபடைக் கலன்எலாமும்
பொன்றாக் கலம்ஆகஇருள்செறிந் தன்னஉடல்
பொழியஇழி குருதிஈட்டம்
தங்(கு)ஆழி ஆர்இனிது சுழலவிடு நெய்எனத்
தகுவர்செங் குடுமிமுடிகள்
தடைபடா(து) உடைபடும் தெங்கின்வன் காய்எனத்
தடநெடும் தேர்நடாத்தும்
சிங்கார சங்கிராம சேய்பதரி வனவேல
சிறுதேர் உருட்டியருளே
திருமால் மகட்(கு)இனிய முருகா புகழ்க்குமர
சிறுதேர் உருட்டியருளே. ( 2 )

**குறிப்புரை** : விறல்= வீரம். கடல்அவுணர்= கடல்ஒத்த அளவற்ற அசுரர்கள். வாங்குசிலையின் வரிநெடு நாணி= வளைந்த வில்லில் இழுத்துக்கட்டப்பெற்ற நாண் - கயிறு. அறவும்= அறுந்துபோக. அச்சிலைகள் வலியமணி நுகமாக நாணி பாய்பரித்திரள் பூண்ட வடமாக என்க. மணி நுகமாக= அழகியநுகத்தடிகளாக. பூண்ட வடமாக= கட்டஉதவும் கயிறாக. கேடகம் பொங்கு ஆழி பெயரும் உருள் ஆக என்க. கேடகம்= கேடயம். பொங்கு ஆழி= பெருமையுடைய தேர். பெயரும் உருள்= சுழலும் சக்கரம். விடு= எறிந்த. பொன்றாக் கலம்ஆக= சிதையாத படைக்கலன்ஆக. பொழிய இழி= சொறிய வடியும். குருதிஈட்டம்= இரத்தப்பெருக்கு. ஆழிதங்கு ஆர்= தேரில் பூட்டப்பட்ட சக்கரம். நெய்= எண்ணெய். தகுவர்= அரக்கர். குடுமி செம்முடிகள்= முடியுடன்கூடிய சிவந்த தலைகள். தடைபடாது= இடையீடின்றி. வன் தெங்கின்காய்= முற்றிய தேங்காய். தடநெடும்= பெரிய உயரமான. சிங்கார= அழகனே. சங்கிராம சேய்= போர்வல்ல முருகனே.

**பொழிப்புரை** : கடல்போன்று குறையாத பெருவீரமுடைய அளவற்ற அசுரர்கள் ஏந்திய வளைந்த வில்லைஇழுத்துக்கட்டிய கயிறுஅறுந்துபோக, நாண்அறுந்ததால் நிமிர்ந்த வில்லினைப் பாய்ந்துசெல்லும் குதிரைகள் பூட்டப்பெற்ற வலிமையான அழகிய நுகத்தடியாகக்கொண்டு, கேடயங்களைப் பெருமைபொருந்திய தேர்க்கு உருளும் சக்கரங்களாகக் கொண்டு, எறிந்த சிதையாத படைக்கலன்களால் இருள்செறிந்தாற்போன்ற உடம்புசொறிய வடியும் மிக்க குருதியை, தேரில்பூட்டியசக்கரம் இனிது உருண்டோட இட்ட நெய்யாகக்கொண்டு, தன்னை எதிர்த்துவரும் அசுரர்களின் இரத்தத்தால் முடியுடன் சிவந்த அவர்களின் தலைகளை இடையீடுஇன்றி உடைபடும் முற்றியதேங்காய்களாகக் கருதித் தனது பெரியஉயரமான தேரினைச் செலுத்தும் அழகனே! போர்வல்ல முருகனே! சிறுதேர் உருட்டியருள்க. திருமாலுக்கு மகளாகிய வள்ளிநாச்சியாருக்கு இனியமுருகனே! புகழ்வாய்ந்த குமரனே! சிறுதேர் உருட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் இயைபு உருவகவணி.

90. வாரோட நேரோட வளரும்மலை இணையாகும்
வண்கரம் தாங்குமுலைமேல்
மறஅவுணர் குலமாதர் அழுகணீர் ஓடிஅவண்
மாய்அவுணர் கையின்வீழ்ந்து
பாரோட அசுரர்தம(து) ஊரோடு வாழ்வுஎலாம்
பார்மகட்(கு) என்றுதானம்
பண்ணுதற்(கு) அவர்மாதர் விடுகரக நீர்செலும்
பரி(சு)உறு களத்தில்அவர்தம்
போரோட விறலோடு பேரோட முன்புள்ள
புகழோட மதிமாழ்குறும்
புகரோட அமரர்உறு சிறைஓட அஞ்சாது
பொய்யாத வெய்யோன்விடும்
தேரோட வந்தகன பதரிவன வன வேலவன்
சிறுதேர் உருட்டியருளே
திருமால் மகட்(கு)இனிய முருகா புகழ்க்குமர
சிறுதேர் உருட்டியருளே.

**குறிப்புரை** : வளரும் மலைக்கு இணையாகும் வண்கரம் தாங்குமுலை மேல் வார்ஓட என்க. வார்ஓட= முலைக்கச்சுக் குலைய. வண்கரம்= வளமான ஒளி. தாங்கு= பெற்ற. மற அவுணர்= வீரமுடைய அசுரர். அவண் மாய்= போர்க்களத்தில் இறந்த. பார் ஓட= நிலத்தில் ஓட. கரகநீர்= கமண்டலத்தண்ணீர். செலும் பரிசுஉறு= ஊற்றும் தன்மையுடைய. களம்= போர்க்களம். போர் ஓட= போர் ஓடிஒழிய. விறலோடு போராட முன்பு உள்ள புகழ்ஓட= வீரத்துடன் போரிட்டமுன்னைப்புகழ் கழிய. மதிமாழ்குறும் புகர்= மனம் மயங்கும் குற்றம். அமரர் உறு சிறைஓட= தேவர்கள் அடைபட்ட சிறைநீங்க. வெய்யோன்= சூரியன். கனபதரி வனம்= இலந்தை மரங்கள் செறிந்த கீழ்வேளூர்.

**பொழிப்புரை** : வீரமுடைய அசுரர்குலப்பெண்டிர், தம்கணவன்மார் போர்க்களத்தில் இறந்த பெருவருத்தத்தால் வளர்கின்ற மலைகளுக்கு ஒப்பாக முன்புவிளங்கிய வளமான ஒளிபொருந்திய முலைகளின்மேல் கட்டியகச்சு நிலைகுலைய - தளர; அழுததால் பெருகிய கண்ணீர்ஓடி அப்போர்க்களத்தில் இறந்த கணவன்மார் கையில் விழுந்து நிலத்தில்ஓட அது, அவ்வசுரர்கள் தமது ஊருடன் வாழ்வையும் நிலமகளுக்குத் தானம் செய்யும்பொழுது ஊற்றும் கமண்டல நீராக விளங்க; போர்முடிய, வெற்றியுடன் முன்புபெற்ற புகழ்ஒழிய, மனம் மயங்கும் குற்றம் ஓட,தேவர்கள் அடைபட்டிருந்த சிறை நீங்க, யாருக்கும் அஞ்சாமல் சூரியன் செலுத்தும் தேர்ஓடத் தோன்றிய வேலனே! சிறுதேர் உருட்டியருள்க. திருமால்.மகளாகிய வள்ளிநாச்சியாருக்கு இனிய முருகனே! புகழ்வாய்ந்த குமரனே! சிறுதேர் உருட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொல்பின்வருநிலையணி.

91. கல்அனைய நெஞ்சத்து வெஞ்சமத்(து) அஞ்சாத
கார்அவுண ரின்தலைவராம்
காளையரும் மீளிஅம் தானையரும் எதிரிடக்
கறுவுறும் பூதவீரர்
வில்உமிழும் வாளிஅவ் அசுரர்தோள் மார்புகரம்
இருகண்ட துண்டம்ஆக
மேவும்அவ் அங்கம்உறு மணிகளும் பின்னமாய்
விழுமுறைமை கழனிஉழவோர்
நெல்அரிய வனசமும் பானலும் குவளையமும்
நிலைகுலைய அரிபடுவதோர்
நீர்மைஎன வானவர்கள் ஓதக்கிர வுஞ்சனொடு
நெடியதா ருகனைவெல்லும்
தில்லைநகர் நிகரான பதரிகா னன்வேல

சிறுதேர் உருட்டியருளே
திருமால் மகட்(கு)இனிய முருகா புகழ்க்குமர
சிறுதேர் உருட்டியருளே. ( 4 )

**குறிப்புரை :** அனைய= ஒத்த. சமம்= போர். கார் அவுணர்= ஆறாச்சினமுடைய அசுரர். மீளியர்= தலைமையுடையவர். தானையர்= படைவீரர்கள், எதிரிட= எதிர்க்க. கறுவுறும்= சினம்மிக்க. வாளி= அம்பு. கண்டதுண்டம்= சின்னாபின்னம். அங்கம்= உறுப்பு. வனசம்= தாமரைமலர். பானல்= கருங்குவளை மலர். குவலையம்= செங்குவளைமலர்கள். ஓதக்கிரவுஞ்சன்= கடல்போன்ற படையுடைய கிரவுஞ்சன். நெடிய= உயர்ந்த.

**பொழிப்புரை :** கல்போன்ற மனம்காரணமாகக் கொடியபோருக்கு அஞ்சாதவராய், இரவில் அலைபவராய், ஆறாச்சினமுடையவராய் விளங்கும் அசுரர்களின் தலைவர்களாகிய காளையரும், படைவீரர்களும் எதிர்க்க, அதனால் சினம்மிக்க பூதகணவீரர்களின் விற்கள் ஏவும்அம்புகள், அசுரர்களின் தோள்கள், மார்பு, கைகள் முதலியவற்றை மிகுந்தஅளவில் சின்னாபின்னம் ஆக்க, அதனால் அசுரர்கள் தம் உறுப்புகளில் அணிந்த அணிகளும் பின்னப்பட்டுக் கீழே விழுவது; நன்செய்நிலத்தை உழும்உழவர்கள், முற்றியநெற்கதிர்களை அரியும்போது உடனிருந்த தாமரை, கருங்குவளை, செங்குவளை மலர்களும் தம்நிலைகுலைந்து அரிபட்டுக் கீழேவிழும் தன்மைபோல்விளங்க; கடல்போன்ற கிரவுஞ்சன், உயர்ந்த தாருகன் ஆகியவர்களை வெல்லும் தில்லைநகர் ஒத்த இலந்தைவனவேலவனே! சிறுதேர் உருட்டியருள்க. திருமாலின் மகளாகிய வள்ளிநாயகிக்கு இனிய முருகனே! புகழ்வாய்ந்த குமரனே! சிறுதேர்உருட்டியருள்க.

**இலக்கணக்குறிப்பு :** இச்செய்யுள் இருஉவமையணிகளுடையது.

92. பாய்மத மாத்த வடுப்பற்ற வயிறுகொப்
பரைகுருதிஉலைநீர்ப்பதம்
பரிய உரல்வெண் கோ(டு)உலக் கைகள்வாய்ப்
பல்அரிசி மாஇடித்து
மாஇரத அச்சுவிற காய்விழிக் கனல்கொளுவி
வாள்அசுரர் நெடியதோள்கள்
வன்துடுப்(பு) இட்(டு)இனிய கூழாக்கி உடைதலையின்
வருமூளை நெய்அளாவிக்
கூய்அலகை பந்திஉற்(று) அணிமுடிக் கிண்ணங்கள்
கொண்(டு)உண்டு தேக்கெறிந்து
கொண்டாடி மண்டுசெங் களவேள்வி யும்செய்து
குரவைஅம் கூத்தும்ஆடச்
சீயமுக னைப்பொருத பதரிவன ரணதீர
சிறுதேர் உருட்டியருளே
திருமால் மகட்(கு)இனிய முருகா புகழ்க்குமர
சிறுதேர் உருட்டியருளே. ( 5 )

**குறிப்புரை :** மதம்பாய் மாத்த= மதநீர்பெருகும் யானையின். வடுப்பெற்ற= புண்பெற்ற. கொப்பரை வயிறு= கொப்பரைஒத்தவயிறு. குருதி உலைநீர்= இரத்தம்ஆகிய உலைநீர். பதம்பரிய= பக்குவத்தில் ஒழுக. வெண்கோடு உலக்கைகள்= வெண்மையான தந்தமாம்உலக்கைகள். மா இரத அச்சு விறகாய்= பெரியதேரின் அச்சுவிறகாக. காய்விழிக்கனல் கொளுவி= சினம்மிக்க விழிகளின் தீயைப் பற்றவைத்து. வாள் அசுரர்= கொடிய அசுரர்கள். உடைதலை= பிளந்த தலை. அளாவி= கலந்து. அலகை கூய்= பேய்களைக் கூவிஅழைத்து. பந்திஉற்று= வரிசையாக இருந்து. முடிக்கிண்ணங்கள் - கிரீடமாம் கிண்ணங்கள். தேக்கெறிந்து= ஏப்பமிட்டு. மண்டு= மிகக்குடித்த. செங்களவேள்வி= சிறந்த போர்க்களவேள்வி ( வாகைத்திணைத் துறைகள் முப்பத்திரண்டில்ஒன்று, பேய்கள் வயிறாரப்புலால் - கஞ்சிபருகிக் கூத்தாடுவதைக்கூறுவது ) சீயமுகன்= சிங்கமுக அசுரன். ரணதீர= போர்வீரனே.

**பொழிப்புரை :** மதநீர் பெருகும் யானையின் வடுப்பட்ட கொப்பரைபோன்ற வயிற்றிலிருந்து ஒழுகும் கொதிநீர்ப்பதக்குருதியில், பெரியஉரலில் வெண்மையான தந்தமாகிய உலக்கையால்யானையின்

பற்களாகிய அரிசியை மாவாகுமாறு இடித்து, பெரியதேரின் அச்சினை விறகாகக் கொண்டு, வீரர்களின் கண்களில் வெளிப்பட்ட தீயால் அனல்மூட்டி, கொடிய அசுரர்களின் நீண்டதோள்களுடன் கூடிய கையைத்துடுப்பாக இட்டுக்கிண்டி இனிய கூழாக்கி, உடைந்த தலையில் வெளிப்படும் மூளையை நெய்யாக அதில்கலந்து, பேய்களைளல்லாம் அழைத்து வரிசையாக இருத்தி, அழகியகிரீடங்களாகிய கிண்ணத்தில் பெற்று ஏப்பம்விடமிகப்பருகிக் கொண்டாடும் களவேள்வி யுடன், குரவைக்கூத்தும் ஆடும்வகையில் சிங்கமுகாசுரனுடன் போரிட்டுவென்ற இலந்தைவனப் போர்வீரனே! சிறுதேர் உருட்டியருள்க. திருமாலின் மகளாகிய வள்ளிநாயகிக்கு இனியவன்ஆகிய முருகனே! புகழ்வாய்ந்த குமரனே! சிறுதேர் உருட்டியருள்க.

93. கள்உகு நறுந்தெரியல் மகதியாழ் நாரதன்
காசறு மகத்(து)அகத்தில்
கடல்வடவை நீல்நிறப் படிவத்த(து) எனவந்து
கதறுகுரல் இடிஆர்ப்பினால்
ஒள்ஒளிய அண்டம்வெடி பட்டுவெளி யாகநெடி(து)
ஓடும்விசை ஓதைஅதனால்
ஓங்கிய பிறங்கல்கள் கறங்(கு)ஆக விழிசிதற
உறுபொறியின் உலகுவாட
வெள்ளம்எழு விதமும்உடை படஅடையும் வன்தகரை
விமலன்நீ உந்துகஎன்ன
வீரன்உய்த் திடவந்த ஆட்டைவிளை யாட்டின்நெடு
விண்திசை எலாம்நடத்தும்
தெள்அமுதின் உற்பவித்(து) இயல்பதரி வனஅனக
சிறுதேர் உருட்டியருளே
திருமால் மகட்(கு)இனிய முருகா புகழ்க்குமர
சிறுதேர் உருட்டியருளே. ( 6 )

**குறிப்புரை** : கள்= தேன். நறுந்தெரியல்= மணமுடைய மாலை. காசறு= குற்றமற்ற. மகத்து அதனில்= வேள்வியில்.கடல் வடவை= மிகுந்த வடவைத்தீ. படிவத்தது= வடிவமுடன். இடி கதறு குரல் = இடிபோல் முழங்கிய குரல். ஒள் ஒளிய= மிக்கஒளிமயமான. வெளி= வெட்டவெளி.. விசை ஓதை= வேகத்தால் ஏற்பட்ட ஒலி. பிறங்கல்= மலை. கறங்கு ஆக= காற்றாடியாகச் சுழல. பொறி= தீப்பொறி. அகன்ற கரைஅடையும்= அகலமான கரையால் தடுக்கப்பெற்ற. எழுவிதம்= பலவகை. விமலன்நீ= மலமில்லாதவனாகிய நீ. உந்துக என்ன= ஏறிச்செலுத்துக.என்று. வீரன்= வீரவாகுத் தேவர். உய்த்திட= உன்னிடம் தர. நடத்தும்= செலுத்தும். அமுதின் இயல்= அமுதகுணமுடன் அருளும். அனக= கடவுளே.

**பொழிப்புரை** : தேனொழுகுவதும் மணமிக்கதுமான மாலையணிந்து மகதியாழ் இசைக்கும் நாரதர் செய்த குற்றமற்ற வேள்வியில், மிகுந்த வடவைத்தீ வடிவுடன் வந்து, தனது இடிபோன்ற பெருங்குரலினால் ஒளிமயமான அண்டம்வெடிபட்டு வெட்டவெளியாக, மிகமிகவேகமாக ஓடும் ஒலியால் உயரமான மலைகளும் காற்றாடிபோல் சுழல, விழிகள் சிதறிய தீப்பொறியால் உலகம்வாட, அகலமான கரையால்தடுக்கப்பெற்ற வெள்ளத்தின்கரை பலவிதமாகஉடைய, வந்த ஆட்டுகிடாயை , மலமில்லாத நீ செலுத்துக என்று வீரவாகுத்தேவர் தர, அந்தஆட்டில் ஏறி விளையாட்டாக எட்டுத்திசைகளிலும் செலுத்தியவனும், தெளிந்த அமுதகுணத்துடன் அருள்கிறவனும் ஆகிய இலந்தைவன இறைவனே! சிறுதேர் உருட்டியருள்க. திருமாலின் மகளாகிய வள்ளிநாச்சியாருக்கு இனிய முருகனே! சிறுதேர் உருட்டியருள்க.

94. ஐயநுண் இடைகொம்பர் களபமுலை அக்கொப்பின்
அலர்கன்னி காரமுகையாம்
அணிமுலைக் கண்கள்அவ் அரும்(பு)உறு சுரும்(பு)ஆகும்
அழகுதர ரோமரேகை
மையில்முகை நின்றுவரு தொருதாரை நாபியதின்
வருதாரை மருவுசுழியாம்
வளர்அல்குல் மதுநிறையும் வாவிஅதில் விளையாடு
வாஞ்சைஉண்(டு) என்றுதழையும்

துய்யதண் டலையின்மலர் கொய்யும்மட வார்கள்பொன்
துகில்பிடித்(து) ஈர்க்கும்அளவில்
தோகையர்கள் ஆடவர்தம் அயல்நின்று நாணிமகிழ்
தூயநகை ஆயநிலவால்

*******************************************************************************************

*******************************************************

*********************************************************************************

********************************************************** ( 7
)

**குறிப்புரை** : ஐய நுண்கொம்பர் இடை= வியக்கத்தக்க நுட்பமான கொம்புஒத்த இடுப்பு. கொப்பு= மரக்கொம்பு.. கன்னிகார முகை= கோங்கின் மொட்டு. அணிமுலைக்கண்கள்= அழகிய முலைக் கண்கள். அவ்அரும்பு உறுசுரும்பு= அந்தமுகையில் மொய்க்கும் வண்டுகள். மையின் ரோமரேகை=கருமையான உரோமக்கோடு. ஐ ஆர்= அழகிய பூவின்காம்பு. நாபி அதின் வரு= கொப்பூழிநின்று வரும். தாரை மருவு=நீர்நிறைந்த. சுழி= நீர்ச்சுழி. வளர்அல்குல்= அகல்பெண்குறி. மதுநிறையும் வாவி=தேன்நிறை குளம். வாஞ்சை= ஆசை. தழையும்= செழித்த. தண்டலை= சோலை. அளவில்= பொழுது. அயல்= அருகில்.

**பொழிப்புரை** : இடுப்பு, வியக்கத்தக்க நுட்பமான கொம்பு, கலவைச்சந்தனம் பூசிய முலைகள் அக்கொம்பில் தோன்றிய கோங்கின்மொட்டுகள், அழகிய முலைகளின்கண்கள் அந்தமொட்டுகளில் மொய்க்கும் வண்டுகள், அழகுதரும் கருமையான உரோமப்பந்தி மொட்டுகளிலிருந்து வரும் அழகிய மலர்க்காம்புகள், கொப்பூழில் தோன்றும்சுழி, நீரில்தோன்றும் சுழிகள், அகல்பெண்குறி இன்பத்தேன் நிறைந்த குளம், அக்குளத்தில் விளையாடும் ஆசையுள்ளது என்று ஆடவர்; தழைத்த அழகிய சோலையில் மலர்கொய்யும் மகளிரின் பொன்னாடையைக் கையால்பற்றி இழுக்கும்போது அவ்வாடவர் அருகில்நின்று நாணிமகிழும் மகளிரின் வெண்மையானபற்களின் ஒளியால்.........................

**விளக்கம்** : ஆடவர் மகளிரின் ஆடையைப்பற்றி இழுத்தல் என்பதும்.அம்மகளிர் நாணி அருகில்நின்றனர் என்பதும் கலவிவிருப்பினை உணர்த்தும் மெய்ப்பாடுகள் ஆகும்.

“ உந்திச் சுழியின் முளைத்து எழுந்த
உரோமப் பசுந்தாள் ஒன்(று)இரண்டின்
அந்திக் கமலம் கொடுவருவீர்
அம்பொற் கபாடம் திறமினோ. ( கலங்கத்துப் பரணி.கடைதிறப்பு )

**இலக்கணக்குறிப்பு** : கொம்பர் - மொழி இறுதிப்போலி. இச்செய்யுள் இயைபுஉருவகவணி.

திருச்சிற்றம்பலம்